



# கதிரைமலைப்

# பேரின்பக் காதல்.

(விநாயகர்துதி.)

வேதக் கதிரைமலை வேலவரைத் தெண்டனிட்டுக
காதல்சொல்லத் தந்திமுகக் கற்பகமுங் காப்பாமே.

(சுப்பிரமணியர்துதி.)

சீராருந் தென்கதிரைச செவ்வே ளருளாலே
பாராருங் காதலிசை பாடத துணிந்தேனே.

தோத்திரமாங் காதல்தன்னிற் சொற்பிழைகள் குற்றமெல்லாந்
தீர்த்தருளச் சண்முகனைத் தெண்டனிட்டுக் கொண்டேனே.

(சிவபெருமான்துதி.)

சங்கத் தமிழ்தெரிந்த தாரணியிற் காதல்சொல்லத்
திங்கட் சடைமுடித் தேவுமருள் தந்திடுமே.

(உமாதேவியார்துதி.)

பன்னு தமிழாலே பரிந்தடியேன் காதல்சொல்ல
வன்னையுமை யென்னைவளர்த் தாதரவு செய்திடுமே.

(திருமால்துதி.)

தீதகற்றுந் தென்கதிரைச் செவ்வே ளருளதனூற
காதல்சொல்லச் செங்கமலக் கண்ணனருள் தந்திடுமே.

(பிரமன்துதி.)

பரம திருத்தமிழாற பாருலகிற் காதல்சொல்லப்
பிரமன் கருணைவெள்ளம் பெருகிவினை தீர்த்திடுமே.

(வள்ளிநாயகியார்துதி

தெள்ளு தமிழாற் சிறந்தடியேன் காதல்சொல்ல
வள்ளியம்மைத் தாயும் மனதிரக்கஞ் செய்திடுமே.

(தெய்வநாயகியார்துதி.)

நாவாலி சைந்தபுன்சொல் நானடியேன் கூறுதற்குத்
தேவானைத் தாயார் திருக்கண்ணருள் தந்திடுமே.

(இலக்குமிதுதி.)

பண்புடைய வேலர் திருப பாராட்டிக் காதல்சொல்லத்
தண்கமலப் பூமகளுந் தன்கருணை தந்திடுமே.

(சரஸ்வதிதுதி.)

கதிரைக் குருபரனைக் கைதொழுது காதல்சொல்ல
மதுரக் கவிக்கிரச வாக்குதவும நாமகளே.

(திருவேல்துதி )

பார்த்தெளியேன சொன்னதமிழ்ப் பாவினுள்ள குற்றமெல்லாந்
தீர்த்திரக்கஞ் செய்யுந் திருக்கைவே லாயுதமே.

(மயில்துதி.)

கற்றறியா மோடன் கனிந்துரைத்த புன்சொற்றனிற்
குற்றமெலாம் பார்த்தெடுத்துக் கொத்துமயில் வாகனமே.

(சேவல்துதி.)

வேலை தனிலுதவும் வேலர் திருக் காதல்சொல்லக்
கோழிக் கொடியறிந்து கூவிக்க ளித்திடுமே.

# கதிரைமலைப் பேரின்பக்காதல்.

## (தேவர்துதி)

அனைத்துயிரை யுய்யக்கு மாறுமுகன் சேவடியை
மனத்திருத்து காதலெனில் வானவர்கொண் டாடுவரே.

காதலித்துத் தேவர்தொழுங் கந்தரது காதல்சொல்லப்
பூதலத்துத் தெய்வமெல்லாம் போதநன்மை தந்திடுமே.

## அவையடக்கம்.

திருமால் மருமகனைச் செவ்வேளைப் பாடுதலால்
பெரியோ ரிகழாமற் போற்றிடுவ ரென்றெண்ணுவரே

## நூல்.

க. சீரின்ப முத்திதருஞ் செவ்வேளின் பாடல்தனைப்
பேரின்ப காதலென்று பேருலகோர் பேசுவரே.

உ. பெருவா சகமெனுமிப் பேரின்பக் காதல்தனைத்
திருவா சகமெனவுந் தேனெனவுஞ் செப்புவரே

ங. ஆரணஞ்சேர் தென்கதிரை பறுதனைப் போற்றிசெய்து
காரணஞ்சேர் பேரின்பக் காதல்தனைக் கூறலுற்றேன்.

ச பிறந்தபிறப் பெல்லாநான் பேதலித்துச் சண்முகனை
மறந்து பறந்துபட்ட மாற்றமிங்கு சொல்லலுற்றேன்.

ரு. சென்மமெடுத் தெடுத்துச் சென்றபிறப் பெல்லாநான்
கனமலை மூடிமிக்க கண்கலக்கப் பட்டுவிட்டேன்.

சா. அன்பர்தொழுந் தென்கதிரை யாண்டவரைப் போற்றாமல்
வன்பாருந் துன்ப வலைக்குளாகப் பட்டேனே.

எ. கந்தமலர்த் தென்கதிரைக் கந்தனைநான் போற்றாமல்
பந்தவினை தந்ததொல்லைப் பாசத்திற் பட்டுவிட்டேன்.

அ. திருந்துங் கதிரைமலைச் செவ்வேளைப் போற்றாமல்
வருந்தி வறுமையினால் வாட்டமிங்கு சொல்லலுற்றேன்

கூ. விண்ணோர் தொழுங்கதிரை வேலவரைப் போற்றாமல்
மண்ணாசை கொண்டுலகில் வாழ்வை மதித்துவிட்டேன்.

க0. தேவானை பங்கன் திருவடியைப் போற்றாமல்
மாபாவி யாகி வருநரகுக் காளானேன்.

கக. காக்குங் கதிரைமலைக் கந்தனைநான் போற்றாமல்
நீக்குமிழி வாழ்வை நிலையமென் றெண்ணிவிட்டேன்,

கஉ. நாயகமாந் தென்கதிரை நாதனைநான் போற்றாமல்
மாஞால வாழ்வில் மனஞ்சலித்து நின்றுவிட்டேன்.

கஙூ. திங்கள்முடி யோனுதவுஞ் செவ்வேளைப் போற்றாமல்
மங்கையர்கள் மாய வலையிலகப் பட்டுவிட்டேன்.

கச. சிங்கார லங்காரச் செல்வனைநான் போற்றாமல்
வெங்காம வெள்ள விரகவலைப் பட்டுவிட்டேன்.

கரு. விண்ணோர் தொழுங்கதிரை வேலவரைப் போற்றாமல்
புண்ணா லழுந்தும் புழுக்கூட்டை நம்பிவிட்டேன்.

கசா. கானக் குறத்தி கணவனைநான் போற்றாமல்
ஈனமுற்ற சென்மத் திடரிலகப் பட்டுவிட்டேன்

கஎ. மஞ்சார் மலரளக வள்ளிமண வாளனைநான்
நெஞ்சார வாழ்த்துகின்ற நேயந்தை விட்டுவிட்டேன்.

கஅ. தேவர்தொழுந் தென்கதிரைச் செவ்வேளைப் போற்றாமல்
தாவுகிர கப்பகையாற் றத்தளிக்கப் பட்டுவிட்டேன்.

ககூ. குமர குருபரனைக் கும்பிட்டு வாழ்த்தாமல்
திமிரக் கொடும்பிணியாற் தேகமெலி வானேனே.

உ0. வீறுபெறுந் தென்கதிரை வேலவரைப் போற்றாமல்
நாறுபுழுப் பொதிந்த நாயுடலை நம்பிவிட்டேன்.

உக. மூவர்தொழுந் தென்கதிரை முருகனைப் பாராட்டாமல்
தாவும் பலபிணியாற றத்தளிக்கப் பட்டுவிட்டேன்.

உஉ. தோத்திரஞ் செய்தாறுமுகத் தூயோனைப் போற்றாமல்
பித்தற் றுருத்திதனைப் பேணி வளர்த்துவிட்டேன்.

உஙூ. சித்திரவே லாயுதன்றன் சேவடியைப் போற்றாமல்
கத்துமறி வில்லாக் கரும்பறவை போலானேன்.

உச. சீரோங்கு தென்கதிரைச் செவ்வேளைப் போற்றாமல்
பார்வேந்தர் செய்யும் பருவிலங்கு கஞ்சிவிட்டேன்.

உரு. தேவக் கதிரைமலைச் செவ்வேளைப் போற்றாமல்
பாவப் புழுவுடலைப் பாவித்திருந் துவிட்டேன்.

உசா. வாயாரத் தென்கதிரை வள்ளலைப்பா ராட்டாமல
தாயில்லாப் பிள்ளையைப்போற் றத்தளிக்கப் பட்டுவிட்டேன்

உஎ. அருத்தியுடன் தென்கதிரை யண்ணலைப்பா ராட்டாமல்
துருத்திக் கிரைதேடித் தொல்லைவலைப் பட்டுவிட்டேன்.

௨௮. வாழுங் கதிரைமலை வள்ளலைநான் போற்றாமல்
வேழம்புசித்த விளாங்கனிபோ லானேனே.

௨௯. வீரமுற்ற சூரைவென்ற வேலவனைப் போற்றிசெய்யா
நேரமற்று வீணாய் நெடுங்காலம் போக்கிவிட்டேன்.

௩௦. தேசம் புகழ்கதிரைச் செவ்வேளைப் போற்றாமல்
ஆசையெனும் பாரவுடல் லருசிக்கண் துஞ்சிவிட்டேன்.

௩௧. சேர்ந்து சிறுதொண்டருடன் செவ்வேளைப் போற்றாமல்
பாந்தள்வாய்ப் பட்டபசுந் தேரைபோ லானேனே.

௩௨. மடலவிழும் பூங்கடம்ப மாலையனைப் பாராமல்
விடமருந்து செங்கமலம் போலமெலி வானேனே.

௩௩. குன்றெறிந்த செவ்வேற் குமரனைப் பாராமல்
கன்றிழந்த வாபோற் கதறிக் கலங்கிவிட்டேன்.

௩௪. எங்கோன் கதிரைமலை யெந்தலைநான் போற்றாமல்
வெங்கணி ராகுதொட்ட வெண்கதிரைப் போலானேனே.

௩௫. விரைகமழுந் தென்கதிரை வேலவரைப் போற்றாமல்
இரவலர்கள் சொற்பனைக்கு ஏங்கிமிகக் கெஞ்சிவிட்டேன்.

௩௬. ஏறிக் காங்குவித்து யெங்கோவைப் போற்றாமல்
ஆற்றிற் றுரும்பா யலைந்துமெலி வானேனே.

௩௭. வள்ளி மணவாளன மலர்ப்பதத்தைப் போற்றாமல்
கொள்ளித் தலையிற் குறுகெறும்பு போலானேன்.

௩௮. ஆறுமுகன் சேவடியை யன்பினுடன் போற்றாமல்
சூறைவழி பட்ட கழல்சருகு போலானேன்.

௩௯. கலைபயிலுந் தென்கதிரைக் கந்தனைப்பா ராட்டாமல்
உலையிலே மெழுகாகி யுருகி யுருகிவிட்டேன்.

௪௦. முந்திருந்த தென்கதிரை முருகனைப்பா ராட்டாமல்
பதியறி வில்லாப் படுபாவி யானேனே.

௪௧. பழிகள் தலையணையாய்ப் பாதகங்கள் பஞ்சணையாய்
விழிகள் துயின்றயர்ந்து விட்டேன் சிலகாலம்.

௪௨. அறத்தை விரும்பாமல் ஆறுமுகனைப் போற்றாமல்
மறத்தை மனதிருத்தி வாழ்ந்தேன் சிலகாலம்.

௪௩. விண்வாழ்வை நயப்பி விரும்பியே தேடாமல்
மண்வாழ்வை நயப்பி மகிழ்ந்தேன் சிலகாலம்.

௪௪. பித்தாய்ப் பிதற்றிப் பெருந்தமிழா ராய்ந்தவர்போற்
கத்திக் கதறிக் கழித்தேன் சிலகாலம்.

௪௫. மந்திரங்கள் தந்திரங்கள் மாயமருந் தானகள்ளத்
தந்திரங்கள் கற்றுச் சலித்தேன் சிலகாலம்.

௪௬. கன்னல்வயற் றென்கதிரைக் கந்தனைப்பா ராட்டாமல்
அன்னதுண்டு பின்னதுண்டென் றுமென்றலைந்துவிட்டேன்.

௪௭. மாயத் துருத்தி வளர்ப்பதற்கே யெண்ணமெண்ணிக்
காயக்கமம் பண்ணிக் கழித்தேன் சிலகாலம்.

௪௮. எள்ளளவுந் தர்ம மியற்றமன மில்லாமல்
கள்ளவினை மூடிவழி காணாமல் நின்றுவிட்டேன்.

௪௯. தவிடு பகிரவிடாத் தான்மறுகி யாசைகொண்டு
கவடு பலபண்ணிக் கழித்தேன் சிலகாலம்.

௫௦. வைப்பான தேவ வரம்பெல்லாந் தான்கடந்து
வொப்பாயம் பண்ணி யுலைந்தேன் சிலகாலம்.

௫௧. ஆசையென்னுங் கல்லாலடைத்துநெஞ்சைப் பூட்டிவைத்துத்
தேசவா சாரமதாய்த் திரிந்தேன் சிலகாலம்.

௫௨. புல்லறிவைக் கொண்டு புலைகொலையில் லாதவராய்
நல்லறிவை மீறி நடந்தேன் சிலகாலம்.

௫௩. தீதகற்றுந் தென்கதிரைச் செவ்வேளைப் போற்றாமல்
பாதகத்துக் கன்னையர்போற் பாலளித்து வாழ்ந்திருந்தேன்.

௫௪. பேய்க்கோலங் கொண்டு பெருவாழ்வுக் கொப்புவித்து
நாய்க்கோல மாகி நடந்தேன் சிலகாலம்.

௫௫. எத்திசையும் போற்றுகதி ரீசனைப்பா ராட்டாமல்
குத்திரங்கள் கற்றுக் குரைத்தேன் சிலகாலம்.

௫௬. மலஞ்சேருந் தென்கதிரை நாயகனைப் போற்றாமல்
புலன்போம் வழிவழியே போனேன் சிலகாலம்.

௫௭. பரனைப் பார்பரையைப் பங்கயக்கண் ணனையுமைமங்
கரனைச் சிறிதுமனங் காணாமல் நின்றுவிட்டேன்.

௫௮. மறையை மறையவரை மாதவத்தை வெண்ணீற்றை
மறையைத் திறம்பி மொழிந்தேன் சிலகாலம்.

௫௯. தோயங் கனல்புவிவான் றொட்டவளி யாலெடுத்துக்
காயமிது மாயமெனக் கண்டுமின்னம் வேறுபட்டேன்.

௬0. துஞ்சுவதுந் துஞ்சவுடல் சோருவதுந் துஞ்சவுயிர்
அஞ்சுவதுங் கண்டுமின்ன மாசைவலைப் பட்டுவிட்டேன்.

௬௧. ஆடுவதும் வீணு யலைவுடல் மண்ணரிக்கப்
போடுவதுங் கண்டுமின்னம் புத்திகெட்டு நின்றுவிட்டேன்.

௬௨. வாசமெல்லாஞ் சேர்த்தடைத்து வாய்பற்றி வையமிட்டுப்
பூசமெல்லாங் கண்டுமின்னம் புத்திகெட்டு நின்றுவிட்டேன்.

௬௩. வாசக் கதிரைமலை வள்ளலைப்பா ராட்டாமல்
காயக்கடு வேடர்சொன்ன கட்டளையில் நின்றுவிட்டேன்.

௬௪. கட்டிப் பிடித்திறுக்கிக் காவலிட்டு வாதபித்தம்
ஒட்டிக் கெடுப்பதுங்கண் டுள்ளமிந்து வேறுபட்டேன்.

௬௫. கூடியிருந் துண்டுசுகி கொண்டகள்ளச் சண்டனைக்கண்
டோடுவதுங் கண்டுமின்ன முள்ளத்தி னின்றுவிட்டேன்.

௬௬. சுற்றெவரும் பார்த்திருக்கத் தோன்றுமல் மெள்ளவுயிர்
அற்றதையுங் கண்டுமின்ன மாசைவலைப் பட்டுவிட்டேன்,

௬௭. காட்டில் நரியோரி கழுகுகரு நாய்விரும்பும்
ஓட்டை மலக்கூட்டை யுதவுமென்று நம்பிவிட்டேன்

௬௮. சலமும் பலநரம்புந் தங்குமுதி ரக்குடலும்
மலமும் பொதிந்தவிந்த மண்ணுடலை நம்பிவிட்டேன்.

௬௯. காலன் விரும்புங் கடும்பாசந் தான்விரும்புஞ்
சூலம் விரும்புங்கள்ளச் சூதுடலை நம்பிவிட்டேன்.

௭0. நாய்விரும்பு மோரி நரிவிரும்பும் பாறுகொடி
பேய்விரும்பு மிவ்வுடலைப் பேணி வளர்த்துவிட்டேன்.

௭௧. ஓங்கு பகடேறி யுறுமறலி தண்டதற்கு
நீங்கவழி காணுமல் நின்றுதடு மாறிவிட்டேன்.

௭௨. கந்தமலர்த் தென்கதிரைக் கந்தனைப்பா ராட்டாமல்
புத்தி விரிந்தலைந்து போனேமிக் காலமெல்லாம்.

௭௩. மெய்யாருந் தென்கதிரை வேலவனைப் போற்றுமல்
ஐயையோ வீணு யலைந்தேனிக் காலமெல்லாம்.

௭௪. கோலமெல்லாங் கெட்டுக் குலைந்துதடு மாறிநொந்து
காலமெல்லாம் வீணைக் கழித்து மனஞ்சலித்தேன்.

௭௫. ஆறுங் கதிரைமலை யற்புதனைப் போற்றாமல்
நாளெல்லாம் வீணாய் நலமற் றிருந்துவிட்டேன்.

௭௬. ஆதுல னானவரு ளாண்டவரைப் போற்றாமல்
பாதக னாசெய்யப் படுபாவி நானானேன்.

௭௭. வாடினேன் தென்கதிரை வள்ளலைநான் போற்றாமல்
ஓடினே னோடி யலைந்தே னுலகமெல்லாம்.

௭௮. உலைந்தேன் கதிரைமலை யுத்தமனைப் போற்றாமல்
அலைந்தே னுலகமெல்லா மங்குமற்றே னிங்குமற்றேன்.

௭௯. எதிராக மூவுலகி லிம்மைமறு மைக்குமிடங்
கதிர்காம மென்றுமனங் கண்டுதிடங் கொண்டேனே.

௮௰. மதுரக் கவிக்கிசைய வாழ்ந்துகதிர் சருடை
கதிரைக் கிளியெனவுங் கண்டுதிடங் கொண்டேனே.

௮௧ ஆரணங்கள் போற்றுமலை யன்பரையீ டேற்றுமலை
காரணங்கள் காட்டு கதிர்காம மாமலையே.

௮௨. முத்தி கொடுக்குமலை மூவுலகும் போற்றுமலை
சித்தி பொருந்துமலை தென்கதிரை மாமலையே.

௮௩. மூவர்புகழுந் தேத்துமலை முப்பத்து முக்கோடி
தேவர்தொழு தேத்துமலை தென்கதிரை மாமலையே.

௮௪. எந்த வுலகிலெல்லா மேழைகளை யீடேறக்
கந்தவேள் வந்துறையுங் கதிர்காம மாமலையே.

௮௫. தெள்ளு தமிழ்வளருந் தேவசந்தா னமவளரும்
வள்ளிக் கொடிவளரும் வாழ்கதிரை மாமலையே.

௮௬. பாவக் கொடியறுக்கப் பாவலரை யீடேற்றும்
தேவக் கிரிவளருந் தென்கதிரை மாமலையே.

௮௭. மேவு மயில்வளரும் வேலாயுதம்வளரும்
சேவற் கொடிவளருந் தென்கதிரை மாமலையே.

௮௮. விண்டலத்தோர் போற்றி வியந்துதினம் பூசைசெய்ய
மண்டலத்தோர் போற்றும் வளர்கதிரை மாமலையே.

௮௯. தாலமெல்லா மோதுந் தலங்களெல்லாம் போற்றிசெய்யுங்
காலமெல்லா மோங்குங் கதிர்காம சந்நிதியே.

௯௰. வேகச ரணிமுகப் பொங்கலியைக் குறைத்திடும்
காதத் தோணியெனக் கதிர்காம சந்நிதியே.

௯௧. அவலப் புலன்க ளடக்கியன்ப ரீடேறக்
கவலைத் தூர்கொல்லுங் கதிர்காம சந்நிதியே.

௯௨. முத்திதரு தென்கதிரை முருகர்மலர்ச் சேவடியைச்
சித்தந் திருத்திமனந் தேற்றியறிந் தேனிலையே.

௯௩. வாளுந்து தென்கதிரை வள்ளலைநான் போற்றிசெய்து
ஆனந்தத் தேனைமிக யள்ளியுட்கொண் டேனிலையே.

௯௪. ஆறெழுத்தை நேசித் தகத்திருத்திச் சேவைசெய்து
கூறமிர்த பாலைக் குடிக்கவறிந் தேனிலையே.

௯௫. மருவித் துதித்தமரர் வாழ்த்துகதி ராபுரியைத்
தெரிசித்துத் தெண்டனிடச் சென்மமெடுத் தேனிலையே.

௯௬. மாணிக்கக் கெங்கைதனில் மருவிநீ ராடியுள்ளங்
காணிக்கை கொண்டிறைஞ்சக் காயமெடுத் தேனிலையே.

௯௭. தெண்டனிட்டுப் பன்னிருகைச் செவ்வே டிருப்பதியைக்
கண்டுதெரி சித்துக் கசிந்துருகி னேனிலையே.

௯௮. வாழுங் கதிரைமலை வள்ளலைநான் போற்றிசெய்து
நீழும பவக்கடலை நீக்கவறிந் தேனிலையே.

௯௯. தக்கபுகழ்த் தென்கதிரைச் சண்முகனைப் போற்றிசெய்து
மிக்கவினைக் கட்டறுக்கு மேன்மையறிந் தேனிலையே.

௧00. சொல்லற் றிரவுபகற் றூயோனைப் போற்றிசெய்து
செல்வத் தினிதிருக்கச் செய்தியறிந் தேனிலையே.

௧0௧. அன்ன மிரவோர்கட் கருத்திக் கதிர்காமநகர்
சந்நிதியை நோக்கித் தவசுபண்ணி னேனிலையே.

௧0௨. சண்டன் கொடுங்காலன் தண்டமுடன் வந்தணுகி
யண்டி யுயிர்கவர்போ தானதுணை காணேனே.

௧0௩. வெட்டிப் பகடேறி வெங்கூற்றன் வந்துயிரைக்
கட்டும் பொழுதுவழி காணுமிடங் காணேனே.

௧0௪. காலனைக் கண்டஞ்சிக் கலங்கிவிழு மந்நேரம
வேலு மயிலுமல்லால் வேறுதுணை காணேனே.

௧0௫. நாடினே னுன்கருணை நம்பினே னுன்பதத்தைத்
தேடினே னுன்பதியைத் தென்கதிரை வேலோனே.

௧0௬. நொந்தடியேன சிந்தை நடுங்குமபோ தென்முன்னே
வந்துதவ வேணுமினி வாழ்கதிரை வேலோனே.

௧0௭. காக்கப் பரமுமக்குக் காத்திரட்சித தென்குறையைத்
தீர்க்க கடனுமக்குத தென்கதிரை வேலோனே.

க0அ. விண்கொண்ட தேவர்கட்கும் மேதினியி லுள்ளவர்க்குங்
கண்கண்ட தெய்வங் கதிர்காம வேலோனே.

க0கூ. பொய்கண்ட கள்ளம் பொருந்துங் கலியுகத்தில்
மெய்கண்ட தெய்வம் விளங்குகதிர் வேலோனே

கக0. வாச்சியமாய் நான்மறைக்கு மாமுனிவர் தங்களுக்குங்
காட்சிதந்து வீற்றிருக்குங் கதிர்காம வேலோனே.

ககக. ஆரணமா யாரணத்துக் கப்பாலுக் கப்பாலாய்க்
காரணமாய் நிற்பதுவுங் கதிர்காம வேலவரே

ககஉ. விந்தாய விளங்கொளியாய் வேதமுமாய்க் காலமெல்லாஞ்
சிந்தாய் நிறைந்ததுவார் தென்கதிரை வேலவரே

ககங. மூர்த்தராய் முத்தொழிலாய் முக்குணமாய் மூவருமாய்
மெய்ப்பாசடராய் நிற்பதுவும் வீரவடி வேலவரே

ககச. எட்டெழுத்தா யஞ்செழுத்தா யீரெழுத்தாய்ப் பேரெழுத
வட்டெழுத்தாய் நிற்பதுவும் வன்னவடி வேலோனே [தாய்

ககரு. அருவாய்ப் பலவுருவா யற்புதமாய்த் தற்பரமாய்க்
குருவாகி நிற்பதுவுங் கோலவடி வேலவரே

ககசு. பண்ணிசையாய்ப் பேரொளியாய்ப் பாருயிருக் காதரவாய்க்
கண்ணொளியாய் நிற்பதுவுங் கதிர்காம வேலவரே.

ககஎ. மண்டலமாய்த் தண்புனலாய் வானகமாய் மாருதமாய்
விண்டலமாய் நிற்பதுவும் வீரவடி வேலவரே.

ககஅ. தக்கபுகழ் வாசமுமாய்த் தானொடுக்கத் தோற்றமுமாய்
மிக்ககதிர் காமந்தா னிற்றிருக்கும் வேலவரே.

கககூ. வெள்ளிக் கதிரைமலை வீற்றிருந்த தெய்வயானைக்கும்
எள்ளுக்கு ளெண்ணெய்போ லிருந்தருளும் வேலவரே

கஉ0. அணுவுக் கணுவா யகண்டபரி பூரணமாய்
நினைவுக் கணுவாகி நிற்பதுவும் வேலவரே

கஉக. மந்திரமாய் ஞான மருந்தாய் மறைக்கொழுந்தாய்ச்
சிந்துரமாய் ஞாலஞ் சிறப்பதுவும் வேலவரே.

கஉஉ. ஒளியாய் வெளியுருவா யுபரமாய் நிற்பரமாய்
வெளியாய் நிறைந்ததுவும் வீரவடி வேலவரே.

கஉங. எடுத்த வுலகமெல்லா மெள்ளிருக்க நீக்கமின்றி
யடுத்து நிறைந்ததுவு மாறுமுக வேலோனே.

கஉச. காய்ச்சியபால் நெய்போற் கலந்துகலந் தேகரந்து
வாரியாய் நிற்பதுவும் வன்னவடி வேலோனே

க௨ரு. தானே யுலகமெல்லாந் தன்செயலே தத்துவமாய்
ஆனதிருவிளையாட் டாடுவதும் வேலவரே.

க௨சு. புங்கவர்க ளெண்ணரிய பூச்சகதி வாளமெல்லாம்
செங்கோல் நடத்துவதுந் தென்கதிரை வேலவரே.

க௨எ. அல்லலுறு மருந்தவரை யீடேற்றிப்
பல்லுயிருக் கெல்லாம் படியளக்கும் வேலவரே.

க௨அ. வீற்றிருக்கும் தொண்டருக்கு மெஞ்ஞானத் தேவவளி
தேற்றியாட் கொள்ளுவதுந் தென்கதிரை வேலவரே

க௨கூ. குருடர் விழிதெரியக் கூன்முடவர் கால்வழங்க
மருட ரிருள்தீர வரமதெகொடுக்கும் வேலவரே.

கநய. கூனர் செவிடர் கொலைஞர் பிணியாளரங்கத்
தூனர் பிரமகத்தி துயரறுக்கும் வேலவரே.

கநக. துலங்கு மறைப்பொருளைச் சொல்லாத நான்முகனை
விலங்கிலிட்டு வைத்ததுவும் வீரவடி வேலவரே.

கந௨. இந்தைக்கு மெட்டாத தேவ மறைப்பொருளைத்
தந்தைக் குபதேசஞ் சாற்றுவதும் வேலவரே.

கநந. தானவா கடானைத் தலைமையறுத தம்பலத்தில்
வானவரை மீட்டதுவும் வாழ்கதிரை வேலவரே.

கநச. பன்னுதமிழ் வாணர் பரதேசிக் காதரவாய்
அன்னக் கொடிவீசி யமுதளிக்கும் வேலவரே.

கநரு. பாடுவது முன்செயல்தான் பல்லுயிரெ லாமியங்கி
யாடுவது முன்செயல்காண் ஆறுமுக வேலவரே.

கநசு. எடுப்பதுவு முன்செயலே யிலையென்று தேற்பவர்க்குக்
கொடுப்பதுவு முன்செயல்காண் கோலவடி வேலவரே.

கநஎ. அளிப்பதுவு முன்செயல்கா ணையமேற் றாக்குமின்றி
விழிப்பதுவு முன்செயல்காண் வீரவடி வேலவரே.

கநஅ. காட்டுவது முன்செயல்காண் காரணமுமுன செயல்போற்
கட்டுவது முன்செயல்காண் கோலவடி வேலவரே

கநகூ. முதலெழுத்து மீகருணை முவலகும் நீகருணைத்
தத்துவமும் நீகருணை சண்முகவே லாயுதனே.

கசய. விழித்தயன்கன் சென்னிதனில் வீண்கீற்றுங் கீறினதை
அழித்தெழுத வேணுமினி ஆறுமுக வேலோனே,

கசக. முன்பெழுத தெல்லாந் துடைத்தழித்தென் சென்னியிலே
பின்பமெழுத காயசீ யெழுந்துகதிர் வேலோனே

௧௪௨. அலையு மெழுத்தெல்லா மழிதகினிநா னீடேற
வலையா வெழுத்தெழுது மாறுமுக வேலோனே.

௧௪௩. வியக்கு மெழுத்தெல்லாம் விரித்துத்துடைத் தளித்து
நயக்கு மெழுத்தெழுதும் நற்கதிரை வேலோனே.

௧௪௪. மந்திரமுந் தேவு மருந்துமென தாருயிருஞ்
சிந்தையும் நீயெனக்குத் தென்கதிரை வேலோனே.

௧௪௫. காலன் வருங்கோலங் கண்டஞ்சு மப்பொழுதும்
வேலுக் கடைக்கலங்காண் வெற்றிவடி வேலோனே.

௧௪௬. ஆறிரண்டு தோளு மழகியவே லாயுதமும்
ஏறுமயில் வாகனமு மென்றனு யிர்த்துணையே.

௧௪௭. பற்றுப் பகைகளெல்லாம் பற்றறுக்கு முன்னுடைய
வெற்றிவே லாயுதமும் வீரமயி லுந்துணையே.

௧௪௮. வேகமுள்ள தூதர்வரும் வேளையில்வே லாயுதமுந்
தோகைமயில் வாகனமுந் துணையாய் வெளிப்படுமே.

௧௪௯. சாந்தனையுங் காயந் தளம்பாமற் றூரணியில்
வேந்தர்பகை சூழாமல் வேலுக் கடைக்கலமே.

௧௫0. கலியாற் பிணியாற் கடுங்கோளின் வெம்பகையால்
மெலியாமற் றென்கதிரை வேலுக் கடைக்கலமே.

௧௫௧. படையாற் கொடுவினையாற் பல்பகையாற் பல்லுயிரால்
மிடியால் மெலியாமல் வேலுக் கடைக்கலமே.

௧௫௨. தேனே மதுரமொழித் தெள்ளமுதே தேவர்தொழும்
மானே மரகதமே வள்ளியம்மை நாயகியே.

௧௫௩. கான்மேவு சோலைக் கதிரைமலைக் கற்புதமே
மானீன் றெடுத்தகுற வள்ளியம்மை நாயகியே.

௧௫௪. பார்புரக்கும் வேலரிடப் பாகமதில் வீற்றிருக்கும்
வார்புரக்குங் கும்பதன வள்ளியம்மை நாயகியே.

௧௫௫. விழிக்கும் பொருளைவைக்கு மேலவர்க்கு முள்ளவர்க்கு
மெழிக்குத் துணையெனக்கு வள்ளியம்மைத் தாயாரே.

௧௫௬. அறந்தவமில் லாதபொல்லா வாபாச னென்றனைநீ
மறந்துவி டாதையம்மா வள்ளியம்மைத் தாயாரே.

௧௫௭. கனதுயரந் துன்பக் கவலையெல்லாந் தீரவுன்தன்
மனதிரங்க வேணுமினி வள்ளியம்மைத் தாயாரே.

௧௫௮. திருந்தும் புவியிற் சனங்களையீ டேற்றுகின்ற
மருந்துன் னிரக்கமம்மா வள்ளியம்மைத் தாயாரே.

௧௫௯. சற்பிரக்கம் நீயள்ளித் தாராமற் றள்ளிவிட்டால்
மற்றிரங்க யாருமுண்டோ வள்ளியம்மைத் தாயாரே.

௧௬0. நெஞ்சமருள் கொண்டலையு நெட்டேரம் நீதியிலலா
வஞ்சனெனைக் காருமம்மா வள்ளியம்மைத் தாயாரே.

௧௬௧. தஞ்ச மெனக்கினியுன் தாளிணையே தஞ்சமம்மா
மஞ்சார் குழலாளே வள்ளியம்மை நாயகமே.

௧௬௨. ஊத்தைச்சட லப்பிணியா லூறுபடா வண்ணமெனைப்
பார்த்திரக்கஞ் செய்யுமம்மா வள்ளியம்மை நாயகமே.

௧௬௩. தொலையா மனக்கவலைத் துன்பமினித் தீர்வதற்குன்
மலரடியைத் தெண்டனிட்டேன் வள்ளியம்மை நாயகமே.

௧௬௪. என்தாயும் நீயேதா னென்னுயிர்க்கா தாரமுநீ
வந்தா தரவுசெய்யும் வள்ளியம்மை நாயகமே.

௧௬௫. வான்மருவு தேவகுல மாமணியே மாதவமே
தேனனைய மென்மொழியே தெய்வயானைத் தாயாரே.

௧௬௬. பாருமம்மா நீயிரக்கம் பாராதென் துன்பமெல்லாம்
தீருமம்மா தென்கதிரைத் தெய்வயானைத் தாயாரே.

௧௬௭. இரும்பனைய நெஞ்சனியா னிட்டற நீகடைக்கண்
திரும்புமம்மா தென்கதிரைத் தெய்வயானைத் தாயாரே.

௧௬௮. தரிக்கும் புகட்கரிரைச் சண்முகன்பா தஞ்சேர்ந்
திருக்கு மணிமயிலே தெய்வயானைத் தாயாரே.

௧௬௯. வருந்தும் பிணிகளெலலா மாற்றியென்னைக் காருமம்மா
திருந்துங் கதிரைமலைத் தெய்வயானைத் தாயாரே.

௧௭0. வாகொடுத்து நன்மைகொடுத் தினனலற வொண்கதியின்
சீர்கொடுக்கு தொண்டருக்குத் தெய்வயானைத் தாயாரே.

௧௭௧. கன்ம வழிமறித்துக் காவலிட்டுத் தாபரித்து
நன்மை வழியாக்கி நடத்துமவே லாயுதமே.

௧௭௨. குறமான் கொழுநன் குரைகழற்செந் தாமரைநான்
மறவா திருக்க வரந்தருமவே லாயுதமே.

௧௭௩. மண்டலம் நீக்கிவளி வானடங்கு மப்பொழுது
ண்டஞ்ச லென்றுவெனைக் காக்குமவே லாயுதமே.

௧௭௪. கொலையாய் நமனுயிரைக் கொள்ளைகொள்ளு மப்பொழுது
இலையாய் முடியுமுன்னே யிடரடுமவே லாயுதமே.

௧௭௫. பாவக் கொடியைப் படாமல்வே ரறுத்துக்
காவற் குடிலைவைத்துக் காக்குமவே லாயுதமே.

௧௭௬. அருக்கன் பதிருகன்மா லந்தணன்வெஞ் சீற்றமுடன்
நெருக்கும் பாதகமெல்லாம் நீக்கும்வே லாயுதமே.

௧௭௭. வெள்ளி சனிராகு மிக்ககொடுங் கேதிவைகள்
கள்ளஞ் செயும்பகையைக் காக்கும்வே லாயுதமே.

௧௭௮. கன்மவினை பூண்டுவெழி கால்கட்டாய்ப் பின்தொடரும்
ஜென்ம வியாதியெல்லாந் தீர்க்கும்வே லாயுதமே.

௧௭௯. பொருந்து முடலெடுத்துப் பூதலத்தி லாருயிர்க்கும்
வருந்து மிடுக்கணெல்லா மாற்றும்வே லாயுதமே.

௧௮0. சுற்றுகிர கப்பகைகள் சூழ்ந்துவரு வேளையிலே
பற்றும பராட்சியெல்லா மாற்றும்வே லாயுதமே.

௧௮௧. இலங்குசனி யட்டமத்தி லேழரையில் வந்தாலும்
கலங்காம லென்றுமென்னைக் காக்கும்வே லாயுதமே.

௧௮௨. விண்ணுட்டிடு காயம் வெண்கலத்தி லென்மீதிற்
கண்ணுட்டம் பாராமற் காக்கும்வே லாயுதமே.

௧௮௩. பேராா புவியிற் பிறந்துழலு யாணிடர்க்குத்
தீரா வியாதியெல்லாந் தீர்க்கும்வே லாயுதமே.

௧௮௪. அலகை பரிபிரதி யானபெல்லி சூனியங்கள்
கலிகள் நலியாமற் காக்கும்வே லாயுதமே.

௧௮௫. கலைதேரு நாமகளுங் கஞ்சமலர் மாதுமென்முன்
நிலையாய்க் குடியிருக்க நிறுத்தும்வே லாயுதமே.

௧௮௬. தன்னை மறந்தாலுந் தவத்தைமறந் தாலுமினி
யுன்னை மறவே னுயர்வடிவே லாயுதமே.

௧௮௭. கோலம் பெறுபதினோர் கோடி யுருத்திரர்கள்
சீலம் பெறுவடிவாய்ச் சேர்ந்தவே லாயுதமே.

௧௮௮. பாரக் கிரவுஞ்சப் பருவரைகள் தூளிபடச்
சூரைப பிளந்து தொலைத்தவே லாயுதமே.

௧௮௯. அரனுந் திருமாலு மயன்வச்சி ராயுதனும்
வரமார் விபுதர்களு மாற்றியவே லாயுதமே.

௧௯0. பரமன் சூலாயுதமும் பங்கயன் தெண்டாயுதமும்
வரமால்சக் கராயுதமு மானும்வே லாயுதமே.

௧௯௧. தீயகொடும்பாவியும்யான் செப்பியவிண் ணப்பமதைத்
தூயவடி வேலர்முன் சொல்லுமயில் வாகனமே.

௧௯௨. தங்கு மிரக்கந் தருசமயம் பார்த்திருந்து
கொங்க லொதுக்கிமெல்லச் சொல்லுமயில் வாகனமே.

௧௯௩. துணிந்து மதிப்பாகச் சொல்லாதே வேலர்முன்போய்ப்
பணிந்து தொழுதுசொல்லும் பச்சைமயில் வாகனமே.

௧௯௪. அழுதழுது நானுரைத்த வல்லலெல்லாம் வேலவர்க்குத்
தொழுதுநின்று மெல்லமெல்லச் சொல்லுமயில் வாகனமே

௧௯௫. காதலித்துப் பூதலத்திற் கன்மனிணைக் கூடெடுத்துப்
பேதலித்தே னென்றுசொல்லிப் பேசுமயில் வாகனமே.

௧௯௬. துருத்தி யெடுத்துழலுந் துன்பமிது தாங்கவொண்ணாப்
பொருத்தசுமை பாரமென்று பேசுமயில் வாகனமே.

௧௯௭. இறக்கப் படுமாவா லெய்திமெலி வுற்றடியேன்
துளக்கப் படுங்கதையைச் சொல்லுமயில் வாகனமே.

௧௯௮. காரென்று சொல்லு கடைபோகக் காத்திரக்கம்
பாரென்று சொல்லுமினிப் பச்சைமயில் வாகனமே.

௧௯௯. விழித்துன்பக் கீற்றெழுத்தை வேலர்திருக் காலாலே
யழித்தெழுத வேணுமென்று அறையுமயில் வாகனமே.

௨00. நின்றுடி யாடி நினைத்தெனாதுங்கி வேலருடன்
மன்றுடிச் சொல்லிவிடும் வன்னமயில் வாகனமே.

௨0௧. பாரமிந்தத் துன்பம் படமுடியா தென்றுசொல்லிச்
சூரைவென்ற வேலருடன் சொல்லுமயில் வாகனமே.

௨0௨. அல்லற் படுங்கவலை யாழமனத் துன்பமெல்லாம்
சொல்லிமுடி யாதெனவுஞ் சொல்லுமயில் வாகனமே.

௨0௩. காத்தருள வேணுங் கலிவறுமைத் துன்பமெல்லாந்
தீர்த்தருள வேணுமென்று செப்புமயில் வாகனமே.

௨0௪. மறைதுதிக்குந் தென்கதிரை வள்ளிவிழி யென்மனத்திற்
குறைதவிர்க்க வேணுமின்னங் கூறுமயில் வாகனமே.

௨0௫. வேந்த ரிடுங்கண் மிருபயமா யஞ்சியஞ்சிச்
சோர்ந்து தயங்குவதுஞ் சொல்லுமயில் வாகனமே.

௨0௬. தொண்டு தொட்டு ஆறுமுகன் தூயமதன் சேவைசெய்து
தெண்டனிட்டே னென்றுதிடஞ் செப்புமயில் வாகனமே.

௨0௭. இன்பப் படுவதல்லா லெய்திமெலி வுற்றடியேன்
துன்பப் படுவதையுஞ் சொல்லுமயில் வாகனமே.

௨0௮. வகைவகையாய் நானுரைத்த வாசகத்தை வேலவர்க்குத்
தொகை யாகச் சொல்லிவிடுந் தோகைமயில் வாகனமே.

௨0௯. சண்டன் வரும்பொழுது சண்முகனைத் தெண்டனிட்டுக்
கொண்டுவர வேணுமினிக் கோலமயில் வாகனமே.

௨௧௦. தாவுவினை மூடாமற் சஞ்சலமிஞ் சாமலெனை
மேவுசிறை காலொதுக்கும் வீரமயில் வாகனமே.

௨௧௧. வீழிட்ட சென்மமெல்லா மேலிட்டு முன்வினையைக்
கூழிட் டெடுத்தெடுத்துக் கொத்துமயில் வாகனமே.

௨௧௨. பாரவினைத் துன்பம் படமுடியா தென்றுசொல்லிச்
சூரைவென்ற வேலருடன் சொல்லுமயில் வாகனமே.

௨௧௩. பாரத் தலங்கள் பருவரைகள் தூள்படுத்தும்
வீரத் துவசமொருநதும் வெற்றிமயில் வாகனமே.

௨௧௪. வருமிடப வாகனமும் வளருமன்ன வாகனமும்
பொருகருட வாகனமும் போற்றுமயில் வாகனமே.

௨௧௫. மயில்வா கனமுரைத்த வாசகத்தைத் தான்கேட்டு
மயில்வேல ரென்குறைதீர்த் தாண்டடிமைக் கொண்டாரே.

௨௧௬. இரக்கந் தருங்கதிரை யெங்கோனைப் போற்றிசெய்து
கரக்கும் பெரும்பிறவிக் கடலைக் கடந்துவிட்டேன்.

௨௧௭. கதிக்கும் கதிரைமலைக் கந்தரைநான் போற்றிசெய்து
சதிக்கு மியமதண்டம் தட்டி விலகிவிட்டேன்.

௨௧௮. சித்திக்கு மெய்ஞ்ஞான செவ்வேளைப் போற்றிசெய்து
முத்திக் கரைக்கேணி முன்னிறுத்திக் கொண்டேனே.

௨௧௯. கைகுவித்துப்பன்னிருதோட் கந்தரைநான்போற்றிசெய்து
வைவரையுங் கட்டி மறித தாணையிட்டுக் கொண்டேனே.

௨௨௦. கட்டிய முன்வினையைக் காஞ்சூரகப் புறறையெல்லாம்
வெட்டிவெளி யாகிவழி வேறு திருப்பிவிட்டேன்.

௨௨௧. இன்பமுடன் தெய்வ கதிரை யெங்கோனைப் போற்றிசெய்து
துன்பமெல்லாந் தீர்த்து சுகம்பெற் றிருந்தேனே.

௨௨௨. கொம்மைமுலை வள்ளி கொழுநனைநான் போற்றிசெய்து
இம்மைமறு மைக்கு மினியசுகம் பெறுவேனே.

௨௨௩. குன்றெறிந்த வேலோய்நின் கோமலர்ச் சேவடிகள்
என்றுமற வாம லிருக்கவரந் தாராயோ.

௨௨௪. நிருமித் தடிமையெல்லாம் நெட்டுர னந்தனுள்ளம்
பருவப் பழுபாயப் பழுக்கவரந் தருவாய்.

௨௨௫. இப்பிறப்பிற் சென்மமொழிந் தெப்பிறப்பிற் போனாலும்
அப்பிறப்பு முன்னடிமை யாக வரந்தருவாய்.

௨௨௬. மிடிமைத் துயரால் மெலியாம லெப்பொழுதும்
அடிமைக் குடியாக வாண்டிரக்கஞ் செய்வாயே.



ஸ்ரீ

திருமாலிருஞ்சோலைமலை

# அழகர்பிள்ளைத்தமிழ்

இது

மதுரைத்தமிழ்ச்சங்கத்துச

"செந்தமிழ்"ப்பத்திராதிபர்

## திரு. நாராயணையங்காரால்

பரிசோதிக்கப்பெற்றுப்

பதிப்பிக்கப்பட்டது.




செந்தமிழ்ப்பிரசுரம்—௪௰.

தமிழ்ச்சங்கமுத்திராசாலைப்

பதிப்பு.

1919.

விலை அணா ௮.

ஸ்ரீ:

திருமாலிருஞ்சோலைமலை

# அழகர்பிள்ளைத்தமிழ்

## முகவுரை.

---

அமிழ்தினுமினிய தமிழ்மொழியகத்தே, அன்பும், இன்பும், அறனும், மறனும் சான்ற அகத்திணை புறத்திணைதழுவிய துறைவகைகளில் தோன்றுதொட்டு வழங்காயுள்ள நூல்கள் எத்துணையோ பலவுள்ளன; அவற்றுள், 'பிள்ளைத்தமிழ்' என்னும் பிரபந்தவகையுமொன்று.

'பிள்ளைத்தமிழ்' என்பது, பொலிதருஞ் சிறப்புவாய்ந்த மக்கட் குழவியைப் பாராட்டிப்பாடும் இனியபாடல்களாலாகிய பிரபந்தம் என்று பொருள்படும். இங்கு, 'தமிழ்' என்னுஞ் சொல் பிரபந்தத்தை யுணர்த்துமென்பதை, இந்நூலாசிரியர் தம் ஞானாசிரியர் வணக்கத்துள், 'வேதப்பாட்டிற்றருந் தமிழ்' என்று திவ்யப்பிரபந்தங்களை வழங்குதலாலும், இயலிசைநாடக நூல்களை இயற்றமிழ், இசைத்தமிழ், நாடகத்தமிழ் எனவும், முத்தமிழ் எனவும் வழங்குதலாலுமறிக.

இப்பிரபந்தம், புறப்பொருள் வகையாகிய பாடாண் திணையில் 'குழவிமருங்கினுங்கிழவதாகும்' என்ற தொல்காப்பியசூத்திரத்தாற் கொள்ளப்பட்ட *காமப் பகுதியின் பாற்பட்டு மக்கட் குழவிக்குரித்தாக வழங்கப்படுமாயினும், ஒரோவழி, தெய்வத்தோற்றமாகிய மக்கட் குழவியின் பருவத்தை ஆரோபித்தலால், அக்குழவியோ டொற்றுமை யுடைய தெய்வத்துக்கும் உரியதாக வழங்கப்படும். இச்சூத்திரத்தில், கிளப்பதாகும் என்னாது 'கிழவதாகும்' என்ற குறிப்பால் குழவிப் பரு

* இங்குக் கூறிய காமப்பகுதியாவது, பெறலரும்பிள்ளையைப் பெற்றதாய் முதலியோர் பாராட்டுதற்குரிய, 'குறுகுறு நடந்து சிறுகைநீட்டி, இட்டுந்தொட்டுங் கௌவியுந்துழந்து நெய்யுடையடிசின்மெய்பெற விதிர்த்தும், விளையாடுதன் முதலிய செயல்களை அனுபவிக்குமவரிடைத் தோன்றும் ஒருதலையின்பம். இதனை, 'மக்கண்மெய்தீண்டலுடற்கின்பம் மற்று அவர் சொற்கேட்டலின்பம் செவிக்கு, என்றற்றொடக்கத் தானுமறிக. இதனாலவர் விளையாட்டுக்காண்டலும் கட்கின்பமென்பது போதரும்.

வங்கழிந்த முதியரை அவரது குழவிப்பருவம்பற்றிப் பாராட்டிப் பாடினும் அப்பாட்டில், அம்முதியரோடொற்றுமையுடைய அக்குழவிக்கு உரிமையுடைமையால் அது வழுவாகாதென்று சொல்லப்படும்.

இப்பனுவலைப் பன்னிரு பாட்டியலுடையார் பிள்ளைப்பாட்டென வழங்கி, இலக்கணம் பல தாமியம்பியும், ஆன்றோர் கூறிய சில இலக்கணங்களை யெடுத்துக்காட்டியும் போந்தனர்; வெண்பாமாலையுடையார் (*'இளமைந்தர் நலம்வேட்ட வளமங்கையர் வகையுரைத்தல்' என்னும்) குழவிக்கட்டோன்றிய காமப்பகுதியினைப் பாற்படுப்பர்.

'வழக்கொடு சிவணிய வகைமையான' என்ற தொல்காப்பியச் சூத்திரத்துள், 'சான்றோர் செய்த புலனெறிவழக்கோடே பொருந்தி வந்த பகுதிக்கண்ணேயான பொருள்களுள்' குழவிமருங்கினுங்கிழவதாகிய பிள்ளைப்பாட்டுப் பொருள்களையும் வகுப்பித்துக் கூறியிருத்தலால் இப்பிரபந்தவகை தொல்காப்பியர் காலத்துக்கு முற்பட்ட சான்றோரால் செய்துபோந்த பழம்பழக்கமுடையதென விளங்குகின்றது. இதற்குக் காரணமாகப் பெரியாழ்வார் திருமொழியுட் பலவேறு பொருள்வகைகளாலும் பிள்ளைப்பாட்டுப் பாடப்பெற்றிருப்பது காணத்தகும். அதன்கண், தால், சப்பாணி, செங்கீரை, முதலியவற்றுடன், இக்காலப் பிள்ளைத்தமிழிலில்லாத பிறப்பின் உவகை, பாதாதிகேசக்காட்சி, தளர்நடை, அச்சோவச்சோ, புறம்புல்லல், அப்பூச்சிகாட்டல், நீராட்டல், பூச்சூட்டல், காப்பிடல், அம்மமூட்டல், முதலியபலவேறு பொருள் பற்றிய பாராட்டல்கள் உள்ளன.

இங்ஙனம் பல பொருள்களினுட்படவும், ஒரு பொருள்பற்றிப் பாராட்டும் பாட்டுத் தனித்தனி பதிகமாகவும், பிரபந்த முழுதும் சதகமாகவும் ஓரளவுடையதாக முடிக்கவேண்டிக் காப்புமுதற் சிறுதேரிறுதியான பத்துப்பொருள்களை இப்பிரபந்தத்துக்குரியனவாகப் பிற்காலத்தார் தெரிந்தெடுத்து நியமித்துப்போந்தனர் போலும்.

இங்ஙனம் பழமையும் அருமையும் வாய்ந்த பிரபந்தவகையிற் சேர்ந்த பிள்ளைத்தமிழ்களிற் சிறந்தவற்றுள் இத்திருமாலிருஞ் சோலைமலை அழகர்பிள்ளைத் தமிழும் ஒன்றெனெண்ணத் தக்கது.

---

* (இளமைந்தர் நலம் வேட்ட வளமங்கையர் வகையுரைத்தலாவது) கண்ணபிரானது இளமைப்பருவ விளையாட்டின்பத்தை விரும்பியசோதைப்பிராட்டியும் இடைப்பெண்களும் பாராட்டியபடியைப் பெரியாழ்வார் அனுகரித்தல்போல்வது.

இவ்வழகர் பிள்ளைத்தமிழ், காப்புமுதற் சிறுதேரிறுதியாகப் பத்துப் பருவப் பாராட்டலையுமுடையதாய்ப் பலவேறு சந்தப்பாடல்களாற் சிறந்தது. காவியங்கற்பார்க்கு, இலக்கிய விலக்கண வழக்கு வகை பலவுமெளிதினுணர்த்திச் சொற்பொருளுணர்ச்சியைத் திட்பமுறச் செய்யுந் திறமையுடையது; செய்யுட் செய்வார்க்கு விடயமில்லாவிடத்தும் பொருத்தமுள்ள விசேடணங்களை வருத்தமின்றித் தொடுத்துப் பொருளை விசேடித்துப் பலவாறாகச் செய்யுளையழகுபெறச்செய்து முடிக்கு மாற்றலையளிக்க வல்லது; ஐந்திணை மயக்கம், நானிலவருணனை, கற்பனை, அலங்கார முதலிய பொருள்களமைந்தது. திருமாலினவதாரமாகவந்த கண்ணபிரானது குழவிப்பருவத்தை ஒற்றுமைபற்றி அழகர் மேல்வைத்து, அக்கண்ணபிரானது இளமைநலம்வேட்ட யசோதைப் பிராட்டியுரிமைப் பெண்களுமாகிய "வளமங்கையர்" படியை அதநிய வசித்து மிகவும் பாராட்டிப் பாடப்பெற்றுள்ளது.

இப்பிரபந்தத்தின் பாயிரச்செய்யுளில 'வள்ளைத்தமிழ்கூர் வேம்பத்தூரவருமாண்புலவோர்வகுத்தது' என்று சொல்லப்பட்டிருத்தலால் இதனையியற்றியவர் பிறந்தவூர் வேம்பத்தூர் என வெளியாகிறது. இவ்வூரின்கட் டொன்றுதொட்ட ஆசு, மதுர, சித்ர, விஸ்தார கவிகளும், பிரபந்தங்களுமியற்றிப் போந்த பலபுலவர்களிருந்துவந்திருக்கின்றனரென்பதை, திருவாலவாயுடையார் திருவிளையாடற்புராணப்பதிப்பின் முகவுரையில் மஹாமஹோபாத்தியாய பிரம்மஸ்ரீ, வெ. சாமிநாதையரவர்களெழுதியிருப்பதால் அறியலாம். இப்பாயிரச்செய்யுளில், 'புலவோர்வகுத்தது' என்ற பன்மைக்கிணங்க வேம்பத்தூர்ச் சங்கப்புலவர் பலர்கூடி இப்பிரபந்தத்தையியற்றினரென்று சிலர் ஓர் ஐதிகம் சொல்வதுமுண்டு. இது பின்வருமாற்றாற் கொள்ளத்தக்கதன்று.

பழிச்சினர்ப்பரவலின் பன்னிரண்டாம் செய்யுளிலே, 'பேசுபய வேதாந்ததேசிகன் றுடோழுவல் பேரழகனூறுமுயவே' என்று தொழுவலென்னும் ஒருமையால் அழகனூலாகிய இப்பிரபந்தமுழுதுந் தழைதற்கு மங்களங்கூறியிருத்தலாலும், மற்றும் சில பாடல்களிலும் மங்களங்கூறியவிடங்களிலெல்லாம் இவர் இப்பிரபந்தத்தை 'என்கவி'என்று தாமேகூறியிருத்தலாலும் இப்பிரபந்தம் ஓரேபுலவராற் பாடப்பெற்றிருக்கலாமென்று தோன்றுகின்றது.

இதற்கனுகுணமாகவே சேதுசமஸ்தானவித்வான் ஸ்ரீமத்-ரா. ராகவையங்காரவர்கள் அரிதின் ஆராய்ச்சிசெய்தெழுதிச் 'செந்தமிழில்' வெளியிட்ட சேதுநாடுந்தமிழும்* என்ற வியாசத்தில இந்நூலியற்றிய வரது பெயர், சாமிநவி காளருத்திரர் என்று எழுதியுள்ளார்கள். கவிகாளருத்ரர் என்பது, பிறரால் வெல்லப்படாத ஆற்றல்பற்றி வழங்கும் 'கவிராக்ஷஸன்' என்பதுபோல இவரது கவித்திறமைபற்றிப்பின்பு வந்த சிறப்புப்பெயராயிருக்கவேண்டுமாதலால் அப்பெயர்க்குமுற்பட்டு, 'மாந்தரக்கொங்கேனுகி'என்புழிப்போலப் பண்புத்தொகை நிலைமொழியாய்நின்ற சாமி என்னுமபெயரே இவரது இயற்பெயராயிருக்கவேண்டுமென்று தோன்றுகின்றது.

பழிச்சினர்ப்பரவலின பதினென்காம்பாட்டில் இவர், தாம் அழகர் கோவிற்புரோகித நிர்வாகம்பெற்றிருந்த தோழப்பர் என்னும் ஸ்ரீவைஷ்ணவரால் 'தொண்டாகுழுவாகிய அத்தியாபககோஷ்டியிற் சேர்க்கப்பட்டவரென்று கூறியிருததலால, இவர் பஞ்சசமஸ்காரம்பெற்றுத் திவ்யப்பிரபந்தங்களைகிச சாத்தினவரென்பதும் 'வேதப்பாட்டிற்றருந்தமிழுமிருநாலெழுத்தும்'......'அலங்காரபடிவும் என்னெஞ்சகத்துள்நாட்டி' என்றமையால் பகவத்விஷயாதிகிரந்தங்களும், திருமந்த்ரார்த்த வியாக்யானமும, ஆத்தபஞ்சகாதி ரஹஸ்யங்களும் தோழப்பரிடம் அதிகரித்தவரென்பதும், 'நற்றமிழ்ச்சீர்பதிப்போன்'என்றதனால் அரியதமிழிலக்கிய விலக்கணங்களையும அத்தோழப்பரிடமேகேட்டு நெஞ்சிற் பதியக்கொண்டவரென்பதும விளங்குகின்றன. இதனால் இவரதுகாலம் இற்றைக்குச் சற்றேறத்தாழ நூற்றைம்பதுவருடங்கட்குமுன்பு திருமாலையாண்டார் சந்ததியாருள் ஒருவர்க்கு மாதுலராய்வந்து அழகர்கோவிற்புரோஹிதநிர்வாஹம் பெற்றிருந்ததோழப்பர்காலமென்றறியத்தக்கது.

இவர், வேதாந்ததேசிகரையும் மணவாளமாமுனிகளையும் வழிபடும் பாசுரங்களால் வடகலைதென்கலையென்னு முபயவேதாந்தங்களுக்கும் முறையே பிரவர்த்தகர்களான அவ்விருவரையும் வழிபாடுபுரியும் தென்கலை வைஷ்ணவரென அறியலாம்.

இந்நூலினுள்ள பலபாடல்களையும் பார்க்கும்போது இவர் வைஷ்ணவத்தில்மிக்க ஊற்றமுள்ளவரென்பதும், சங்கநூல்முதலிய பழைய

---

* செந்தமிழ் தொகுதி 13 பகுதி 2 பக்கம் 51.

தமிழ்நூற்பயிற்சியிற் றேர்ச்சியுற்ற பெரும்புலவரென்பதும், பலரும் சொல்லாதவண்ணச்சந்தங்களைக் கற்பித்துக்கொண்டு சொல்லின்பமும் பொருளின்பமும் சுவையும் அலங்காரமு மிலங்கக் கௌடவிருத்தியிலும் கவிகளியற்றுமாற்றலுடையவரென்பதும் விளங்கும்.

இவர் வைஷ்ணவத்தில் மிக்க ஊற்றமுடையராயிருப்பினும் காப்புப் பருவப்பாராட்டிற் பரவுதற்குரியரென விதிக்கப்பட்ட சிவபெருமான், விநாயகர், முருகவேள், வைரவன் முதலியோரையும் நன்கு பரவுதலால் விதிமுறைதவறாதொழுகு மியல்புடையவரென்பதும் விளங்கும்.

இந்நூல் சிலபத்தாண்டுகளுக்கு முன்னரே ஒருவா றச்சிடப்பட்டிருப்பினும் இப்பொழுது அச்சுப்புத்தகம் எங்கும் கிடைக்காமையால் இதனை அச்சிட்டாற் காவியங் கற்பார்பலர்க்கும் மிகப்பயன்படுமென்று கருதி மதுரைத் தமிழ்ச்சங்கத்திலிருந்த இரண்டு குறைப்பிரதிகளையும் ஓரச்சுப் புத்தகத்தையும் வைத்துப் பரிசோதித்துச் 'செந்தமிழ்' வாயிலாக வெளியிடலாயிற்று.

இந்நூற் பரிசோதனைக்குக் கிடைத்த இரண்டொரு பிரதிகளும் பிழைமலிந்திருந்தமையால் அவற்றுள் தெரிந்தவற்றைத் திருத்தித் தெரியாதவற்றை யிருந்தபடியே வைத்துப் பதிப்பிக்கலாயிற்று. ஆதலாற் செந்தமிழ்ப் பயிற்சியிற்றேர்ச்சியடைந்த பெரியோரிதனைக் கண்ணுற்று, சுத்தப்பிரதிகொண்டு, திருத்தவேண்டுமவற்றைத் திருத்தி எனது தவற்றைப் பொறுத்தருள வேண்டுகிறேன்.

இதனை அச்சிடுதற்குத் தமிழ்ச்சங்கக் கலாசாலை யுபாத்தியாயர் நல்லசிவன்பிள்ளை பிரதி எழுதிக்கொடுத்தும், அச்சுச் சேர்க்கையை ஒப்பு நோக்கித் திருத்தியும் உதவிபுரிந்தது பாராட்டற்பாலது.

திரு. நாராயணையங்கார்.

---

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௧ | ௪ | பொன்னூற்ற | பொன்றூற்ற |
| ௪௫ | ௨௧ | பருப்பின் | மருப்பின் |
| ௪௯ | ௨௰ | அறிய | அரிய |
| ௯௦ | ௨௭ | வளவாய் | வள்வாய் |
| ௯௩ | ௧௭ | வெறி | வெரி |
| ௯௪ | ௨௧ | மத்தெரி | மத்தெறி |
| ௯௮ | ௰ | செக்கா | செக்கர் |
| ௱௩ | ௯ | வைதநு | வைத்து |
| ௭௪ | ௨௭ | சோலை | சோலைமலை. |



உ

ஸ்ரீராமஜெயம்.

திருமாலிருஞ்சோலைமலை

# அழகர்பிள்ளைத்தமிழ்.

பாயிரம்.

## துதிகவி.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

வெள்ளைத்தமிழ்கொண்டெகிற்பல்புலவர்சிறப்பால்விளம்பேனைப்
பிள்ளைத்தமிழ்பின்னைத்தமிழேபெருமானவஞ்சரன்பொருட்டால்
வள்ளைத்தமிழ்கூர்வேம்பத்தூர்வருமாண்புலவோர்வகுத்ததனைப்
பிள்ளைத்தமிழேயெனுஞ்சிறுமைபெருமைபெரியதமிழெனுமால்.

## காப்பு.

நேரிசைவெண்பா.

செய்யா டிருமார்பன் செங்கமலக் கண்ணினான்
மையா ரழகன் மலைத்தாயின் —மெய்யாகச்
செப்பும்பிள் ளைத்தமிழ்க்குச் சிந்துரமுன் வந்தளித்த
துப்பணைய பாதந் துணை.

# அவையடக்கம்.

சீரரு மானதப் பெருவாவி பூத்ததொளை
நெடுநாள முளரியேறி
நீறுபடு பொற்சுண்ணை மாமது வுண்டு * மகிழ்
நிலயுமெரி தூவியன்னம்

* மதி - பி-ம்.

கன்மாரி காப்பப் பசுந்தா மரைச்சிறிய
கைக்கொண்ட வரையேழுநாள்
பொறுத்தலைச் செய்திடையர் சுற்றமுங் கன்றும்
புனிற்றாவு நின்றளித்த
பொங்கர்த் தடஞ்சோலை மலையலங் காரனைப்
புகழுமென் கவிதையுயவே. (௨)

## நம்மாழ்வார்.

மறையவாக் குரைத்தபொரு ளுள்ளவை யடங்கலும்
வைத்துநா மனமுறத்தில்
வழுவறத் தெள்ளியவை சோதற வடித்திரதம்
வாய்ப்பவள நாறுதமிழின்
துறைவாக் கெழுங்கலன் பெய்தன்பு நீரிற்
றுழாய்மணப் பதநோக்கிமால்
தொண்டர்க ளருந்தவிய லமுதினை வழுத்தமுனி
தலையாய துதிப்பெண்மதுவோர்
முறைவாக்கி வைத்தலைபங் கையுறைநந் திலவென்று
முதுகுடுமி யிட்டியொழுகும்
முழுமதியி னமுதமுங் குறைவுபட மகளிரொரு
முறையாக்கி வழியவார்த்து
நிறைவாக்கி விளையாடி மலையலங் காரபத
நித்தலும் வழுத்திமேய்த்த
நிறைவாக்கு நாவும் பெறுங்கா ரெடுத்தோதி
நிலைபெற்று வாழ்வதற்கே. (௩)

## குலசேகராழ்வார்.

கொட்பா யொளிச்செக்கர் மணியார நிறைபாய்
கிளைதழுவக் கொண்டவையார்
கேண்மைகொள் பவராருக மலாகாத வுரைசெவிக்
கேற்பதன் றென்று பருவார்க்
குடப்பாம் பிடப்பெருகும் பாந்தள்வாய் கையிட்ட
கோவேந்த னரசரேறு
கோப்பெருஞ் சேரமா னடியிணை வழுத்துவென்
குழறிவா னலவுதெய்வ

மடப்பாவை மார்பொய்தல் வண்டலாட் டயரவுகை
மணியூச லாடமேலை
மங்குல்வாய் நெஞ்சம் பிளக்கவுயர் சிமயத்து
மதிவந்து போனவழியே
நடப்பாக வந்துசகி ரிளமாதர் தம்மோடு
நாளும்விளை யாடுமலைவாழ்
நாரணனை மாலலங் காரனை வழுத்துமென்
னன்கவிதை வாழ்கவென்றே. (௪)

## திருமங்கையாழ்வார்.

பொருமட னெடுங் கடற் போராழி மால்கரப்
பொன்னாழி கொளவந்தமால்
புட்பிடர் வரக்கண்டு மெய்ஞ்ஞான வெள்ளம்
புறம்பொங்க வுட்களித்துத்
திருமட னெடுந்தாண் டகங்குறுந் தாண்டகச்
செய்யுண் முதல் பலவுரைக்கும்
திருமங்கை முனிகலிய னூற்கவிக் கொண்டல்பூஞ்
சேவடி துதிப்பென் முந்நீர்
இருமடங் கூறுங் கடாங்கவுட் டிங்கவிழி
யிருகடையும் வடவைநாங்க
இருசெவிக் கலகடைக் காறாங்க மாமன்கவிடு
மிகல்கரி மருப்புவாங்கி
வருமடங் கற்குருளை மாலிருஞ் சோலைமலை
மாலைங் காரர்பச்சை
வண்டுழாய் மணநாறு திருத்தாளு மிருதாளும்
வாழ்த்துமென் கவிதையுயவே. (௫)

## திருமழிசையாழ்வார்.

சூட்டுநா கப்பணைப் பள்ளிப் பெரும்பாய்
சுருட்டித் தமிழ்க்கச்சியிற்
றுளவக் கருங்கட னெடும்பக் குடந்தையிற்
றுயிலுமுகி றலையணைப்பப்

பாட்டுநா வுரைசெயுந் திருமழிசை வேந்தன்
பரந்துலாஞ் சிந்தைபொறியின்
பாலுறு குறுவகை நிறுத்துமுனி தாமரைப்
பாதந் துதிப்பென்மலர்பூ
வீட்டுநான் முகமுனிய நாட்டமா யிரமுடைய
வேந்தனும் விபுதர்குழுவும்
வெட்சியந் தெரியல்புனை வேளும்வா ரணமுகனும்
வெள்ளிவெண் கோடுகூடாக்
கோட்டுநா னிமதிக் கண்ணரியங் கடவுளுங்
கண்டிவலம் வந்திறைஞ்சும்
குலமலைத் தலையுறைய மாலலங் காரனைக்
கூறுமென் கவிதழையபவே. (சு)

## தொண்டரடிப்பொடியாழ்வார்.

இருமாலை யாகப் பரந்தபூங் காவிரி
யிரண்டுடைக் கூட்டுநெற்றி
பெரிமணிப் பாம்பணைத் துயில்கொள்ளு மொருமாலை
யிசைமுறை பழுத்தசெஞ்சொற்
றிருமாலை சூட்டுபவர் தொண்டர்த மடிப்பொடித்
தெய்வமுனி யறிவின்வடிவாம்
செந்தா மரைத்தா ளுமத்தா மரைத்தலஞ்
சேர்த்துவென் பன்னைமுன்னாட்
டிருமாலை யப்புனரி நீத்திடுந் தெய்வமான்
றிருமணி யாரமார்பிற்
றூர்பட்ட தண்டுழாய்க் காட்டுள்விளை யாடமகிழ்
சங்கேந்து கொண்டல்கன்னற்
பொருமாலை விண்டசா றூடமத வேழம்
புழைக்கர மெடுத்துநீந்தும்
பொங்கர்மலி யிடபகிரி மாலலங் காரனைப்
புகழுமென் கவிதழையவே. (எ)

## திருப்பாணாழ்வார்.

விழித்தா மரைத்துணையின் வேறுநோக் கலவொன்று
 விரிதிரைப் பொன்னிநாப்பண்
விழிதுயில் கருங்கொண் டலைப்பாளி யாய்வந்த
 வெள்ளத்து ழழ்கியயின்
மொழித்தாம மொருபக்கு பிருதோ ளணிந்தந்த
 முநிவின்வடி வுட்காந்த
முனிவன் றுணைப்பதம் வழுத்துமென் சொல்லையம்
 முல்லைப் புலத்துலாவித்
தெழித்தா மரூக்கன்று தேடிமுலை யமுதந்
 தெருத்தலை நனைப்பவோவச்
செல்லமருண் மாலையிற் பின்செலுங் கண்ணனை
 நிலைசமுக னிருக்குமுந்நீர்
சுழித்தா மரைக்கடவுண் மாலைச் சாரணை
 சோலைமலை சுற்றிருக்கும்
சுந்தரத் தோளனைத் தொண்டரே னுரைசெயுஞ்
 சொற்பாடல் வளர்வதற்கே. (அ)

## சூடிக்கொடுத்த நாச்சியார்.

பாடற் பெரும்புழு துழாய்வாட வெயினின்று
 பவளவாயி மாறுப்
பச்சைப் பசுந்தொற் புதப்பா லுஞ்சுருள்
 பரிக்குழன் முகத்துகிர்க்கும
வாடற் பழஞ்சருகும் வேட்டாங் கெசயப
 மலைகுனிய நின்றமுகிலும்
மாலெங் காரவு மிரப்பவருள் புதுவைநக
 வல்லியிரு தாடிதிப்பென்
சேடற் பெரும்பள்ளி விழிதுஞ் சபாற்கடற்
 சேர்ப்பற்கு மணிவரன்றிச்
சிலம்பாறு பாயுஞ் சிலம்பற்கு வெள்ளொளி
 தேங்கியலை வைகுந்தவா
னாடற்கு முல்லைப் புலத்தா நிரைப்பின்
 னடந்ததா ளண்ணலுச்சு
நான்மறைப் பொருளாய வழகற் குரைக்குமென்
 னன்கவிதை வாழியென்றே. (க)

* சேடற்பெரும்பள்ளி - ஒன்றியற்கிழமைக்கண்வந்த ஆறும்வேற்றுமைத் தொகை. நகரம், வலித்தல் விகாரம்.

உணவாக நஞ்செவியி லிருபுறமும் வழியவார்த்
துயிர் தளிர்ப் பித்தவெங்கோன்
ஒளியிட்டு திருநாட்டு வழிகாட்டு தாட்கமல
முடிமீது வைப்பனெட்டைப்
பணவா ளராவுலக முடைநாறு வெள்ளணைப்பேய்ப்
பாவைதன் முலையுண்டமுதம
பருகிச் செவந்தவாய் பாலனங் காளைப்
பாடுமென் கவிதழையவே. (௰௩)

## ஞானசாரியார்.

ஓட்டுக் கப்புந் துநெடு நாளொட்டு வருதீய
வூழ் வினைக டம்வயத்தில்
ஓடுமைம் புலனையு மனதமோடு நெறியினின்
றொருவழிப் படநிறுத்திக்
கூட்டுத் தடஞ்சோலை மலைநிழன் மல்லர்க்காங்
கோத்துவலம் வந்துகண்ணார்
கொழிப்பமெய்ம் மயிர்பொடித் துளமுருகு தொண்டர்தங்
குழுவுடன் கூட்டுவேதப்
பாட்டிற் றருந்தமிழு மிருபா லெழுதலும்
பகர்ந்தேன் பெருக்கெடுக்குப
பைந்துளாய்ப் பள்ளியந் தாமத் தலங்காரர்
படிவமென் னெஞ்சகத்துள்
நாட்டுத் தளிர்ப்பித்த திருவாளர் தோழப்பா
நற்றமிழ்ச் சீர்பகிப்போன்
நலமருவு மழகன் புரோகிதன் புனிதபத
நான்மலர் வழுத்துவேனே. (௰௪)

## அடியார்கள்.

அண்டர்க்கு நான்முகக் கடவுட்கும் வானோர்
ராறுபாய் சடிலருக்கும்
ஊரா வதப்பெரும் பாகற்கு மெட்டாத
வாழிமால் பதமலையுநற்

## சிவபெருமான்.

### வேறு.

அருமறைமொழியு நூலினைநறிய கமலசகரங்கள் யாப்பவும்
அளியுளப்பதும மாளிகைமுனிவன் வதுவைச்சடங்கு காட்டவும்
அருள்விளையிமய மாதுலனெழுது புனலைத்தடங்கை வார்க்கவும் [வும்
அடைபொதிதுளவ நாரணன்வெளிய பொரியைச்கொணர்ந்து தூற்ற
இருவருநறுநெய் தூவியவெரியை வலம்வரற் மூன்று போற்றவும்
இருகரமுளரி நாண்மலர்சிலையின் மயிலைபொற்பதங்க ளேற்றவும்
எழுகதிருலவு வான்வடதிசையி லுடுமுற்றம் வந்து காட்டவும்
இடுதுகின்முகப டாமுலைபுணர மலையைப்பரித்து வேட்டவர்
மருமலர்பொதுளி வாழுமைழவனு நமதைத்தவழ்ந்து சார்தகிடை
மடவியரிழுது தோய்முலை விரவு துகிலைக்குருத்து சேர்த்தும்
மகிழ்வருகுரவை நாடகமதர விரலைத்தெரிந்து கோதகில
மனைநடுவுறியின் வாயளைகளவு கொளவற்புநின்று பார்த்தலை
பெருகமுதுகொள வானிரைவழி நிலையப்பமருண் மேய்த்தரை
பிணையணைகயிறு நாமுடைபட மடையப்பிணைத்து தூக்கிய
பிடவலைபடலை யாயனைவிபுல வெரிதொட்டணிந்த கோடியல்
பிறைதலைழிடப யாலவலை நுறைய முகிலைப்பரித்து காக்கவே. (௪)

## தேவேந்திரன்.

### வேறு.

நகைமுகமழு $ காமுகிலகட்டபுனமுழுப்
பதம்வாய்ப்பமதமொழுமாயப்போத்துகள
நடையடிகளைவரொற்றிட வையிற்
சுவடேய்ப்பவிடைபறழ்நிலைததாய்க்கலை
நனைவிளைதாழ்சினைதத்தி * முளைமுடக்
குடில்சாய்ப்பமடமயில்கூடிக்கூதகெடு
நகையுருமேறுசிலைப்ப முழவிதிர்த்
தாவாற்றல்கெடவிடர்தேடிப்போய்ப்புக

---

$ காரகில். பி-ம்.

* யுறைமுடக். பி-ம்.

உறைநகர்சாதகம்விக்கல்விடவிடைக்
குலமாக்கள்படன்முடையோலைக்கீழ்ப்புக
ஒளியெழுகோபநிரைப்பநிலவுபுட்
சிறையாட்டிமகிழ்பெடையொடுச்சேக்கையில்
உறைதாவோரணைபட்டமணமுறைதப்
புணம்வீக்கமுரிவரார்சாலைப்பாட்டின
முழைமுகலையோடுதெவிட்டவனசமொட்
டருள்சீச்சுமிளவெயிலகாணற்கேக்கற
அறைகடலீர்விளைப்பிப்பிவிழுமழைத்
துளியேற்றுநிலவுமிழுமாரநூற்கொள
அகன்மடற்கோடல்விரிப்பவெயிறுகட்
டுளைசூற்றிநெடுமபிரணசசாத்து
அகழ்புகூவல்கொழிக்குமமுதுவெப்
பெருமாத்துவதிரியில்வாயைத்தாட்கொள
அகமகிழ்கேள்வர்தமக்குமரிவையர்க்
குளமூடிமௌவலுகாமதநீச்சட
மறைமொழியாளர்வழுத்தியனலொழுக்
கவியேற்றுவலம்வருமோதைக்கார்ப்புயல
மலர்நிலமாதருளிப்பமைழைகொழித்
தெழுநோக்குநார்புதிதாளைப்போற்றுதும்
மணிநிரைபேயவெடுத்தகளைழுபிடற
ரிசையுற்றிமலர்புனைதாளருட்சேப்புற
வணநடுவேவாயிபீனாததவழகனைப்
பொழில்வாய்த்தகுலமலைமாலைக்காக்கவே. (ரு)

## ஆதித்தன்.

வேறு.

பரியனையுரற்பிறைநகப்பினாருக்கைப்
பருப்பதந் தண்டுறைதொறும்
படியமடைபடுகரட வாய்திறந் திழிமதம்
பாயமணி யமுனைதோயும்

தெண்டிரைப் பரிபுர நதித்தலைவ குணிலெற்று
சிறுபறை முழக்கியருளே
செகமலையு மெனவுதர மணைகயிறு வரியுமுகில்
சிறுபறை முழக்கியருளே. (௪)

வேறு

புள்ளுறந் திரையும் பொருபுனல் குடையும்
பூந்தொடி மங்கையர்தேம்
பொதிவண் டலையுங் குமுதத்திளநகை
பொங்கொளி சொரிநிலவும்

கள்ளுண் சிறைவண் டினமும் பரவுங்
கற்றைக் குழல்செருகும்
கடிகமழ் பித்திகை விடுமலர் தூற்றுங்
கலைநில வும்பிடையைத்

தள்ளுறுங் கொங்கைத் தாளக் குவைசொரி
தண்ணில வும்பருகிச்
சற்றும் படுபசி தணியா திளைய
சகோரக் குலமுலவும்

தெள்ளும் புனனூ புரநதி யிறைவன்
சிறுபறை கொட்டுகவே
செம்பொற் சாரற் குலமலை யிறைவன்
சிறுபறை கொட்டுகவே. (௫)

வேறு

கரைகடந் திரைக்கு நீத்தநீர்க் குழியிற்
கால்விழ மருப்பேற்றும்
கழித்தலைக் குமுத வாயிதழ் மடுத்துங்
கட்செவி கிடவாமல்

விரைகமழ் துளவப் பொதும்பரி னீழல்
வெப்பறப் புயம்வைத்தும்
விடுமடற் கமல வுந்தியிற் பூத்தும்
விண்ணுட னெடுமெட்டு

வரையரா விருத்து நூற்றுவர் கூற்றின்
　　வாய்புகச் சுமைதீர்த்தும்
மலர்ப்பதந் தாவி யளந்துகைக் கொண்டு
　　மற்றொரு பொதுநீங்கக்

குரைகடல் வளாக மெமதெனக் குரிசில்
　　கொட்டுக சிறுபறையே
குலமலை வாணன் மாலலங் காரன்
　　கொட்டுக சிறுபறையே. (சு)

ஆட்டியுந் தலைநீர் குழம்பவெற் புழல
　　வலைத்தகை குணிருக்க
ஆர்க்கும்வெங் குரலை யெவரிவண் முழக்கு
　　மவரெனச் சிறுவர்க்குக்

காட்டியுமுடலந் தண்ணெனப் புரிந்து
　　கண்களைத் திசைவைத்தும்
கரத்தினன் மீளப் புடைத்தெழுங் குரற்குக்
　　காந்தளஞ் செவிதாழ்த்தும்

நீட்டியுந் திரைத்து மெதுவென நகைத்து
　　நெஞ்சயர்ந் தலமந்தும்
நின்றுலாங் குரிசில் புறவினிற் பரப்பி
　　நிரையினைக் கழையூதிக்

கூட்டியும் யமுனைக் கரைவருங் களிறு
　　கொட்டுக சிறுபறையே
குலமலை வாணன் மாலலங் காரன்
　　கொட்டுக சிறுபறையே. (எ)

வேறு

விழுத்தலை வடித்தநெட் டுசிநட் டுங்குப்பை
　　வெந்தீப் பிழம்பிலிட்டும்
வெண்ணிணத் திந்தடி யரிந்துசெம் புண்ணின்வாய்
　　வெள்ளுப்பு நீரிறைத்தும்

சுழித்தலை பரந்தாடு முதிரநீத் தத்தினிற்
றுயருழப் பத்தள்ளியும்
சுடர்வா ளிலைக்கள்ளி மீதெறிந் துங்காசி
தூண்டுழைச் சுள்ளடங்கக்

குழித்தலை தலைக்கீ ழுறப்புதைத் தும்புலாற்
குருதியுடல் போட்டுநாயின்
கோள்வாய்ப் புகுத்துமா தண்டமயர் மறலிபதி
குறுகாம லடியருக்காத்

தெழித்தலை யறுவருவி மலைவந்து நின்றமுகில்
சிறுபறை முழக்கியருளே
செகமலையு மெனவுதர மணைகயிறு வரியுமுகில்
சிறுபறை முழக்கியருளே. (௮)

பாந்தளிற் பஃறலைச் செம்மணிக் குப்பையிற்
படர்வெயிற் குடல்வெதும்பிப்
பாண்சுரும் பறுகால் கிளைக்கும் பசுந்துழாய்ப்
பள்ளியந் தாமநீழற்

சாந்தள றெடுத்துக் கொழிக்கும் பணைப்புயந்
தவிசுநடு வீற்றிருக்கும்
தரைமகள் விரும்பியெக் காலமுந் நிலவெழுந்
தவளவொண் சங்குடுக்கும்

காந்தளங் கையேந்து பாவையிப் பறையொலி
கறங்கமெலி யசுணமல்லள்
கனிவாயின் மொழிகற்று வளர்கிளிப் பிள்ளைகூற்
கருவிமுகில் கண்படுப்பத்

தேந்தழைப் பாயலரு ணற்சோலை மலைவாண
சிறுபறை முழக்கியருளே
செகமலையு மெனவுதர மணைகயிறு வரியுமுகில்
சிறுபறை முழக்கியருளே. (௯)

துளிகொண்ட வெள்ளமிர்த மிடையறு தொழுகிவிளை
துகிர்பழுத் தனையசெய்ய
தூயவா யூறலு முகத்தலை குழற்றலை
துவற்றிவிழு புழுகுநெய்யும்

அளிகொண்ட தண்டுழாய்ப் பள்ளித் திருத்தொங்க
லகவிதழ் வரிந்தோடுதேன்
அலையும் புனற்படத் தட்பமுற் றெழுகுர
லவிந்ததே னருகுபாயும்

ஒலிகொண்ட கடவுட் கவுத்துவச் செக்கர்மணி
யுச்சியிற் கற்றைவெயில்வாய்
ஒலிபொங்க வென்றதள் வெதுப்புங் கருங்கொண்ட
லுடுபதிக் குழவிதவழும்

தெளிகொண்ட தலையருவி துஞ்சுகுல மலைவாண
சிறுபறை முழக்கியருளே
செகமலையு மெனவுதர மணைகயிறு வரியுமுகில்
சிறுபறை முழக்கியருளே. (௰)

சிறுபறைப்பருவ முற்றும்.

---

பத்தாவது

# சிறுதேர்ப்பருவம்.

இருகரமுஞ்செவப்ப வலதேனுடிளைத்துவிளைதேன்
எழுதளவம்பதித்த கொடிவேரொதுக்கிமலரால்

மருவெழுபந்தரிட்டு வெயில்வான்மறைத்துமலிதூள்
மடியமுகந்துகொட்டி யிறைநீர்மழைக்கண்மடவார்

நிறையளகங்குலைப்ப விழுதாதொதுக்கியடியேம்
நிலவியமுன்றில்வட்ட நடுவேசிறுத்திமரைவாழ்

திருவுறைபொங்கர்வெற்ப சிறுதேருருட்டியருளே
திகிரியிணைந்தணைத்த சிறுதேருருட்டியருளே. (௧)

பொறையுடலம்பிளப்ப வுழுசாறுவைத்தும் வருசேல்
பொருகதவந்திறக்கு மடைவாயடைத்து நுரைபாய்
அறைபுனல்பொங்கியெற்று நிறைகாலுடைத்தும்வயரோய்
அளறுபெறுங்குருத்து முளைநாறழித்துமணியால்
மறையவரம்புமுற்று முதுகூலுகுத்தும்வளையோர்
மளவருடன்பகைத்த புனலூடெடுத்தவளிசூழ்
சிறையெறிபொங்கர்வெற்ப சிறுதேருருட்டியருளே
திருவளரும்புயத்த சிறுதேருருட்டியருளே. (உ)

வேறு

புழுதி யளைந்து தெருத்தலையின்
புறம்போ யறையின் மணியசைத்தும்
புனிற்று வந்த தெனவுரைத்தும்
பொங்க லெனச்சே றடியிழுக்கும்
தொழுவி லூாலைப் பிணிப்பொழித்தும்
துள்ளுங் குழக்கன் றெருத்தணைத்தும்
தொடர்பாய்ந் தறுத்த தெனவுரைத்தும்
சொரியும் விழிநீர் மெய்போர்ப்ப
அழுது பொருமி நின்றுபொய்யே
அடித்தா ரென்று மிலைமனையில்
அசோதை பதறி யோடிவர
அழைத்து நகைக்கு மழலைமுகில்
கொழுது மளிதோய் சோலைமலைக்
கோமான் சிறுதே ருருட்டுகவே
குளிறுஞ் சிலம்பா றுடையமறைக்
கோமான் சிறுதே ருருட்டுகவே. (ந)

மீன்கோட் டலைக்கும் பெருவாரி
வெள்ளத் தெழுந்த வெற்பும்வட
வெற்பு மழுந்த முன்னாளில்
வெள்ளை வராகப் பெரும்போத்துக்

கூன்கோட் டிரட்டை நுதிமடுத்துக்
குழியில் வீழு நிலமகளைக்
கொண்டு நிமிர நாற்புறமும்
கொழிக்குந் தரங்கப் புனல்போல

வான்கோட் டிளைய மதியமுது
வழிக்கு மிரத நெடுஞ்சிகர
மருங்கு தொடுக்கு மிருல்பிளக்க
வழியுங் கடவா ரணங்குத்தித்

தேன்கோட் டிழிய வருஞ்சோலைச்
சிலம்பன் சிறுதே ருருட்டுகவே
தெள்ளுந் தரங்கப் பாலாழிச்
சேர்ப்பன் சிறுதே ருருட்டுகவே. (ச)

அண்ட ருவலைக் குடிற்படல்வாய்
அனைத்துந் திறந்து தோற்றவுறி
அலைந்து தோற்ற வுரன்மிதித்த
அடியின் சுவடு தோற்றமுதிர்

வண்ட லளைபா னிறைந்ததடா
வயிறு குறைந்து தோற்றவிடை
மகளிர் துவர்வா யலர்தோற்ற
வதனம் வெருளி தோற்றவிளங்

துண்ட மதிவா ணுதற்பவளத்
துவர்வா யசோதை கைமாறு
தோற்ற வுடனே யருடோற்றத்
துணைக்கண் மைநீர் தோற்றவளை

உண்ட களவு தோற்றுமல்
உலக மேழு முண்டதிரு
உதரங் குழைய வழுதமுகில்
ஓட்டுஞ் சிறுதே ருருட்டுகவே. (கு)

வேறு

களிக்கக் குலப்பொதுவ ரெண்ணிலா யிரவராங்
கன்னியரி லொருவரைமலர்க்
கண்ணருள் புரிந்துமலர் மணிமுடியி லொருவரிரு
கால்வைத்து மொருவர்முலைதோள்

குளித்துக்களிப்பக் கலந்துமலர் கற்பகக்
கொடியொருவர் கொங்கைமுற்றக்
கோட்டிபு முரக்களப வள்ளல்வா யொருவரிடு
குறியொருவர் காண்குறுமல்

ஒளித்துப் பெருந்துனி யொழித்துமய லொருவருட
னூடியும் பகலொன்றின்வாய்
உவலையக் குடிலடங் கத்திரியு மிளையமுகி
லொழுகுமொளி மணியரைத்துத்

தெளித்துக் குழைத்தனைய மழலைவா யழகனே
சிறுதே ருருட்டியருளே
சிலைவிசயன் விடுபெருந் தேர்கடவு மழகனே
சிறுதே ருருட்டியருளே. (சு)

பூநாறு வாறுபாய் சந்தனக் கொம்பர்ப்
புறத்துங் கடற்பிறந்து
பொன்பரப் புந்துணர்க் கற்பகக் கொம்பர்ப்
புறத்தும் வடந்துவக்கி

மீனாறு வொழுகுமணி நூபுர நதிக்குவளை
விண்டபொற் றுதின்வெள்ளி
வெண்டிரைக் கங்கையின் பொற்று மரைத்தாதின்
வேரியங் கால்கொழிப்பக்

கானாறு வண்டுமுரல் கொந்தளக் குறமடக்
கன்னியரும் வானநாட்டுக்
கன்னியரு மிருமருங் காட்டிடச் சதிரிளங்
கன்னியர்க ளூசலாடும்

தேனாறு விளையிரு ளாறு மலைவாண
சிறுதே ருருட்டியருளே
சிலைவிசயன் விடுபெருந் தேர்கடவு மழகனே
சிறுதே ருருட்டியருளே. (எ)

அலையெடுத் திருகரை நெரித்துச் சுருக்கதற
வறைபுனல் வறண்டுநெட்டை
ஆழியிற் கானலந் தேர்புக விலங்கைக்கு
ளாதவன் றேர்கடாவக்

கொலையெடுக் கும்படை யரக்கருடல் வெய்யபுட்
குலமேற வுயிர்விமானக்
கொடுஞ்சிப் பொலநதே ருகைப்பவா னவமாதர்
குங்குமச் சேதகத்து

மலையெடுக் கும்புளகம் விளையவா வெங்கணும்
மாறு விழாவெடுப்ப
மாரவே டென்றலந் தேரூர மாதலி
மணித்தேர் நடாத்திவெற்றிச்

சிலையெடுக் குங்கொண்டல் பரிமா தொடக்குபொற்
சிறுதே ருருட்டியருளே
சிலைவிசயன் விடுபெருந் தேர்கடவு மழகனே
சிறுதே ருருட்டியருளே. (அ)

குருமணி பொதிந்தபொல னாரமுஞ் சுரும்பேறு
கொய்மலர்த் தாரலம்பும்
குவடுபடு மிருபது பணைத்தோளு மேமுடன்
கூறுகொண் டுரிமையாளும்

மருமலி மடற்கமல மங்கையும் மாவீர
மங்கையு மகன்றுமகலா
மண்மகளை யகல்விக்க வேண்டுமென வலிகொண்டு
மாறுகொண் டெதிர்சிலைத்துப்

பொருகளத் துயிர்மடி யரக்கன் பொருப்புடற்
பொதிபரா கத்துவந்த
பூவையர்கள் கண்மாரி பொழியவெங் கணைமாரி
பொழியவெஞ் சிலையெடுத்துச்

செருமலைந் தடல்வாகை புனையலங் காரனே
சிறுதேரு நட்டியருளே
சிலைவிசயன் விடுபெருந் தேர்கடவு மழகனே
சிறுதேரு நட்டியருளே. (௯)

அலம்புந் திரைக்குருந்தி வெள்ளமுந் தோன்மேவு
மலைபடு நரம்புமெண்ணும்
அளறுபடு தினைமுந் திரட்டுமுட விட்டநா
ளறுதிவரி னிலவுபுள்ளரின்

குலந்தினைனி விழிவாளை கோதுபடு மெரியுமை
கொடுந்தழற் கொள்ளைமிசையிற்
குப்பைவெண் பொடிபடும் பகுவாய நமலியுங்
குருகரியும் வாய்மடுத்தால

மலம்படுந் தரைபருகின் மண்படும் பிறவியின்
வழியையறற் றொண்டர்விட்டு
வானவர்க் கெட்டாத வைகுந்த நாடடைய
வாழ்விக்கும் வேதநாண் தும

சிலம்பும் புலம்புந் திருத்தா ளலங்கார
சிறுதேரு நட்டியருளே
சிலைவிசயன் விடுபெருந் தேர்கடவு மழகனே
சிறுதேரு நட்டியருளே. (௧௰)

பொங்காலை வெம்பா கடுங்கொழுந் தழலெழும்
புகையுடற் றலைபுதைப்பப்
புதுமணங் கமழுவந் தனையென்று பைம்பெடை
புலந்துபோய்ச் சிறைபுடைப்பத்

தங்கா தலைமபிள்ளை வெண்குருகு வாயிலாத்
தாளிணைச் சென்றிறைஞ்சித்
தாமரைப் பொற்பரா கம்பொதியு மேனியைத்
தைவந்து தூவல்கொழுதிக்

# ASTHIKA UPAKYANAM

TRANSLATED FROM THE MAHABHARATA

BY

Varakavi Thiru A Subramania Bharathiar,

*Author of "Jadavallabhar & Bhanumathi."*



S. G. AIYAR & CO.,

Booksellers & Publishers, Triplicane, Madras.

---

1911.

 [Price As.

செந்திலாண்டவன்
திருவடி துணை.

# ஆஸ்தீகோபாக்கியானம்.

இஃது

சிறுகாம்பூர்

இராமாயணம் பிரம்மஸ்ரீ நடேச சாஸ்திரிகளவர்களால்

ஸம்ஸ்கிருதத்திலிருந்து

வரகவி-திரு. அ. சுப்பிரமணிய பாரதியாரவர்களின்

உதவியைக்கொண்டு தமிழில்

மொழிபெயர்க்கபபட்டது.

சென்னை, திருவல்லிக்கேணி,

எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனியாரால்

வெளியிடப்பட்டது.

1911

 [விலை அணா 5.

# முகவுரை.

புத்தகங்களுக்கு முகவுரை எழுதுவதென்பது வழக்கமாக விருப்பினும் சில புத்தகங்களுக்கு அதன் ஆவசியகமும் ஏற்படாமலிருக்கிறது. அங்ஙனமாயினும், வழக்கத்தை யனுசரித்து எழுதுவாருஞ் சிலருளர்.

"ஆஸ்திகோபாக்கியானம்" என்னும் இப்புத்தகத்திற்கு நாம் எழுதப் புகுந்தது வழக்கத்தைமட்டும் அனுசரித்தல்ல. இதில் கூறியுள்ள அரியபெரிய நியாயங்களைப்படித்துப் பயன்பெறும் பொருட்டும், இதனைப்படிப்பதால் சாமான்ய ஜனங்கள் அடையத்தக்க பயனிதுவென்பதையும் வெளியிடுவான் கருதியே இம்முகவுரையெழுதத் துணிந்தனம்.

மனக்கவலையைப் போக்கி உற்சாகத்தை யளிக்கத்தக்க சரிதங்கள் பல உளவாயினும், அவைகளிற் பெரும்பாலும்படிக்கும்பொழுதுமாத்திரம் ஆநந்தத்தை விளைக்கத்தக்கவையா யிருக்கின்றன. இப்புத்தகம் அப்படிக்கூறத்தக்கதல்ல. நீதி, மனவுற்சாகம், விஷபயநிவர்த்தி,முதலிய இகபர சாதகமானவைகளை யளிக்கக்கூடியதென்பது திண்ணம் ஏனெனில், இப்புத்தகம் "பாரதம்" பஞ்சமோ வேத (பாரதம் ஐந்தாவதுவேதம்) என்றுபுகழ்ந்தோதப்படும் ஸ்ரீமஹாபாரதம் ஆதிபர்வத்திலிருந்து எடுத்து வெளியிடப்பட்டது. வேதபாராயணத்திற்கு எவ்வளவு பலனுண்டோ அவ்வளவும இதனைப்படிப்பதனால் ஏற்படுமென்பது ஆஸ்திகோத்தமர்களாகிய நாம் ஒப்பத்தகுந்தது. கஷ்ட நிவர்த்தியையும் சுகப்பிராப்தியையும விரும்பும்பிரதிமனிதனும் ஜபம் முதலியன செய்தே அவைகளைப்பெறவேண்டும். இக்கதாநாயகனின் பிரபாவத்தைப் பற்றிக்கூறும் மந்திரங்கள் இரண்டுள. இவ்விருமந்திரங்கள் பின்வருமாறு.—

1. "ஜரத்காரோர்ஜரத் காரவாம் ஸமுத்பன்னோ மஹாயசா:!
அஸ்தீகஸ்ஸத்யஸந்தோ மாம் பன்னகேப்யோபிரக்ஷது.

2. அபஸர்ப ஸர்ப பத்ரந்தே தூரம் கச்ச மஹாயச:
ஜனமே ஜயஸ்ய யக்ஞாந்தே அஸ்தீகவசநம்ஸ்மரன்.

இதன் கருத்து:—

1. ஜரத்காரு முனிவருக்கும் ஜரத்காருவென்னும் பெண்மணிக்கும் பிறந்தவரும், பெருங்கீர்த்தி வாய்ந்தவரும் ஸத்திய சந்தருமான அஸ்தீகர் ஸர்ப்பங்களிடமிருந்து என்னைக்காப்பாற்றட்டும்.

**2. ஏ சர்ப்பமே! தூரவிலகிப்போ. உனக்கு மங்கள முண்டாகுக, ஏ பெருங் கீர்த்தி வாய்ந்த நாகங்களே! நீங்கள் ஜனமேஜயனுடைய யாக முடிவிலுள்ள ஆஸ்தீகருடைய வசனங்களை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள் என்பதாம்.**

இவ்விரண்டு மந்திரங்களையும் பெரும்பாலும் சந்தி ஜபம் செய்யுங்காலத்தில் பிராமணர்கள் ஜபம் செய்வது வழக்கமாக விருந்து வருகிறது.

ஒவ்வொருவரும் இரவில் சயனிக்கும்பொழுது இம்மந்திரங்களை மும்முறை ஜபம் செய்வார்களானால் சர்ப்பபயம் ஒருக்காலும் சம்பவிக்கா தென்பது நிச்சயம்.

இக்கதாநாயகனாகிய ஆஸ்தீகரின் பெயரையாவது சயனிக்கும் பொழுது ஒவ்வொருவரும் ஜபித்தல் நலம் என்பதுடன் முடிக்கிறோம்.

இப்புத்தகத்தை அச்சிட்ட மெஸ்ஸரஸ் எஸ். ஜி. ஐயர் அண்டு கம்பெனியாருக்கு இதைப்போன்ற புத்தகங்களை மென்மேலும் அச்சிட்டு வெளியிடுவதற்கு சர்வ வல்லமையுள்ள கடவுள் கிருபைபுரிவாராக.

26-5-11
திருவல்லிக்கேணி } எஸ். ராஜாசாஸ்திரி.



உ

செந்திலாண்டவன் திருவடி துணை.

# ஆஸ்திகோபாக்கியானம்.

---

விநாயகர் காப்பு.

பிரணவக் களிற்றின் பிரசநாண் மலர்ச்
சரணிணை பரவத் தமிழுள மாமே.

## அத்தியாயம் 1.

---

ஒரு காலத்தில் சௌனக முனிவர் சூதமுனிவரை நோக்கி, "சூதபுராணிகரே! அரசர்களுக்குட் சிறந்தவனாகிய ஜனமேஜயன் ஸர்ப்பசத்திரமென்கிற யாகஞ்செய்து ஸர்ப்பங்களுக்கழிவையுண்டாக்கியதன் காரணம் யாது? அதனைத் தெரிவிக்கவேண்டுகிறேன். தவிர, பிராமணர்களுக்குள் உத்தமரும், ஜபம் செய்கிறவர்களுக்குள் சிறந்தவரும பகவானுமாகிய ஆஸ்தீகமுனிவர், ஒளிவீசாநின்ற தீயினின்று ஸர்ப்பங்களை விடுவித்ததன் காரணம் யாது? அந்த ஜனமேஜயன் யாருடைய குமாரன்? அந்த ஆஸ்தீக முனிவர் யாருடைய குமாரன்? அவருடைய சரித்திரமென்ன? இவைகளைக் கேட்கவிரும்புகிறேன்," என்று தெரிவித்தார். சூதமுனிவர், "பேசுகிறவர்களுக்குட் சிறந்தவராகிய சௌனகமுனிவரே! பெரிதான ஆஸ்தீகமுனிவரின் உபாக்கியானத்தைப் பெரியோர்கள் கூறியபடி நான் சொல்லுகிறேன்; கேளுங்கள்:—

இந்தச் சரித்திரம் புராதனமானதென்று பெரியோர்கள் கூறுகிறார்கள். வியாசபகவான் திருவாய்மலர்ந்தருளிய இச்சரித்திரத்தை எனது தந்தை ரோமஹர்ஷணர் முன் நைமிசாரண்ய வாசிகளுக்குச் சொன்னார். என் தந்தை ரோமஹர்ஷணர் வியாசமுனிவரிடம் சீடனாகவிருந்து அவரது அனுமதியின் பேரில் கூறினார். என் தந்தையிடம் நான் கேட்டேன். சகல பாவங்களையும் போக்கும் அந்த ஆஸ்தீகமுனிவரின் உபாக்கியானத்தை உள்ளபடி கூறுகிறேன்.

ஜரத்காரு என்பவர் ஆஸ்திகருக்குத் தந்தை. பிரமதேவனுக்கு நிகரானவர். முதலாவது ஆச்சிரமமாகிய பிரமசரிய ஆச்சிரமத்தை அனுஷ்டித்துவந்தார். கணக்கான ஆகாரம் புசித்துக் கடுந்தவம் புரிந்துவந்தார். ஜிதேந்திரியர்; கிராமத்திற்கு ஒரு இரவு தங்கிவசிப்பவர்; நியமந்தவறுமலிருப்பவர். தருமமுணர்ந்தவர். தவவலியாற் சிறந்த மகானுபாவராகிய இவர் பூதல முழுதும் சஞ்சரித்துக் கொண்டு புண்ணிய தீர்த்தங்கள் தோறும் சென்று, ஸ்நானஞ் செய்து சூரியாஸ்தமனமாகுமிடத்தில் தங்கி, மனநிலையையடையப் பெறுதவர்கள் செய்யமுடியாத தீக்ஷையையடைந்து, வாயுவை உணவாகக்கொண்டு, பிரகாசிக்கும் அக்கினிக்கொப்பானதேஜஸை யடைந்து பூதலமுழுதும் சுற்றிவந்தார். அப்பொழுது ஒரு பெரிய பள்ளத்தில் தலை கீழாகத் தொங்கிக் கொண்டிருந்த தமது பிதிர்க்களைக்கண்டார். ஜரத்காரு அவர்களைப் பார்த்து, "நீங்கள் யார்? எலிகள் கடித்த விலாமிச்சம் வேரைப்பற்றிக் கொண்டு தலை கீழாகத் தொங்குகின்றீர்களே! ஏன்?" என்று கேட்டார்.

அந்த பிதிர்க்கள், "பிராமணு! நாங்கள் கடுமையான விருதானுஷ்டானமுள்ள யாயாவரர்களென்னும் பெயருள்ள முனிவர்கள். எங்கள் சந்ததி குறைந்து போனமையால் நாங்கள் பூமியின் கீழே போய்க்கொண்டிருக்கிறோம். துர்ப்பாக்கியமுள்ள எங்களுக்கு ஜரத்காரு என்னும் துர்ப்பாக்கியனொருவனே சந்ததியாக விருக்கிறான். அந்த மூடன் சந்ததிவிருத்தியாவதற்குக் காரணமான விவாகம் செய்து கொள்ளவில்லை. தவத்திலேயே சிந்தையைச் செலுத்திவருகிறான். வம்சத்தில் சந்ததியில்லாமற் போனதால், எங்களுக்கு ஜரத்காரு நாதனிருந்தும் பாபிகளைப் போல் நாதனற்றவர்களாகி இந்தப் பள்ளத்தில் தொங்குகிறோம். இந்தப் பூவுலகில் சந்ததியை யடையாதவர்கள் புண்ணியஞ் செய்தவர்களேயாயினும் அவர்களுக்குச் சொர்க்கமிடந்தராது. நீ யார் எங்கள் உறவினர்களைப் போல் எங்களைப்பற்றி வருந்துகிறாயே," என்று கேட்டார்கள். ஜரத்காரு, "நீங்கள் என்னுடைய மூன்னோராகிய பிதிர்க்கள், பிதாமகர்கள்; நான் தான் ஜரத்காரு என்பவன். நான் செய்யவேண்டியதென்ன சொல்லுங்கள்," என்றார். பிதிர்க்கள், "நமது குலம் நாசமடையாதிருப்பதின் பொருட்டாவது, ஆத்மார்த்தமாகவாவது, எங்களுக்காகவாவது தருமத்தைக் கருதியாவது மணஞ் செய்து கொள்ள முயற்சிசெய்;

புத்திரனே! மக்கட் பேற்றைப் பெற்றவர்களுக் குண்டாகும் நற்கதியைத் தருமங்களாலும், தவங்களாலும், பூர்வ ஜன்ம புண்ணியங்களாலும் அடைய முடியாது. ஆகையால் மணஞ்செய்து கொள்ள முயற்சிசெய். சந்ததி விருத்திசெய்; இது தான் நாங்கள் விரும்புவது; "இதுவே எங்கள் உத்தரவு," என்றார்கள். ஜரத்காரு, "நான் விவாகம் செய்து கொள்வதில்லை யென நிச்சயித்திருந்தேன். உங்களின் நன்மையின் பொருட்டு நான் விவாகம் செய்து கொள்ளுகிறேன். நான் ஒரு நியமத்தை ஏற்படுத்தப் போகிறேன். அதன்படி கிடைக்குமானால், விதிப்படி விவாகம் செய்து கொள்வேன். அன்றேல் மணஞ்செய்து கொள்ளேன்—கன்னிகை என் பெயருள்ளவளாகவிருக்க வேண்டும். அவளுடைய உறவினர்கள் தாங்களாகவே கொண்டுவந்து கொடுக்க வேண்டும். அப்போது நான் அக்கன்னிகையை பிக்ஷையைப் போல் பெற்றுக்கொண்டு விதிப்படி விவாகம் செய்து கொள்ளுகிறேன். வறியோனாகிய எனக்குப் பெண்ணை யார் கொடுக்கப் போகிறார்கள். பிதிர் பிதாமகர்களே! இந்த நியமப்படி விவாகஞ் செய்து கொண்டு பின் உண்டாகக்கூடிய சந்ததியால், நீங்கள் கரையேற்றப்படுவீர்கள். பிறகு நீங்கள் நித்தியமான பதத்தையடைந்து ஆநந்தம் பெறுவீர்கள்," என்று சொன்னார்.

---

## அத்தியாயம் 2.

---

பிறகு விருத சீலராகிய ஜரத்காரு முனிவர் விவாகத்திற்குரிய பெண்ணைத் தேடிக்கொண்டு பூதல முழுதும் அலைந்தார். அலைந்தும் தாம் நியமித்துக் கொண்டபடி பெண்கிடைக்கவில்லை. அவர் ஒரு நாள் பிதிர்க்கள் கூறியதை எண்ணிக் கொண்டு வனம் சென்று கன்னிகையைக் கொடுவென்று பிக்ஷை கேட்பது போல் மெதுவாக மூன்று தடவை கன்னிகையுண்டாவென அழைத்தார். அதைக்கேட்ட வாசுகியானவன் தன் சகோதரியை யழைத்துக்கொண்டு வந்து ஜரத்காருவைப் பார்த்து இவளைத் தருகிறேன் என்றான். ஜரத்காரு முனிவர் அவளைத் தாம் முன் பிரதிக்ஞை செய்தபடி தமது பெயருடையவளல்லவெனக்கருதி மணஞ் செய்து கொள்ள விரும்பவில்லை. எனினும் முனிவர், 'நாகராஜ

னே! இந்த உன் சகோதரியின் பெயரென்ன,' என்று கேட்டார். வாசுகி முனிவரை நோக்கி, "முனிவரே! இவள் என்னுடன் கூடப்பிறந்தவள். ஜரத்காரு என்பது இவள் பெயர். பிராமணோத்தமரே! தங்களுக்காகவே பரிபாலிக்கப்பட்ட அழகிய இடையையுடைய இக்கன்னிகையை நான் தங்களுக்குக் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். தாங்கள் இந்தக் கன்னிகையை தரும பத்தினியாக ஏற்றுக்கொள்ள வேண்டும்," என்றான்.

வாசுகியானவன் இங்ஙனம் தெரிவித்து, அதிசுந்தரவதியான தன் சகோதரியை முனிவருக்குத தானமாக கொடுததான். முனிவர் அக்கன்னிகையை மனமுவநதேற்றுக் கொண்டு சாஸ்திரோக்தமாக மணம் புரிநது கொண்டனர்.

---

## அத்தியாயம் 3.

---

பிரமஞானிகளுக்குள் சிறநதவராகிய "ஏ, சௌனக முனிவரே! முன் அன்னையாகிய கத்ரு சர்ப்பங்களுக்கு "ஜனமேஜய மகாராஜனுடைய யாகத்தில் உங்களனைவரையும் அக்னிபகவான் தகிக்கப்போகிறான்," எனச் சாபங்கொடுத்திருந்தாள். அச்சாபத்திலிருந்து அவர்களை விடுவிக்கும்பொருட்டு வாசுகிதன் சகோதரியாகிய ஜரத்காருவை, ஜரத்காரு முனிவருக்குக் கொடுத்தார். அவரும் அதற்கிணங்கிச் சாஸ்திரோக்தமாக மணஞ்செய்துகொண்டார். அவருக்கு அவளிடம ஆஸ்தீகர் என்னும் பெயர் பூண்ட ஓர் புத்திரர் பிறந்தனர். அந்த ஆஸ்தீகர் தவமதியிற் சிறந்தவரும் மகாத்மாவும், வேதவேதாகமங்களின் கரைகண்டவராகவும் எல்லாரிடத்தும் சமபுத்தியுள்ளவராகவும், அன்னை தந்தையரின் அச்சந்தவிர்க்கும் உததமராகவும் இருநதார்.

இப்படியிருந்து வருகையில் வெகு காலம் சென்ற பிறகு பாண்டவ பரம்பரையிற் பிறந்த ஜனமேஜயன் என்னும் அரசன் ஸர்ப்பங்களையழிப்பதன் பொருட்டு சர்ப்பசத்திரமென்கிற பெரிய யாகத்தைச் செய்தான். அப்பொழுது மகாதபோதனராகிய ஆஸ்தீகர் தமது சகோதரர்களும், மாமன் மாமியார்களுமாகிய ஸர்ப்பங்களை அநத யாகத்தில் மடியாதபடி காப்பாற்றினார். பிறகு சந்ததியை விருததி செய்தும், தவம் விருதம் முதலியவைகளாலும்

பிதிர்க்களைக் கரையேறறினார். அவ்விதமே யாகங்களால் தேவர் கடனையும், வேதாத்தியயனத்தினால் ரிஷிகள் கடனையும் தீர்த்தார். யாகஙகளால் தேவர்களையும் பிரமசரியவிருதததினால் ரிஷிகளையும் புத்திரோத்பத்தியால் பிதிர்க்களையும திருப்திசெய்வித்தார்.

ஜரத்காரு முனிவர் இவ்விதம் பிதிர்க்களின் கடனைக்கழித்து அவர்களுடன் சொர்க்கலோகம் சென்றார். இந்த ஆஸ்தீகர் சரித்திரத்தை நடந்தபடி உங்களுக்குக் கூறினேன். இன்னும் நான் சொல்லவேண்டியதென்ன? சொல்லுங்கள்," என்று கேட்டார்.

---

## அத்தியாயம் 4.

---

சௌனகர் சூதபுராணிகரைப் பார்த்து "சூதபுராணிகரே! இச்சரித்திரத்தை விஸ்தாரமாகக் கூறும். ஞானவானும் பரம சாதுவுமாகிய ஆஸ்தீக முனிவருடைய இந்தக்கதையை மறுபடியும் விரிவாகச் சொல்லும். இதைக்கேட்க எங்களுக்கு விருப்பம் அதிகமாகவிருக்கிறது. இனிமையாயும் இனிமையான அக்ஷரம் பதம இவைகளுடன் உம்முடைய தந்தைபோலவே நீரும் பேசுகிறீர். எங்களுககு அதில் மிகவும் திருப்தியாயிருக்கிறது. தங்களுடைய தந்தை ரோமஹர்ஷணர் எங்களுக்குக் கதை சொல்வதில் மிகப் பிரீதியுள்ளவர். தங்களுடைய தந்தை தங்களுக்கு இந்த உபாக்கியானத்தைச் சொன்னபடியே எங்களுக்கு நீர் சொல்ல வேண்டும்," என்றார்.

நீண்ட ஆயுளையுடைய சௌனக முனிவரே! எனது பிதா கூறியபடியே உங்களுக்குச் சொல்லுகிறேன். ஏ, பிராம்மண சிரேஷ்டரே! முன் க்ருதயுகத்தில் தக்ஷப்பிரஜாபதியின் சிறந்த பெண்களாகிய இரண்டு சகோதரிகள் மிகச்சிறந்த அழகுடையவர்களாயிருந்தார்கள். கத்ரு, வினதை யென்கிற அவ்விரு சகோதரிகளும் கசியபர்களுக்கு மனைவிகளானார்கள். ஒரு நாள் கசியபர் மிகவும் மகிழ்வுற்று, தமது மனைவிமார்களை நோக்கி உங்களுக்கு வேண்டிய வரத்தைக் கேளுங்கள் என்று கூறினார். இதைக் கேட்டதும் அவ்விருவரும் மிகவும் ஆநந்தமடைந்து, கத்ருவானவள், ஒரே ரூபமுள்ள ஆயிரம் ஸர்ப்பங்களை நான் பிள்ளைகளாக அடைய வேண்டுமென வரங்கேட்டாள். வினதை, வலிமையிலும் மனோ,

பலத்திலும் காந்தியிலும் பராக்கிரமத்திலும் கத்ருவின் பிள்ளைகளைவிட மிக்கதான இரண்டு புத்திரர்களைக் கேட்டாள்.

அவர்களுடைய கணவனாகிய காசியபர், இருவருக்கும் அவரவரிச்சித்தபடி வரமளித்து; "நீங்களிருவரும் அவரவர்கள் கர்ப்பத்தைப்பத்திரமாகவைத்துக் கொள்ளுங்கள்" எனக்கூறிக் கானகம் சென்றனர்.

பிறகு வெகுநாட் கழிந்த பின் கத்ரு ஆயிரம் முட்டைகளையும், விநதை இரண்டு முட்டைகளையுமீன்றார்கள். அவர்களுடைய பணிவிடைப் பெண்கள் அந்த முட்டைகளை உஷ்ணமான குடம் முதலியவைகளில் வைத்து ஐந்நூறு வருஷகாலம் பாதுகாத்து வந்தார்கள். பிறகு கத்ருவின் முட்டைகளிலிருந்து பிள்ளைகள் வெளிப்பட்டனர். விநதையின் முட்டைகளிலிருந்துண்டாக வேண்டிய இரண்டு குழந்தைகளும் காணப்படவேயில்லை. இதைக் கண்டதும் மக்களையடைய ஆவல் கொண்டவளும் துக்கிப்பவளும் தன் சக்களத்திக்குக் குழந்தைகளுண்டாகித் தனக்குண்டாகமலிருப்பதில் வெட்கமுற்றவளுமாகிய விநதை ஒரு முட்டையையுடைத்தாள். அதில் ஓர் புத்திரனிருந்தான். அவனுக்குச் சரீரத்தின் மேற்பாகம் பூர்ணமாயிருந்தது. கீழ்ப்பாகம் தெரியாமலிருந்தது. உடனே அப்புத்திரன் சினமடைந்து, "அம்மா! லோபகுணமுள்ள உன்னால் என் சரீரம் பூர்ணமடையவில்லை. ஆகையால் நீ ஐந்நூறுவருஷம் வரையில் பொறாமை கொண்டிருக்கும் கத்ருவினிடம் ஊழியக்காரியாக விருக்கக்கடவாய்; அம்மா! இந்த முட்டையையும் உடைத்து, இரண்டாவது பிள்ளையாகிய அவனையும் என்னைப்போல் அங்கவீனனாகவாவது, அல்லது அங்கமில்லாதவனாகவாவது செய்துவிடாதே. அப்படியாயிருந்தால் இந்தக் குழந்தை உன்னை அடிமைத்தனத்திலிருந்து விடுவிப்பான். குழந்தைக்கு மிக்க பலமுண்டாக வேண்டுமென்கிற விருப்பமுள்ள நீ ஐந்நூறுவருஷத்திற்கு மேல் குழந்தை உண்டாகும் காலத்தை எதிர்பார்த்திரு" என விநதையைச் சபித்துவிட்டு விடியற்கால வேளையில் ஆகாயத்திற்குப் பறந்துசென்றான். அப்பொழுது உதயமான சூரியன் தன் தேஜஸை ஒத்துவிளங்கும் அந்த அருணனைக்கண்டு அன்புடன் தனக்குச் சாரதியாக்கிக் கொண்டான். ஒப்புயர்வற்றபிரகாசமுள்ள சூரியனுடைய இரதத்தில் அருணன்சாரதியாகவமர்ந்து தேவனானான். பிறகு கருடனும்

பாம்புகளை வதம் செய்யும் சக்தியுடன் குறித்த காலத்திற் பிறந்தான். பிறந்தவுடன் பக்ஷிராஜனாகிய அந்தக் கருடன் மிக்க பசியையடைந்து வினதையைவிட்டுப் பிரிந்து பிரமதேவனால் தனக்கு ஆகாரமாக நியமிக்கப்பட்ட ஆகாரத்தைத் தேடி ஆகாயத்திற் பறந்து சென்றான்.

---

## அத்த்யாயம் 5.

---

சூத பௌராணிகர் சௌனகரைப்பார்த்து "தபோதனரே! இதே சமயத்தில் கத்ரு வினதைகளாகிய அவ்விரண்டு சகோதரிகளும் அமரர்கள் அமிர்தங்கடைந்த காலத்தில் உண்டானதும், தேவர்களால் பூஜிக்கப் பெற்றதும மிகவும் மேன்மையடைந்ததும், அளவற்ற ஆற்றலுடையதும, வேகமுள்ளவைகளுக்குள் சிறந்ததும் அழகானதும் கிழத்தனமில்லாததும் சர்வலக்ஷணங்களுள்ளதுமாகிய உச்சைசிரவஸ் என்னும் ஓர் குதிரை தங்களுக்குச் சமீபத்தில் வரக்கண்டார்கள்" என்று சொன்னார்.

இவ்விதம் சூதர் சொல்லக்கேட்ட சௌனகர், "தேவர்கள் எவ்விதம் அமிர்தம் கடைந்தார்கள்? எங்கு எதன் பொருட்டுச் செய்தார்கள்? அமிர்தமுண்டான பிறகு என்ன உண்டாயிற்று? மிகுந்த காந்தியுள்ளதும் சிரேஷ்டமானதுமாகிய அந்த உச்சைசிரவஸ் என்னும் குதிரை உண்டானதற்குக் காரணம்யாது?" என்று கேட்கச், சூதர் கூறுகிறார்.

அநந்த சக்தியுள்ள தேவதேஜஸுக்கு இருப்பிடமும் சிலாக்கியமுமான மேருமலையானது மிகவும் பிரகாசமுள்ளது. சொர்ணச் சிகரங்களோடு விளங்குவது. சூரியனுடைய ஒளியைத் திரஸ்காரம் செய்யக்கூடியது. தேவகந்தர்வர்கள் சேவிக்கத் தகுந்தது. நிகரற்றது. ஆக்ரமிக்கக் கூடாதது. பாவிகள் காணொண்ணாதது. கோரமான துஷ்டமிருகங்களும், திவ்ய ஔஷதிகளும் நிறைந்தது. சொர்க்கலோகத்தை அளாவ வளர்ந்திருப்பது. சாமானியர்களுடைய மனத்திற் கெட்டாதது. அநேக நதிகளுக்கு உற்பத்திஸ்தானம். பலவகை விருக்ஷங்களையுடையது. பலவிதமான பறவைகள் சப்தித்துக்கொண்டிருக்கும் மகிமை வாய்ந்தது. ஒப்புயர்வற்ற அழகினையுடையது. இந்தமகாமகிமை பொருந்திய மேருமலையின் சிகரத்திலேறித் தேவர்களனைவரும் அமுதங்கடைவதைப்

பற்றி யோசனைசெய்தார்கள். இவ்விதம் தேவர்கள் கூடி யோசனை செய்யும் சமையத்தில் நாராயணமூர்த்தி பிரமதேவனை நோக்கி, "தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலில் ஔஷதிகளையும், இரத்தினங்களையும் போட்டுக் கடைந்தால் அமுதமுண்டாகும்" என்று கூறினார்.

## அத்தியாயம் 6.

பிறகு தேவர்களனைவரும், மேகசிகரங்கள் போன்ற கொடு முடிகளால் அலங்கரிக்கப்பட்டதும், கொடிகள் நிறைந்திருப்பதும், அநேக விதமான பறவைகள் கூடி விளையாடுவதும் அநேக தாதுக் கள்மலிந்து கின்னரர்கள் அப்ஸரஸ்திரீகள் தேவர்கள் இவர்கள் சேவிக்கத் தகுந்ததும், பதினோராயிரம் யோசனை தூரம் உயர்ந்து நிற்பதும், பூமிக்குக் கீழ்ப்பதினோராயிரம் யோசனை தூரம் சென்றிருப்பதும், பருவதங்களுக்குள் சிறந்ததுமான மந்தரபர்வதத்தைப் பேர்க்க யத்தனித்தார்கள். அதைப்பெயர்க்க முடியாமல்விஷ்ணுவையும் பிரமனையும் அடைந்து, "நீங்கள் எங்களுடைய நன்மையின் பொருட்டு மந்தரகிரியைப் பெயர்க்கத்தக்க முயற்சி பண்ணிக்கொள்ள வேண்டும்," என்று கேட்டுக்கொண்டனர். சௌனகரே! தாமரைமலர்போன்ற கண்களையுடைய பகவான் நாராயணமூர்த்தி பிரமனை நோக்கி, அவ்விதமே செய்வோம் எனத் தெரிவித்து உடனே ஆதிசேடனை ஏவினார். பிறகு அபாரசக்திவாய்ந்த ஆதிசேடன் எழுந்து வனம், வனதேவதைகளுடன் கூடின அந்த மந்தர பருவதத்தைப் பெயர்த்தார்.

பிறகு தேவர்கள் மந்தர பருவதத்துடன் சமுத்திரம் வந்து, "சமுத்திர ராஜனே! நாங்கள் அமுதம் பெறுவதன் பொருட்டுக் கடலைக்கடையப் போகிறோம்" என்று கூறினார்கள். சமுத்திர ராஜன், "அந்த அமுதத்தில் எனக்கும் பங்கிருக்கவேண்டும். அப்படியானால், நான் மந்தரபருவதம் சுழலுவதாலுண்டாகும் தொந்தரையைப் பொறுப்பேன்," என்றான். இதைக் கேட்டதும் தேவர்களும், அசுரர்களும் கூர்மாவதாரங்கொண்டு சமுத்திரத்திலிருக்கும் பகவானைப் பார்த்து, "தாங்கள் இந்தப் பருவதத்தைத்தாங்கவேண்டும்," என்று பிரார்த்தனைசெய்துகொண்டார்கள்,

கூர்மராஜனாகிய பகவான் அப்படியே செய்கிறேனென்று ஒப்புக்கொண்டதும் அதன் முதுகில் மந்தரபருவதத்தை வைத்தார்கள். அந்தப் பருவதத்தை இந்திரன் வஜ்ராயுதத்தால் நான்கு பக்கங்களிலும் அடித்து, அசைந்திருக்கும்படி செய்தான். மந்தரபர்வதத்தை மத்தாகவும், வாசுகியைக் கயிறாகவுங்கட்டி ஜலாதாரமாகிய சமுத்திரத்தைக் கடையத் தொடங்கி அசுரர்கள் வாசுகியின் தலைப்பக்கத்தையும், தேவர்கள் அதன் வால் பக்கத்தையும் பிடித்துக்கொண்டார்கள். அசுரர்கள் வாசுகியின் தலையை அடிக்கடி தூக்கிப்போட்டு வேகமாக இழுத்தார்கள். அதனால் வாசுகியின் முகத்திலிருந்து ஜுவாலைகளுடன் காற்றுண்டாயிற்று. வாசுகி கக்கின விஷமானது சமுத்திரஜலத்தோடு கலந்தது. அப்பொழுதும் தேவாசுரர்கள் கடைந்துகொண்டே இருந்தார்கள். ஆதலால் ஆலகால விஷமுண்டாயிற்று. தேவாசுரர்கள் அந்த விஷத்தால் எரிக்கப்பட்டு மிகுந்த வருத்தமடைந்து பயந்து அவ்விடம் விட்டோடி பிரமனிடம் சென்று, "அமிர்தங்கடையும்போது பிரளயகாலாக்கினிக்குச் சமமான விஷமுண்டாயிருக்கிறது. அதனால் நாங்கள் மிகுந்த தாபத்தையடைகிறோம். உலகமும் தகிக்கப்படுகின்றது. அதையொழித்துக்காக்க வேண்டும்," என்று கூறினார்கள். இதைச்செவியுற்றதும் பிரமதேவன் லோகேசுவரனும், மூன்று கண்களையுடையவனும், திரிசூலந்தரித்தவனும், தேவர்களுக்குத் தேவனுமாகிய உமாபதியைத் தியானஞ் செய்தார்.

பிரமதேவர் தியானம் செய்வதைப் பரமசிவன் அறிந்து அப்பொழுது தேவருக்குப் பிரத்தியட்சமானார். பிரமதேவர் அவரிடம் நடந்த விஷயத்தை நன்றாகக் கூறினார். 'தேவாதி தேவர்களுக்கும் பிரபுவாகிய சிவன் அதைக்கேட்டதும் உலகத்திற்கு இதஞ்செய்யக் கருதி கடுமையான அந்த விஷத்தைப்பானம் செய்தார். ஜகத்பிரபு தேவர்களுக்கு இதஞ்செய்ய எண்ணி அந்த விஷத்தைக் கழுத்திலேயே நிறுத்திக்கொண்டார். கழுத்தில் கறுப்பு வர்ணமுண்டானபடியால் அவருக்கு 'நீலகண்டர்' என்னும் திவ்விய திருநாமம் ஏற்பட்டது. நிகரற்ற தேஜஸையுடைய பரமசிவன் விஷத்தைப்பானஞ்செய்த பின்னர், தேவர்கள் முன் போலவே அமிர்தமதனம் செய்தார்கள்.

அவர்கள் கடையும் போது வாசுகியின் முகத்திலிருந்து முன்போலவே புகை, ஜுவாலை இவைகளுடன் காற்று வீசிற்று. அங்

தப் புகையின் வேகத்தால் மிகுந்த தாபத்தையும் சிரமத்தையும் அடைந்த தேவர்களின்மேல் மின்னல் இடி இவைகளுடன் மேகங்கள் மழை பொழிந்தன. அந்த மந்தர பருவதத்தின் சிகரத்திலிருந்து புஷ்ப வருக்ஷங்கள் நாலாபக்கங்களிலும் விழுந்தன. அப்பொழுது மந்தர பருவத்தினால் உண்டாகும் ஓசை, பெரும் மேக சப்தம் போலிருந்தது. சமுத்திரத்திலுள்ள அநேக ஜீவன்கள் பருவதத்தினால் உபத்திரவமடைந்தன. பாதாளலோகத்திலிருக்கும் வருணனைச் சேர்ந்த பூதங்களும் நாசமடைந்தன.

பருவதம் சுழலும்போது அதன் உச்சியிலிருந்த மரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்து கொண்டு பறவைகளுடன் விழுந்தன. மரங்கள், அவ்விதம் உராய்தலினால் உண்டான அக்னி ஜ்வாலைகளுடன் மந்தர பர்வதத்தை மின்னல்களோடு கூடிய நீலமேகம்போல் சூழ்ந்து கொண்டன. அப்பொழுது அந்த மலையிலிருந்து வெளிக்கிளம்பிய யானை சிங்கம் முதலிய மிருகங்களையும் தகித்தது. அதனால் பலவகையான பிராணிகளும் இறந்தன. இங்ஙனம் மந்தர பருவதத்தைத் தகிக்கும் அக்னியைத் தேவேந்திரன் மேகஜலத்தால் அவித்தான். பிறகு அம்மரங்களிலிருந்து பலவகையான பால்களும் ஔஷதிரஸங்களும் பெருகிக் கடலில் விழுந்தன. அமுதத்தன்மை வாய்ந்த அந்த மரங்களின் இரசத்தினாலும் மலையிலிருந்து தங்கம் உருகிப் பெருகுவதினாலும் தேவர்கள் மரணமடையாதிருக்கும் தன்மையையடைந்தார்கள். பாலரூபமான அந்தக்கடல் நீரில் உத்தமமான இரஸங்கள் கலந்ததும் பாலாயிற்று. அந்தப்பாலிலிருந்துப் வெண்ணெயுண்டாயிற்று.

பிறகு தேவர்களனைவரும் பிரமதேவரிடம் சென்று, "அசுரர்கள் நாகர்கள் உள்பட நாங்களெல்லோரும் மிகவும் சிரமமடைந்தோம். கடலைக்கடையத் தொடங்கி வெகு நாளாயின. இன்னும் எங்களுக்கு அமுதம் கிடைக்கவில்லையே," என்று முறையிட்டார்கள்.

இங்ஙனம் தேவர்கள் கூறக்கேட்ட உலகங்களுக்குப் பிதாமகராகிய பிரமன் நாராயணமூர்த்தியிடம் சென்று "விஷ்ணுவே! இந்தத் தேவர்களுக்குப் பலத்தையுண்டுபண்ணவேண்டும்; எங்களெல்லோருக்கும் நீர்தான் கதி" என்றுரைத்தார்கள். நாராயணமூர்த்தி, இந்தக்காரியத்தில் முயற்சியுள்ள உங்களனைவருக்கும் நான் பலத்தைக்கொடுக்கிறேன். மந்தரகிரியைச் சுழலச்செய்து கடையுங்கள்"

என்றார். இங்ஙனம் விஷ்ணுபகவான் கூறியதும் தேவாசுரர்கள் மிகுந்த வலிமைபெற்று மீண்டும் பாற்கடலைக் கலக்கினார்கள். அதிலிருந்து விஷம் பெருகிற்று. அதைப்பிரமன் பரமசிவனுக்குத் தெரிவித்தான். பரமசிவன் உலகங்களின் நன்மைக்காக அதை விழுங்கினார். பிறகு கறுத்த மேனியுடன் ஸர்வாபரணாலங்காரமுடைய ஜ்யேஷ்டாதேவி உண்டானாள்.

இதன்பின் குளிர்ச்சியான ஆயிரங் கிரணங்களுடனும் நிர்மலமான சரீரத்துடனும் சந்திரன் தோன்றினான். பிறகு வெளுப்பு வஸ்திர முடுத்த இலக்ஷ்மிதேவியும், பின் சுராதேவியும் பிறகு வெள்ளைக்குதிரையும் உண்டாயிற்று. பிறகு திவ்யமணியாகிய கௌஸ்துபம் உண்டாயிற்று. மிகுந்த பிரகாசமுடைய இந்த மணியானது ஸ்ரீனிவாசனுடைய மார்பையடைந்தது. இதன்பின் எண்ணியபடி எதையுமளிக்கத்தக்க பாரிஜாதம், காமதேனு இவ்விருவிருக்ஷங்களும் உண்டாயின. பிறகு நான்கு தந்தங்களையுடைய ஐராவதம் என்கிற பெரிய யானையுண்டாயிற்று. ஜ்யேஷ்டாதேவி, சந்திரன், லக்ஷ்மிதேவி, சுராதேவி, உச்சைசிரவஸ், கௌஸ்துபம், அப்ஸரஸ்திரீகள், ஐராவதம் என்றயானை இவைகள் தேவர்களிருக்குமிடம் சென்றன.

இதன்பின் அழகான சரீரமுடைய தன்வந்திரி என்பவர் வெண்மை வர்ணமுள்ள அமுதம் நிறைந்த குடத்தையெடுத்துக் கொண்டு தோன்றினார். அதைக்கண்டு தேவாசுரர்கள் ஒருவர்க்கொருவர் கலகமிட்டுக்கொண்டு கூச்சலிட்டனர். இதையறிந்த மகாவிஷ்ணு தமது மாயையால் ஓர் பெண்ணுருவமெடுத்துக் கொண்டார். அசுரர்கள் அந்தப் பெண்ணைக்கண்டு மயக்கங்கொண்டு அமுதத்தை அவளிடம் கொடுத்துவிட்டார்கள். மகாவிஷ்ணு அமுதத்தைவாங்கித் தேவர்களுக்குக்கொடுத்துவிட்டார். அதைக்கண்டு அசுரர்கள் பெருங் கூச்சலிட்டார்கள்.

---

## அத்தியாயம் 7.

---

பிறகு அசுரர்களெல்லாரும் கவசங்களைத் தரித்துக்கொண்டு ஒன்றுசேர்ந்து ஆயுதபாணிகளாய்த் தேவர்களை எதிர்த்தார்கள். நாராயணமூர்த்தி நரனோடு கூடிக்கொண்டு அமுதத்தைக் கவர்ந்து

கொண்டார். பிறகு பெருங்கலகமுண்டாயிற்று. இச்சமயம் தேவர்களனைவரும் விஷ்ணுவினிடமிருந்து அமுதத்தை வாங்கிப் பானம் செய்தனர். நாராயணன் தேவர்களுக்கு அமுதபானஞ் செய்விக்கையில் வில்லாளிகளாகிய அசுரர்கள் அதைத்தடுத்து அமர்புரிந்தார்கள். அவர்களை அமுதபானஞ் செய்ததால் மிகுதியான வலிமையடைந்த தேவர்கள் எதிர்த்தார்கள். தேவர்கள் அமுதபானஞ் செய்யுஞ் சமயத்தில் இராகு தேவரூபங்கொண்டு அவர்களோடு கலந்து அமுதபானஞ் செய்தான். இதைச் சந்திரசூரியர்கள் இவன் அசுரனாகிய இராகுவெனக் காட்டிக்கொடுத்தனர். அதையறிந்த நாராயணமூர்த்தி தமது சக்ராயுதத்தினால் அமுதபானஞ்செய்யும் இராகுவின் அலங்காரமான சிரசைச் சேதித்தனர். சக்ராயுதத்தால் வெட்டுண்ட இராகுவின் மலைச்சிகரம்போன்ற சிரசு ஆகாயத்திற்கிளம்பி பேரிரைச்சலிட்டது. கழுத்திற்குக் கீழ்ப்பட்ட கபந்தம் பூமியில் விழுந்து பதின்மூவாயிரம் யோசனை தூரம் நடுக்கமுண்டாக்கிற்று. அதுமுதல் இராகு சந்திரசூரியர்களிடம் பகைகொண்டு இன்னமும் அவர்களைத்தொந்தரவு செய்துவருகிறான்.

நாராயணமூர்த்தி நிகரற்ற பெண்ணுருவத்தை விட்டு அச்சமுறத்தக்க அநேக ஆயுதங்களைக்கொண்டு அசுரர்களை நடுங்கும்படி செய்தார். பிறகு கடற்கரையில் தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் பெரும்போர் மூண்டது. கூர்மையான ஈட்டிகளும், தோமரம் முதலிய ஆயுதங்களும் பூமியில் விழுந்தன. குரூரமான பட்டயம் என்ற ஆயுதத்தால் தலைகள் அறுபட்டன. உருக்கின சொர்ணத்தைப் பொத்த மலைகள் நிறைந்த சிகரங்கள் பூமியில் விழுந்தன. உதிரம் பொதிந்த சரீரமுடைய அசுரர்கள் தாதுக்களால் சிவந்த மலைச்சிகரங்கள் போல் பூமியில் விழுந்தார்கள். அங்கங்கு ஆ! ஆ!! என்ற இரைச்சலுண்டாயிற்று. சூரியனும் சிவந்தான். ஒருவர்க்கொருவர் பரிசம் முதலிய ஆயுதங்களாலும் குத்திக்கொண்டு போர்புரிந்தார்கள். அவர்கள் அச்சமயம் போடும் சப்தமானது ஆகாயத்தை யளாவி நின்றது. அங்கங்கே வெட்டு, பிள, அடி, பிடி, ஓடு, சமீபத்தில் வா என்று அதிக பயத்தைக் கொடுக்கும் சப்தங்களுண்டாயின.

இங்ஙனம் கடும்போர் நடந்துகொண்டிருக்கையில் நரநாராய

மேலான வில்லைநோக்கி, அசுரர்களைச் சங்கரிக்க எண்ணங்கொண்ட நாராயணமூர்த்தி சக்ராயுதத்தை நினைத்தார். பகவான் நினைத்த அந்தக்கணமே பகைவர்களைச் சங்கரிக்கவல்லமையுள்ளதும் மிகுந்த காந்தியுள்ளதும் தீமையைப் போக்குவதும் பயங்கரமானதும் சகிக்கமுடியாததும் மேலானதுமான சக்ராயுதமானது ஆகாயத்திலிருந்து வந்தது. ஜ்வலிக்கும் அக்னிக்குச் சமமாக விளங்குவதும் பகைவர்களின் பட்டணங்களை அழிக்கத்தக்க ஆற்றலமைந்ததுமான சக்ராயுதத்தை, யானையின் துதிக்கை போன்ற கைகளையுடைய நாராயணன், பகைவர்களாகிய அசுரர்களின் மேல் பிரயோகித்தார். புருஷோத்தமனால் விடப்பட்ட பிரளயகாலாக்னிக்குச் சமமான சக்ராயுதம் அசுரர்களைப் பலவிதமாகத் துண்டித்தது. அக்னிபோல் மேலும் மேலும் எரிக்கிறது. ஆகாயத்திலும் பூமியிலும் வெட்டுண்டு பிசாசுபோல அசுரர்களின் இரத்தத்தைக் குடித்தது. அதிபராக்ரமசாலிகளும் மலைபோன்ற மேகங்களுக்குச் சமமானவர்களுமாகிய அசுரர்கள் மனதில் தைரியங்கொண்டு உற்சாகத்துடன் ஆகாயத்தில் பாய்ந்து மலைகளைக்கொண்டு தேவர்களைத் தொந்தரவு செய்தார்கள். பலவிதமான மேகங்களைப்போல் கத்திக்கொண்டு மேலெழுந்து பயத்தை உண்டுபண்ணினார்கள். மலைகளைப் போலுருக்கொண்டு கூச்சலிட்டார்கள். அப்பொழுது காடு மலைகளுடன் பூமியானது நடுங்கிற்று.

அதிபயங்கரமான இந்த யுத்தத்தில் நரன், மேலான சொர்ணாபரணங்களுடன் கூடிய பாணங்களால் ஆகாயத்தை மறைத்து, பருவதசிகரங்களைத் தகர்த்து அழித்தார். இங்ஙனம் தேவர்களால் உபத்திரவிக்கப்பட்ட அசுரர்கள் ஜ்வலிக்கும் அக்னிக்கொப்பாக விளங்கும் சக்ராயுதத்தின் கோபத்திற்குப்பயந்து சமுத்திரத்திற்குட் புகுந்தும் பூமியில் ஓடியும் மறைந்தனர். பிறகு வெற்றிபெற்ற தேவர்கள் மந்தர பருவதத்தைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். அது மகிழ்வுற்றுத் தன்னிருப்பிடம் சென்றது. மேகங்கள் வந்தபிரகாரம் எங்கும் முழக்கிக்கொண்டு சென்றன. தேவர்களும் பரமானந்தபரிதர்களாகித் தம்மிருப்பிடம் சென்றனர். தாங்கள் கொணர்ந்த அமுதத்தைப் பத்திரமான இடத்தில்வைத்து அதைப்பாதுகாக்கப் பலமுள்ள தேவர்களுடன் நரனுக்கு அதிகாரம் கொடுத்தார்கள்.

———

## அத்தியாயம் 8.

நேர்த்தியானதும் நிகரற்ற வீரியமுள்ளதுமான உச்சைசிரவஸ் என்னும் குதிரையுண்டானதற்குக் காரணமான அமுதங்கடைந்த வரலாற்றைக் கூறினேன். கத்ருவென்பவள் உச்சைசிரவஸ் என்னும் அந்தக் குதிரையைப் பார்த்தவுடன் வினதையைப் பார்த்து "ஏ வினதே! உச்சைசிரவஸ்என்ற குதிரை என்னவர்ணம்? சீக்கிரம் தெரிந்து சொல்," என்று கேட்டாள். உடனே வினதை "மங்களவடிவமுள்ள கத்ருவே! உச்சைசிரவஸ் என்ற குதிரை வெண்மை நிறமுடையதுதான். நீ நினைப்பதென்ன? தெரிந்தால் தெரிவி. பிறகு இதுவிஷயமாகப் பந்தயம் ஏற்படுத்திக் கொள்வோம்," என்று சொன்னாள். கத்ரு, "கறுப்பு வர்ணமுடையதென்று கருதுகிறேன்," என்றாள். "நீ என்னுடன் வா, நான் சொன்னபடியிருந்தால் நீ எனக்கு அடிமையாகவேண்டும். நீ சொன்னபடியானால் நானுனக்கு அடிமையாகிறேன்" எனக் கூறினாள். வினதை, "சரி செய்வோம்; நாளையதினம் அந்தக் குதிரையைப்பார்ப்போம்" என்றாள். பிறகு இருவரும் தத்தம் வீட்டுக்குச் சென்றார்கள்.

வீட்டுக்குச்சென்றதும் கத்ருவானவள், தன்னுடைய ஆயிரம் புத்திரர்களையும் பார்த்து, "நான் வினதைக்கு அடிமையாகாமலிருப்பதற்கு நீங்கள் மைபோன்ற நிறமுடைய மயிர்களாகி உச்சைசிரவசின் சரீரத்தை யடையுங்கள்" என வஞ்சகமாகக் கட்டளையிட்டனள். சில சர்ப்பங்கள் அவள் கூறியதற்கு உடன்படவில்லை. அவைகளைக் கத்ரு, "பாண்டவ வம்சத்தில் ஜனித்த மகா புத்திசாலியாகிய ஜனமேஜயராஜனுடைய ஸர்ப்பயாகம்நடக்கப் போகிறது. அப்பொழுது அக்னிபகவான் உங்களைப் பொசுக்கப் போகிறான்," எனச் சபித்தாள்.

இங்ஙனம் கத்ரு ஸர்ப்பங்களுக்குச் சாபமளித்ததைக் கேட்ட பிரமதேவர் தேவர்களைப்பார்த்து, "சர்ப்பங்கள் கொடியவிஷமுள்ளவைகள். மிகுந்தபலமுள்ளவைகள். பிறரைப் பிடிக்கும் சுபாவமுள்ள சர்ப்பங்களுக்கு அவைகளின் தாயாகிய கத்ரு, ஜனங்களின் நன்மைக்காகப் பிராணநாசமுண்டாகும்படியான சாபம் கொடுத்தது தகும்" என்று கூறி கத்ருவைப் புகழ்ந்தார். பிறகு

பிரமதேவன் கசியபரிடம் சென்று, "உன்னால் உண்டுபண்ணப்பட்ட மிகுந்த விஷமும், பெரிய உடலுடனும் கூடிய ஸர்ப்பங்களைக் கத்ரு சபித்தாள். அதைக்குறித்து நீ எவ்வகையிலும் சினங்கொள்ளத்தகாது. ஸர்ப்பயாகத்தில் ஸர்ப்பங்கள் அழிந்துபோவதென்பது முந்தியேற்பட்ட விஷயந்தான்" என்று கூறி, அவரைச் சந்தோஷப்படுத்திவிட்டு அவருக்கு விஷங்களைப் போக்கவல்ல ஓர் வித்தையையும் உபதேசித்துச் சென்றனர்.

இங்ஙனங் கடுஞ்சாபமடைந்த ஸர்ப்பங்களில் கார்க்கோடகன் என்னும் சர்ப்பம் தாயைப்பார்த்து, "அம்மா! நான் மைபோன்ற நிறமுடைய மயிராகி உச்சைசிரவஸ் என்ற அக்குதிரையை யடைகிறேன். நீ உன் சபதத்தைத் தணித்துக்கொள்" என, கத்ரு, "சரி, அப்படியே யாகட்டும்" என்று கூறினள்.

---

## அத்தியாயம் 9.

தவத்தையே பொருளாகக்கொண்ட சௌனகமுனிவரே! பிறகு அன்றிரவு சென்றபொழுது புலர்ந்ததும் சகோதரிகளாகிய கத்ரு, வினதை இருவரும் அந்தக் குதிரையின் நிறத்தைக் கண்டறிந்து ஒருவரை ஒருவரை யடிமையாக்கிக்கொள்ளவேண்டுமென்கிற எண்ணமேலிட்டவர்களாகிக் கோபத்துடன் காடுகள் நிறைந்து மிக அழகாகவிளங்கும் கடற்கரையை யடைந்தார்கள்.

ஜலாதாரமாகிய அந்த சமுத்திரமானது மிகுந்த ஆழமாயும் பேரிரைச்சலுடன் கூடியதாயுமிருந்தது. அங்கு கொடிய குணமுள்ள பயங்கரமான திமிங்கிலங்கள் உலாவிக்கொண்டிருந்தன. விகாரமானதும் பலவேறுருபமுள்ளதுமான அநேக ஜந்துக்கள் நிறைந்திருந்தன. ஒருவராலும் ஆக்ரமிக்க முடியாத ஆமைமுதலிய ஜந்துக்களும் உலாவின. நவரத்தினங்களும் நிறைந்திருந்தன. வருணனுக்கு வாசஸ்தலமாயும் ஸர்ப்பங்களுக்கும் அசுரர்களுக்கும் இருப்பிடமாயும் நதிகளுக்குப் பதியாயும் அசுரர்களுக்கு இருப்பிடமாயும் அமரர்கள் அமுத மதனஞ் செய்த இடமாயும் புண்ணிய தீர்த்தங்களையுடையதாயுமிருந்த அந்த சமுத்திரஜலத்தில் பெரிய பெரிய சுழல்களுண்டாயின. சகல பிராணிகளுக்கும் பயத்தை உண்டுபண்ணக் கூடியதாய் இருந்தது அந்த ஜலத்தின் வேகம். அங்குகாணப்படும் அலைகள் கூத்தாடுவதற் கொப்பவிளங்

கின. சந்திரன் விருத்தியாகும் போது விருத்தியாவதும் குறையும் போது குறைவதுமாகிய அலைகளையுடையதும் சங்கத்திற்கு உற்பத்திஸ்தானமாக விளங்குவதும், மேலானதும் நிகரற்ற பராக்ரமமுடைய நாராயணமூர்த்தி பூமியைக்கொண்டுவர வராகவதார மெடுத்தபொழுது கலக்கமடைந்த ஜலம் நிறைந்துள்ளது மான அந்தக் கடல், நூறுவருடம் வரையில் தவம்புரிந்த கத்திரி மகாமுனிவர்களும் காணமுடியாத ஆழமுடையதா யிருந்தது. பிரளயகாலத்தில் அத்தியாத்தும யோக நித்திரையை அங்கீகரித்த பத்மநாபருக்குச் சயனார்கமானதும், வடவாக்கினிக்கு ஜலமாகிய ஹவிஸை யளித்ததுமான அந்தக்கடல் கரைகடந்து விரிந்திருந்தது. அநேக நதிகள் வந்து சங்கமமாகக் கூடியதும் இந்திரனுடைய வஜ்ராயுதத்திற்குப் பயந்து விழுந்த மைனாக பருவதத்திற்கு அபயமளித்ததும், பாலகீடையாக யுத்தஞ்செய்யும்போது துன்பத்தை யடைந்த அசுரர்களுக்குப் புகலிடமானதும், ஆகாசம் போன்றதும் பாதாளத்திலிருக்கும் அக்னிஜ்வாலையினால் பிரகாசிப்பதும், பிரசித்தியுள்ளதுமான அந்தக்கடலைக் கண்டார்கள்.

---

## அத்தியாயம் 10.

---

ஸர்ப்பங்கள், "நாம் நமது தாயாகிய கத்ருவின் வார்த்தையைக் கேட்கவேண்டும். அவள் தன் மனோரதம் நிறைவேறாமற்போனால் கோபத்தினால் நம்மைக் கொளுத்திவிடுவாள். அவள் நம்மை அனுக்கிரகிக்கவேண்டுமென்ற எண்ணங்கொண்டால், இந்தச் சாபத்திலிருந்து நம்மெல்லோரையும் விடுவிப்பாள்," என நினைத்து அந்த உச்சைசிரவஸ் என்னும் குதிரையின் வாலைக்கறுப்பு வர்ணமுள்ளதாகச் செய்யத் தீர்மானித்து, கருப்பு வர்ணமுள்ள மயிர்கள் போலிருந்தார்கள்.

இச்சமயம் தக்ஷப் பிரஜாபதியின் பெண்களும், சகோதரிகளுமான கத்ரு வினதைகள் இருவரும் தங்கள் சபதத்தை உறுதிப்படுத்திக்கொண்டு குதிரையிருக்குமிடம் சென்றார்கள். குதிரைகளுக்குள் சிறந்ததும், மிகுந்த வேகமுள்ளதும், சந்திர கிரணங்கள் போன்ற காந்தியுள்ளதும், கறுப்புவர்ணமுள்ள வாலையுடையதுமான உச்சைசிரவஸ் என்னும் குதிரையை இருவரும் கண்டார்

கள். வால்மயிர்கள் கறுப்பாக விருக்கக்கண்ட வினதை மிகவும் துக்கங்கொண்டாள். அவளை கத்ரு தனக்கு அடிமையாயிருந்து வேலைசெயயும்படி கட்டளையிட்டாள். பந்தயத்தில் தோல்வியடைந்த வினதை மிகவும் துக்கமடைந்து கத்ருவுக்கு அடிமையானுள்.

இச்சமயத்தில் குறித்தகாலம் வந்தவுடன் தாயாகிய வினதையில்லாமல் முட்டையை உடைத்துக்கொண்டு கருடன் தோன்றினுன். கருடன் மிகுந்த பலசாலியாகவும், திசைகளெல்லாவற்றையும் பிரகாசப்படுத்தத் தக்கபடி நினைத்த உருவம் எடுக்கும் தன்மையுள்ளவனுகவும், தன்னிஷ்டப்படி சஞ்சரித்துத் தன்னிஷ்டப்படி வீரியத்தை விருத்தி செய்துகொள்பவனுகவும் விளங்கினுன். பிரகாசம்பொருந்திய அக்னிக்கூட்டம்போலவும் இருந்தான். கண்கள் மின்னல்போலிருந்தன. தேககாந்தி பிரளயகாலாக்னிக்குச்சமானமாக இருந்தது. அவன் முட்டையில் இருந்து வெளிப்பட்டதும் பயங்கரமாகவும், பயங்கர சப்தத்துடனும், இரண்டாவது வடவாக்னிபோல் ஆகாயத்தில் சென்ருன். தேவர்களெல்லாரும் கருடனைக் கண்டதும் அக்னிபகவானைச்சரணமடைந்து விசுவரூபியாகிய அவரிடம் "ஏ அக்னி தேவரே! நீர் விருத்தியடைய வேண்டாம். எங்களைப் பொசுக்காமல் இருக்கவேண்டும். இதோ உம்முடைய கூட்டம் பரவி எங்கும் விருத்தியாகின்றது" என்ருர்கள். அக்கினி பகவான், "அசுரர்களுக்குச் சத்ருக்களாகிய தேவர்களே! நீங்கள் நினைக்கிறபடி அல்ல. இவன் எனக்குச் சமமான தேஜஸும் பலமுமுடைய கருடன். வினதைக்கு ஆனந்தத்தை விருத்தி செய்யக்கூடியவன். இவனைக்கண்டு உங்களுக்கு பிரமம் ஏற்பட்டது. இவன் சர்ப்பங்களை நாசம் செய்கிறவன். கசியபரது புத்திரன். அதிபலசாலிகளாகிய தேவர்களுக்கு இதஞ் செய்கிறவன். அசுரர்களுக்கும், அரக்கர்களுக்கும் பகைவன். இவன் விஷயத்தில் நீங்கள் சிறிதும் அஞ்சவேண்டாம் என்னுடன் சேர்ந்து பாருங்கள்," என்று சொன்னுர்.

இவ்விதம் அக்னிபகவான் கூறியதும் தேவர்கள் முனிவர்கள் வெகு தூரத்திலேயே நின்று கருடனைப் பின்வருமாறு ஸ்தோத்திரம் செய்தார்கள்.

"ஏ பக்ஷி ராஜனே! நீ சகலமும் அறிந்தவன், பாக்கியசாலி, தேவன், பிரபு, சூரியன் போன்ற காந்தியுள்ளவன், பரமேஷ்டி, பிரஜைகளுக்குப் பதி, நீ இந்திரன், ஹயக்ரீவன், எல்லோருக்

கும் ஆதி; பிரமதேவர், அக்னி, வாயு, தாதா, விதாதா விஷ்ணு, மகான், அமுத உருவ முடையவன், மகா மகிமையுள்ளவன்; நீயே எங்கள் யாவருக்கும் கதி. ஆகையால், உன்னால் எங்களுக்குப் பயம்வருவதேது? நீ பராக்கிரமம் மிகுந்தவன். சாது, தைரியவான், மகாபலவான் நீயே. ஒருவராலும் அணுகமுடியாதவன். மிகுந்த கீர்த்தியை யுடையவன் நீயே. ஏ பகவானே! உன்னிடத்தில் இறந்த காலத்திலும், வருங்காலத்திலு மிருக்கக்கூடிய சகல வஸ்துக்களு மிருக்கின்றன. அசையும் பொருள், அசையாப் பொருள்களுடன் கூடிய இந்தப் பூவுலகத்தை சூரியன் தன் கிரணங்களால் பிரகாசப் படுத்துவதுபோல் பிரகாசப் படுத்துகிறவனும் நீயே. நமனுக விருந்து பிரபஞ்சமனைத்தையும் கோபங்கொண்ட சூரியன் போல் தகிக்கிறவன் நீயே; பிரளய காலாக்னி போல், அச்சத்தைக் கொடுத்து யுகத்தைச் சுழலும்படி செய்கிறவனும் நீயே. அக்னிபோன்ற காந்தியுள்ளவனும், பராக்ரமமுள்ளவனும், மின்னல் போன்ற ஒளியுள்ளவனும், ஆகாயமார்க்கத்தில் சஞ்சரிப்பவனுமாகிய கருடபகவானே! நாங்கள் உன்னைச் சரண மடைந்தோம். ஏ பிரபுவே! உன்னுடைய தேஜஸினால் உலக முழுதும் தாபத்தை யடைகின்றன. நீயே எங்களெல்லோரையுங் காக்கவேண்டும். விமானங்களிமேலறிச் சஞ்சரிக்கும் தேவர்கள் சஞ்சரிக்க முடியாமல் வழியை விட்டு விலகிச் செல்கின்றனர். நீ தயை பொருந்திய கசியப மகாமுனிவரின் புத்திரனாகையால், சினங்கொள்ளாமல் கருணைகூர்ந்து சமனமடைந்து எங்களைக் காப்பாற்ற வேண்டும். இடிபோன்ற உன்னுடைய கர்ச்சனையால், ஆகாயம், திக்குகள், பூமி, சொர்க்கம், எங்கள் மனம் முதலியவைகள் நடுங்குகின்றன. அக்னிக்குச் சமமான இந்த தேகத்தை அடக்கவேண்டும். சினங்கொண்ட நமனுக்குச் சமமான உனது சரீர தேஜஸைக்கண்ணுற்ற எங்கள் மனம் நிலை குலைந்திருக்கிறது. ஏ பக்ஷி ராஜனே! எங்களுடைய வேண்டுகோளுக் கிரங்கி, அனுக்கிரகம் செய்து சுகமளிக்கவேண்டும்," என்று பிரார்த்தித்தார்கள்.

---

## அத்தியாயம். 11

---

"இவ்விதம் தேவர்கள் பிரார்த்தனை செய்யக் கேட்ட கருடபகவான், பயங்கரமான ரூபத்தோடு கூடிய தன் தேகத்தை அடக்கிக்கொண்டு ஒளியையும் குறைத்துக்கொண்டார். பிறகு

இச்சித்தபடி சஞ்சரிக்கத்தக்க கருடன், அருணனையும் தன்னுடைய முதுகின்பேரில் தூக்கிக்கொண்டு பிதாவின் கிருகத்திலிருந்து புறப்பட்டு கடற்கரையை யடைந்து, வினதையின் அருகே வந்து, எப்பொழுது சூரியன் உக்ரமான தன் கிரணங்களால் உலகங்களைக் கொளுத்த மனங்கொண்டானோ அப்பொழுது கிழக்குத்திசையில் சூரியன் முன்னிலையில் அருணனை வைத்தான்," என்றார் சூதர்.

சௌனகர், "பகவானாகிய சூரியன் எப்போது எதன் பொருட்டு உலகங்களைத் தகிக்கக்கருதினார். ஏன் அவ்வளவு கோபம் உண்டாயிற்று. தேவர்கள் சூரியனுக்குச் செய்த கெடுதியென்ன?" என்றார். சூதர், "குற்றமற்றவரே! இராகு அமுதபானஞ் செய்தபோது அவனைக் காட்டிக்கொடுத்ததன் காரணமாக சூரிய சந்திரர்கள் மீது இராகு விரோதம் பாராட்டி சூரியனைப் பிடித்தான். அப்பொழுது சூரியனுக்குக் கோபமுண்டாயிற்று. அதனால் சூரியன் "இந்த இராகுவுக்குத் தேவர்கள் விஷயமாக உண்டான கோபந்தானே என்னிடம் ஏற்பட்டது. அநேகருக்குத் தீங்கை விளைக்கும்படியான பாபத்தை நானே அடையும்படியாக விருக்கிறது. சமயத்தில் உதவி புரிபவன் சங்கடமடைவதில்லை என்பார்கள். அப்படியிருக்க, என்னை இராகு விழுங்கும்போது இந்தத் தேவர்கள் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகையினால், உலகங்களை நாசஞ்செய்து விடுகிறேன்," என்று தீர்மானித்து அஸ்தமனமானான். அங்கிருந்துகொண்டு உலகமழியும் படியான தாபத்தை உண்டாக்கினான்.

பிறகு முனிவர்கள் தேவர்களிடம் சென்று சூரியன் இன்றிராத்திரியில் வெகு பயத்தை உண்டுபண்ணத்தக்க வெப்பத்தை உண்டுபண்ணுவான். உதயமானால் மூவுலகங்களையும் நாசம் செய்வான்," என்றார்கள். இதைக்கேட்டதும் தேவர்கள் முனிவர்களுடன்பிரமதேவரிடம் சென்று, "இது என்ன இப்பொழுது இவ்வளவு பயமுண்டாயிருக்கிறது. இது பிரளயமென்றே தோன்றுகிறது. சூரிய உதயமானால் எவ்விதமாகுமோ தெரியவில்லையே," என்றார்கள். பிரமதேவர் அதைக்கேட்டு, "இந்த சூரியன் உதயமாவதற்கு யத்தனம் செய்கிறான். உதயமாகும்போதே உலகங்களைச் சாம்பலாகச் செய்து விடுவான். அதற்குப் பரிகாரம் முன்னமேயே ஏற்பட்டிருக்கிறது. கசியபருக்குக் குமாரனும்,

அறிவிற்சிறந்தவனும், ஒளிபொருந்திய பெருத்தசரீரமுள்ளவனும், அருணனெனப் பேர் பெற்றவனுமாகிய வினதையின் குமாரன் சூரியனுக்கு முன்னால் நின்று சாரதியாக விருந்து சூரியனுடைய ஒளியைக் குறைக்கப்போகிறான். இதனால் தேவர்களனைவருக்கும் மங்கள முண்டாகும்" என்றார். இவ்விதம் பிரமதேவர் அனுமதி பெற்ற அருணன் அவ்விதமே எல்லாவற்றையும் செய்தான். சூரியன் உதயமான வுடன் அவனை மறைத்தான். சூரியனுக்குக் கோபம் வந்த வரலாறும், அருணன் அவனுக்குச் சாரதியான விவரமும் கூறினேன். மறுபடியும் நீ கேட்ட மற்றொரு கேள்விக்குச் சமாதானம் கூறுகிறேன்.

---

## அத்தியாயம் 12

---

பிறகு அதிபராக்கிரம சாலியாகிய கருடன், பந்தயத்தில் அவமான மடைந்து கத்ருவுக்கு அடிமையாக இருந்து வரும் தன் தாய் வினதையினிடம் சென்று, அங்கிருக்கும்போது, கத்ரு வினதையைப் பார்த்து, "கடலின் நடுவில் தனிமையான இடமொன்றிருக்கிறது; அது சர்ப்பங்களுக் கிருப்பிடம்; அங்கு நான் போகவிரும்புகிறேன். என்னைத் தூக்கிக் கொண்டு போ," என்றாள். இதைக் கேட்டதும் கருடனின் தாயாகிய வினதை சர்ப்பங்களைத் தூக்கிக் கொள்ள தன் பிள்ளை கருடனுக்குக் கட்டளையிட்டுத்தான் கத்ருவைத்தூக்கிக் கொண்டாள். கருடனும் தன்மாதாவின் உத்தரவுப்படியே சர்ப்பங்களைத் தூக்கிக்கொண்டான். இருவரும் செல்லும் போது கருடன்சூரியனுக்குச் சமீபத்தில் சென்றான். அப்போது சூரியகிரணங்களின் வெப்பத்தால் சர்ப்பங்கள் மூர்ச்சையடைந்தன. அப்படித்தன் புத்திரர்கள் அவஸ்தைப் படுவதைக் கண்ட கத்ரு இந்திரனைப் பின்வருமாறு தோத்தரிக்கலானாள்.

சகலதேவர்களுக்கும் ஈசனே! உனக்கு வந்தனம்; வலன், நமுசி முதலிய அசுரர்களைச் சங்கரித்தவனே! உனக்கு வந்தனம். ஆயிரங் கண்களுடையவனே! இந்திராணிக்கு நாயகனே! உன்னை வணங்குகிறேன். ஏ இந்திரா! ஜலத்தையுண்டாக்கும் சக்திவாய்ந்தவன் நீயே. நீயே மேகம், நீயே காற்று; அக்னி மின்னல், வஜ்ரம், இடி முதலிய யாவும் நீயே; உலகங்களை சிருஷ்டிக்கிறவனும், சங்கரிப்பவனும் நீயே. சகல பூதங்களுக்கும் ஜோதியா

கவிருக்கும் சக்திவாய்ந்தவன் நீயே; சூரியனும் நீயே; மகாபூதமும் நீயே; தேவர்களுக்குள் உயர்ந்தவன் நீயே. விஷ்ணுவும்நீயே; அமுதம், சந்திரன், முகூர்த்தம், திதி, லவம் (கால அளவு) க்ஷணம் சுக்ல. பக்ஷம், கிருஷ்ணபக்ஷம் யாவும் நீயே. காஷ்டை, துருடி, சம்வத்ஸரம், ருதுக்கள், மாதம், பக்ஷம், அகோராத்திரம், பூமி, ஆகாயம், சமுத்திரம் முதலிய சகலமும் நீயே.

மகாஞானவான்களாகிய முனிபுங்கவர்களும் உன்னையே மகாகீர்த்திவாய்ந்தவனென்று புகழ்கிறார்கள். அவர்கள் உன்னைத் தோத்திரஞ் செய்து மன மகிழ்ச்சியுடன் யாகத்தில் ஸோமரஸத்தையும் ஹவிசையும் கொடுக்கிறார்கள். அவைகளை நீ அவர்கள் யாகபலனை அடைவதன் பொருட்டு ஏற்றுக்கொள்கிறாய். உன்னைப் பிராமணர்கள் எப்போதும் கொண்டாடுகிறார்கள். உனக்காக அவர்கள் வேதங்களை அத்தியயனம் செய்கிறார்கள். சாஸ்திரங்களிற்பயிற்சி பெறுகிறார்கள்,'' என்றுபலவாறுகத்துதித்தாள்.

இங்ஙனம் கத்துருதோத்திரஞ்செய்தவுடன் இந்திரன் கறுப்பு நிறமுள்ள (நீருண்ட) மேகக்கூட்டங்களைப் பார்த்து மழையை வருஷிக்கும்படி கட்டளையிட்டான். உடனே மேகங்கள் இடி, மின்னல் களுடன் மழை பொழிந்தன; ஆகாயம் சூரியசந்திர கிரணங்களில்லாமல் போயிற்று. மழைபொழியவே பூமி முழுமையும் நீர் பிரவாகமாய் ஓடிற்று. மழைஜலம்பாதாளலோகமும்சென்றது. அப்போது சர்ப்பங்கள் கத்ருவுடன் சந்தோஷமடைந்தன. பிறகு சர்ப்பங்கள் தங்கள் தாயாருடன் ரமணீயகமென்னும் தீவுக்குச் சென்றன.

---

## அத்தியாயம். 13

---

அங்கேசென்று அநேக ஜீவஜந்துக்களுக் கிருப்பிடமான இலவண சமுத்திரத்தைக் கண்டன. அவ்விடத்தில் ஓர் அழகான வனமிருந்தது. மலர்களும், கனிகளும் நிறைந்த மரங்கள் அந்தவனத்தில் அடர்ந்திருந்தன. அநேக மாடமாளிகைகளும், தாமரைத் தடாகங்களும், தெளிவான நீர் நிறைந்தமடுக்களும் நிறைந்திருந்தன. பரிசுத்தமான காற்று திவ்வியமான வாசனையோடு வீசிற்று. மனதுக்குச் சந்தோஷமாக விருந்தது. கந்தர்வர்களுக்கும், அப்ஸர ஸ்தரீகளுக்கும் பிரியமான மதங்கொண்ட வண்டுகள்

நிறைந்திருந்தன. இவ்வனத்தை கத்ருவின் புத்திரர்கள் கண்டு மகிழ்ந்து அதில் விளையாடினார்கள்; பிறகு அந்த ஸர்ப்பங்கள் கருடனைப்பார்த்து, "ஏ கருடா! நல்லதீர்த்தத்துடன்கூடின மற்றொரு தீவுக்கு எங்களைக் கொண்டுபோ; அப்பொழுது நாங்கள் அவைகளைப் பார்த்துச் சந்தோஷிப்பதுமன்றி நீயும் அநேக பிரதேசங்களைக் கண்டு களிப்பாய்," என்றன. இதைச் செவியுற்றதும், கருடன் தன் தாயாகிய வினதையைப்பார்த்து, "அம்மா! நான்ஸர்ப்பங்களின் சொல்லைக் கேட்கவேண்டுமென்பது என்ன நியாயம்," என்று கேட்டான்; வினதை, " கருடா! என்மாற்றாள் என்னுடன் பந்தயம் போட்டு, ஸர்ப்பங்களைக் கொண்டு என்னை வஞ்சித்து அந்தப்பந்தயத்தைக் கெலித்தாள். அதனால் தான் நான் அவளுக்கு அடிமையானேன்" என்றாள். இதைக்கேட்டதும் கருடன், மிகவும் வருத்தமுற்று, "ஏ ஸர்ப்பங்களா ! எதைக் கொணர்ந்து அல்லது எதைத் தெரிந்துகொண்டு அல்லது எந்தக்காரியத்தைச் செய்து நாங்கள் இந்த அடிமைத் தனத்திலிருந்து விடுபட வேண்டும்; கூறுங்கள், உண்மையைக்கூறுங்கள்," என்றுகேட்டான். உடனே நாகங்கள், "ஏ கருடா! உன் பராக்கிரமத்தினால் அமுதங் கொண்டுவா; அதன் பின் உங்கள் அடிமைத்தனம் நீங்கும்," என்றன.

## அத்தியாயம். 14

பிறகு கருடன் தன் தாயாரைநோக்கி, "அம்மா! நான் அமுதங் கொண்டுவரப் போகிறேன்; எனக்கு ஆகாரம் வேண்டும்; தங்கள் உத்தரவென்ன ?" என்றான். வினதை, "அப்பா! கடலின்மத்தியில் வேடர்களுடைய வாசஸ்தலமிருக்கின்றது. அங்கு வேடர்களுக்கு அநேக வீடுகளிருக்கின்றன. அவர்கள் மகாபாவிகள்; உலகத்தை இழந்தவர்கள்; தயையற்றவர்கள். அங்குள்ள அநேகமாயிரம் வேடர்களைப்புசித்து அமுதத்தைக்கொண்டுவா. எந்த முன்னிட்டும் அந்தணனைக் கொல்லமட்டும் நினையாதே. அந்தணர்கள் அக்கினிக்குச் சமமானவர்கள். அவர்களை வதஞ் செய்தல் தகாது. அந்தணன் சினங்கொண்டால், அக்னி, சூரியன், விஷம், ஆயுதம் இவைகளாகின்றான். அந்தணன் எல்லாப்பிராணிகளுக்கும் மேலானவன். இவைகளாலே தான் பிராமணன் சாதுக்களுக்கு வேண்

டிய வனுகிறான். நீ மிகுந்த சினங்கொண்டாலும் அந்தணனை வதம் செய்யாதே. எவரும் பிராமணனுக்குத் துரோகம் செய்யக்கூடாது. விருதசீலனாகிய ஓர் பிராமணன் சினங் கொண்டால் எல்லாரையும் பொசுக்கி விடுவான். அக்னி சூரியன் இருவராலும் அப்படிச்செய்யமுடியாது. ஆகையால் இந்த அடையாளங்களைக் கொண்டு உத்தமமான பிராமணனைத் தெரிந்து கொள். பிராமணன் நான்குவருணங்களுக்குள் சிறந்தவன். எல்லோருக்கும் பிதாவும் குருவுமாகிறான்," என்றாள். கருடன் "அம்மா! பிராமணனுடைய இலக்கணமென்ன? அவன் சுபாவமென்ன? பராக்ரமமெப்படி? அக்கினிக்குச் சமானமானவனா? பிரஸன்ன உருவத்துடனிருப்பனா? நான் பிராமணனென்று தெரிந்து கொள்வதெப்படி? இவைகளைக் காரணத்துடன் எனக்குக் கூறவேண்டும்," என்று கேட்டான்.

வினதை, "அப்பா! நீ வேடர்களை விழுங்கும் போது உன் தொண்டையில் தூண்டி முள்போல் காணப்படுகிறவனைப் பிராமணனென்று தெரிந்து கொள். அக்கினியைப்போல் சுடுமானால் அவனைப் பிராமணனென்று தெரிந்து கொள். தவிர உன் வயற்றிற் சென்றபின் ஜீரணமாகாதிருப்பவனைப் பிராமணனென்றுதெரிந்து கொள். ஆகையால், எந்தச் சமயத்திலும் பிராமணனைக் கொல்லாதே," என்று சொல்லி அவனுடைய பராக்ரமத்தை அறிந்தவளாயினும் பின்வருமாறு ஆசீர்வதிக்கிறாள்.

"அப்பா! மகனே! உன் இறக்கைகளை வாயுபகவான் காப்பாற்றட்டும். முதுகைச் சந்திர சூரியர்கள் காப்பாற்றட்டும். உனது தலையை அக்கினிபகவான் இரக்ஷிக்கட்டும். சர்வவியாபகனாகிய விஷ்ணு உனது அவயவங்களெல்லாவற்றையும் காப்பாற்றுவாராக. ஏ புத்திரா! நானும் உன் க்ஷேமத்தின் பொருட்டு, விரதம் உபவாஸம் இவைகளை யனுஷ்டித்து வருகிறேன். நீ காரியத்தை முடித்துக் கொண்டு தீங்கற்றவனாகத் திரும்பி வரக்கடவாய்" என்று வாழ்த்தி யனுப்பினாள்.

இங்ஙனம் வினதை கூறியதும் கருடன் சிறகுகளை விரித்துக் கொண்டு ஆகாயத்திற் கிளம்பி வேடர்களிருக்கும் நீஷாததேசத்திற்கு இரண்டாவது இயமன்போல் போய்ச்சேர்ந்தான். வேடர்களைச் சங்கரிக்கும் பொருட்டு ஆகாசத்தை யளாவும் வண்ணம் பெருந்தூளியை யெழுப்பினான். சமுத்திர ஜலத்தைவற்றச் செய்தான், அருகேயுள்ள பருவதங்களை அசையச் செய்தான். பிறகு

வேடர்கள்செல்லும் வழியைமறித்துக்கொண்டு வாயைத் திறந்து கொண்டு நின்றான். இதனால் வேடர்கள் திகிலடைந்து வழி தெரியாமல் ஓடிக் கருடனது வாயினுட் புகுந்தார்கள். மிகுந்த பசியுடனிருக்கிற கருடன் அச்சமயம் தன் வாயை மூடிக்கொண்டான்.

---

## அத்தியாயம் 15.

---

அப்போது ஓர் அந்தணன் தன் மனைவியுடன் கருடன் வாய்க்குள் பிரவேசித்து விட்டமையால், கருடனுடைய தொண்டையில் தணல் சுடுவதுபோலத் தோன்றிற்று. கருடன் பிராமணனெனத் தெரிந்துகொண்டு, "ஏ பிராமணசிரேஷ்டனே! நான் வாயைத்திறந்து கொள்கிறேன். நீ சீக்கிரமாக வெளிப்புறப்படு; பிராமணன் மகாபாவியேயாயினும் நான் கொல்வதில்லை" என்றான். இதைக் கேட்டதும் அந்த அந்தணன், "என்னுடன் வந்த இவள் வேடஸ்திரீ. எனக்கு இவள் மனைவியானபடியால், இவளும் என்னுடன் வெளியே வரவேண்டும்," என்று கேட்க, கருடன், "சரி, அவ்விதமே யாகுக. நீ சீக்கிரம் வேடஸ்திரீயுடன் வெளிப்புறப்பட்டுப் போ," என்றான். உடனே அவ்வந்தணன் தன்மனைவியாகிய வேடஸ்திரீயுடன் வெளியே வந்து தன்னிருப்பிடம் சென்றான். பிறகு கருடன் தன் இறக்கைகளை விரித்துக்கொண்டு ஆகாயத்திற் கிளம்பி தன் தந்தையாகிய கசியபரிருக்குமிடஞ் சென்று, அவரை வணங்கினான். கசியபர் கருடனைப்பார்த்ததும் "குழந்தாய்! நீங்களெல்லோரும் க்ஷேமமா? உனக்குவேண்டிய ஆகாரம் பூலோகத்தில் கிடைக்கிறதா? நீ எங்கே விரைவாகச் செல்கிறாய்? எனக்குச் சொல்," என்று கேட்கக் கருடன் கூறுகிறான்.

"என் தாயாரும் தமையனும் சௌக்கியமா யிருக்கிறார்கள். எனக்கு உணவு மிகுதியும் வேண்டியிருப்பதால் சௌக்கியமில்லை. நான் இப்பொழுது என் தாயாருடைய அடிமைத்தனம் நீங்கும் பொருட்டுச் சர்ப்பங்களின் விருப்பப்படி அமுதங்கொண்டு வரப்போகிறேன். என் தாயின் கட்டளைப்படி வேடர்களை ஆகாரமாகக் கொண்டேன். அப்படியும் என் பசி தணியவில்லை. ஆகையால் எனக்கு வேறு ஆகாரம் வேண்டும், பிதாவே! என் பசி, தாகம் நீங்குவதற்கும், அமுதங்கொண்டுவரச் சாமர்த்தியம் ஏற்

படுவதற்கும் தகுந்த ஆகாரத்தைத் தெரிந்து சொல்லியருள வேண்டும்'' என்றான் நசியபர், ''புத்திரா! தேவலோகத்திலும் பிரசித்தி பெற்ற ஏரியொன்றிருக்கிறது; அதில் ஒருயானைமுற்பிறப்பில் தமையன் முறையுள்ள ஓர் ஆமையைத் தலை குனிந்த வண்ணத்தில் இழுத்துக் கொண்டிருக்கிறது. இப்படி அவைகளுக்குள் ஏற்பட்ட விரோதத்தின் காரணத்தையும், அவைகளுடைய அளவையும் பற்றிக்கூறுகிறேன் கேள். இந்தக் கதை வைராக்கியத்தை விருத்தி பண்ணக்கூடியது. இக்கதையைக் கேட்கிற உனக்கு க்ஷேமமுண்டாகும். இந்த விரோதம் பிதாக்களுடைய பொருளைப் பாகித்துக் கொள்வதில் ஏற்பட்டது.

விபாவசு வென்று ஓர் மகரிஷியிருந்தார். அவர் மிகவும் கோபமுள்ளவர். அவருக்கு சுப்ரதீகனென்னும் தம்பியொருவரிருந்தார். அவர் மகாதவசி; அவர் மகாமுனிவரானாலும் தமது தமையனுடன் ஒன்றாக விருந்து பொருளை அனுபவிக்கப் பிரியமில்லாமலிருந்தார். அதனால் எப்போதும் சொத்தைப் பாகித்துக் கொடுக்கும்படி தன் தமையனைக் கேட்டுக்கொண்டேயிருந்தார். ஒரு நாள் விபாவஸு, சுப்ரதீகனை நோக்கி, ''பெருந்தவமுள்ளவனே! பாகஞ்செய்து கொள்வதில் அநேக தோஷங்கள் ஏற்படுகிறது. ஆனால் அநேகர் பாகஞ்செய்து கொள்கிறார்கள். அங்ஙனம் பாகித்துக் கொண்டவர்கள், பணத்தாசை கொண்டு சமயங்களிலும் ஒருவர்க்கொருவர் உதவி செய்துகொள்வதில்லை. பிறகு சுயநலத்திலேயே கண்ணுள்ளவர்களாகிறார்கள். இப்படித் தங்கள் ஜனங்களை விட்டுப்பிரிந்த மூடர்களிடம் அவர்கள் பகைவர்கள் உறவினர்போல நடித்துப் பேதஞ் செய்கிறார்கள். அந்த பேதபுத்திக்குள்ளானவர்கள் பிறகு நரகத்தை யடைகிறார்கள். ஆகையால், பாகஞ்செய்து கொள்பவர்களுக்குச் சீக்கிரத்தில் அநேக கெடுதிகளுண்டாகும். இதனால் தான் பாகித்துக்கொள்வதைப் பெரியோர்கள் புகழ்ந்தாரில்லை,'' என்று கூறினார்.

இவ்விதம் விபாவசு உபதேசித்ததும், சுப்ரதீகன் அவர் உபதேசத்திற் கிணங்காமல் மறுபடியும் பாகித்துக் கொள்வதிலேயே பிடிவாதமாக விருந்தான். இவ்விதம் இவன் நிர்ப்பந்தம் செய்ததும் விபாவசு, ''சுப்ரதீகா! குருவானுபதேசிக்கப்பட்ட சாஸ்திரங்

களுக்குக் கட்டுப்படாதவர்களுடைய மித்திரபேதத்தால் உன்னை யடக்க முடியாமற் போய் விட்டது. ஆகையால் நீ யானையாகப் போகக்கடவாய்,'' எனச் சபித்தார். இதைக்கேட்டதும் சுப்ர தீகர் சினந்து, "நீ யொரு ஆமையாகக் கடவாய்'' என விபாவசு வைச் சபித்தார்.

இவ்விதம் ஒருவர்க்கொருவர் சபித்துக்கொண்டதால் அவ் விருவரும் யானையாகவும், ஆமையாகவும் ஜன்மமடைந்தார்கள். கோபத்தின் கொடுமையால், இவ்விதம் ஈன ஜன்மமடைந்த அவர் கள் அந்த ஏரியில் வசித்து வருகிறார்கள். பழைய விரோதத்தை இன்னும் விடவில்லை. யானையானது கர்ச்சனையுடன் வெளியே வரும்போது ஆமையும் நீரைக்கலக்கிக்கொண்டு பெரிய சரீரத் துடன் வெளியே கிளம்புகிறது. அதைக்கண்ட யானை தன் துதிக் கையைச் சுழற்றிக்கொண்டு மிகுந்த வீரியத்துடன் அனேக வித ஜந்துக்கள் நிறைந்த அந்த ஏரியை கலக்கிக்கொண்டு அதில் விழு கிறது. ஆமையும் தன் தலையைத் தூக்கிக்கொண்டு யானையை எதிர்க்க வருகிறது. யானை ஆறு யோஜனை உயரமும் பன்னிரண்டு யோஜனை சுற்றளவுமுள்ளது. ஆமை மூன்றுயோஜனை உயரமும் பத்துயோஜனை சுற்றளவு முள்ளது. இப்படி யுத்தம்புரியும் அவ் விரு ஜந்துக்களையும் புசித்துவிட்டு நீ அமுதம் கொண்டுவா,'' என்று கூறி வாழ்த்துகிறார்.

"ஏ! கருட! தேவர்களுடன் அமர்புரியும் சமயத்தில் உனக்கு மங்களமுண்டாகட்டும்; பூர்ண கும்பங்கள், பிராமணர்கள், கோக் கள் மற்றுமுள்ள மங்கள வஸ்துக்கள் யாவும் உனக்கு நன்மை யைத்தரட்டும். ருக்குகள், சாமங்கள், பவித்ரங்கள், வேதங்கள் இவைகள் யாவும் உனக்கு, பலத்தை கொடுக்கட்டும்,'' என்று வாழ்த்தினர்.

பிறகு கருடன் கசியபர் குறிப்பிட்டதேசம் சென்று அங்கு நிர்மலமான ஓர் ஏரியைக் கண்டு அதிலிறங்கி ஓர் கையால் ஆமை யையும், மற்றொருகையால் யானையையும் எடுத்துக் கொண்டு ஆகாயமார்க்கத்தில் கிளம்பி, ஏலம்ப தீர்த்தம் வந்து தேவவிருட் சங்களின் அருகேபோனார். அப்பொழுது சுவர்ண வர்ணமுள்ள திவ்யவிருட்சங்கள் கருடனுடைய இறக்கைக் காற்றில் அடிபட்டு தம்மை மிதித்து விடுவானெனப்பயந்து நடுங்குவதுபோல் அசைக்

தன. அம்மரங்கள்யாவும், வெள்ளி, தங்கங்களாலாகியகிளைகளால் பிரகாசித்துக்கொண்டிருந்தன. அவைகளினடுவே லௌகினம் என்னும் பெயர் கொண்ட ஒரு பெரிய ஆலமரமிருந்தது. அது ஆயிரம் யோசனை உயரமுள்ளதாய் அநேக கிளைகளுடன் பறவைகளுக்குவாசஸ்தானமாயிருந்தது. அதைக்கருடன்பார்த்துமகிழ்ச்சியடைந்தான். அந்தமரமானதுகருடனைப்பார்த்து, "நூறுயோசனை நீளமுள்ள இந்தக்கிளையிலுட்கார்ந்து, இந்த யானையையும் ஆமையையும் பக்ஷிக்கக்கடவாய்," என்றது. பெரிய சரீரமுடைய கருடன் அதில் உட்கார்ந்தவுடன் அந்தக்கிளை முறிந்து போயிற்று.

கருடன் அங்ஙனம் முறிந்த அந்தக்கிளையைத் தன் காலால் பிடித்துக்கொண்டு புன்னகையுடன் அதைப்பார்த்தார். அதில் மகாஞானிகளாகிய வாலகில்லியர்களும், வைகானஸர்களும் இன்னும் மற்றுமுள்ள முனிவர்களும் தலைகீழாகத் தொங்கிக்கொண்டு தவம்புரிவதைக்கண்டான். "செய்! இவர்களைநாம்கொல்லக்கூடாது," என நினைத்தான். "இந்தக்கிளை கீழே விழுந்தால் இவர்களனைவரும் நாசமடைவார்கள்," என்று யோசித்து, அக்கிளையை முகத்தில் தாங்கிக்கொண்டு யானையையும் ஆமையையும் தன் நகங்களால் கண்டம் செய்தான். இப்படிப்பட்ட கருடனுடைய அதியற்புதமான செய்கையைக் கண்ட முனிவர்கள் அதிக ஆச்சரியமடைந்து, "இந்தப் பக்ஷிராஜன் பெரிய பளுவைத் தூக்கிக்கொண்டு ஆகாயத்திற் பறப்பதால் இவனுக்குக் கருடனென்கிற பெயர் வழங்கக்கடவது," என்று கூறினார்கள்.

பிறகு கருடன் மலைகளும் நடுங்க இறக்கைகளை வீசிக்கொண்டு ஆமை யானை இவைகளுடன்கிளையையும் விடாமல்கௌவிக்கொண்டே பறந்து, கிளையில் தொங்கிக் கொண்டிருந்த ரிஷிகளுக்குத் தீங்கு நேரிடுமென்கிற பயத்தால் ஓரிடத்திலும் உட்காராமல் வெகுதூரம் சென்று கடைசியில் கந்தமாதன மலைக்கு வந்தான். அங்கு தவம்புரிந்து கொண்டிருந்த தந்தையாகிய கசியபமுனிவரைக் கண்டான். கசியபர், திவ்விய தேஜஸுள்ளவனும், மனம், வாயு இவைகள் போன்ற வேகமுடையவனும், மலையின் சிகரம் போன்றவனும், முயற்சியுடன் வந்த பிரவாகம் போன்றவனும், எண்ணவும் அறியவும் முடியாதவனும், அக்கினிபோல் விருத்தியடைந்தவனும், தேவர்கள், அசுரர்கள், இராக்ஷஸர்கள்

இவர்களால் ஜயிக்கமுடியாதவனும், மலைச்சிகரங்களைத் தகர்த்து சமுத்திர ஜலத்தை வற்றவடித்தவனும், யமன்போன்ற கோர சொரூபனுமாகிய கருடனைப்பார்த்து, அவனுடைய மனநிலைமையை யறிந்து "ஏபுத்திரா! நீ ஸாகஸகாரியம் செய்யாதே. ஸாஹஸம் செய்தால் துன்பமடைவாய்; சூரிய கிரணங்களைப் பானம் செய்கிற வாலகில்லிய மகரிஷிகள் உன்மேற் சினங்கொண்டு உன்னைக் கொல்லாமலிருக்க வேண்டும்" என்று தெரிவித்து, மகரிஷிகளை நோக்கி, "தபோதனர்களே! கருடன் இம்முயற்சியில் பிரவேசித்தது உலக நன்மைக்காக. இது ஒரு பெரியகாரியம். ஆதலால் நீங்கள் உத்தரவு கொடுக்கவேண்டும்," என்று வேண்டிக்கொண்டனர். கசியபர் இவ்வாறு கூறியதும், வாலகில்லிய மகரிஷிகள் அந்தக்கிளையை விட்டு நீங்கி இமயமலைக்குச் சென்றனர். பிறகு கருடன் தன் தந்தையைப்பார்த்து, "ஏபகவானே! நான் இந்தக் கிளையை எங்கு போடுவேன். மனிதர்களில்லாத இடத்தை எனக்குத் தெரிவிக்க வேண்டும்," எனப்பிரார்த்தித்தான். காசியபர், மனிதர்களில்லாததும், பனிமூடிய குகைகளுடன் கூடியதும், மற்றவர்கள் மனத்தாலும் செல்லக்கூடாததுமாகிய ஓர் மலையைக் குறிப்பிட்டார். பிறகு கருடன் விஸ்தாரமான அந்த மரக்கிளை, யானை, ஆமை இவைகளுடன் அவ்விடம் விட்டுப் புறப்பட்டு வேகமாகப் பறந்து, இலட்சம் யோசனை சென்று தந்தை குறிப்பிட்ட பருவதத்தையடைந்து, அந்தக்கிளையை அதன் மீதெறிந்தான். அக்கிளை அம்மலையின்மேல் பேரிரைச்சலுடன் விழுந்தது. அப்பொழுது கருடனுடைய இறக்கைக்காற்றால் அந்தப்பர்வதம் குலுங்கிற்று. அதிலுள்ள மரங்கள் புஷ்பவர்ஷம் வருஷித்தன. ரத்தினம், சுவர்ணம், இவைகளோடு கூடிய கொடுமுடிகள் சிதறின. மரக்கிளைகளும் முறிந்து விழுந்தன. தங்கமயமான புஷ்பங்களோடு கூடிய மரக்கிளைகள், மின்னல்களோடு கூடியமேகங்கள் போல் விளங்கின. தவிர சுவர்ண தூளிகளும் பருவதத்தில் உண்டான தாதுக்களும் படிந்த மரக்கிளைகள் சூரிய கிரகணங்களால் மிகவும் பிரகாசித்தன.

பிறகு பட்சி ராஜனாகிய கருடன் அம்மலையின் கொடுமுடியில் உட்கார்ந்து யானையையும் புசித்துவிட்டு வெகு விரைவாகக்கிளம்பினான். அப்பொழுது தேவர்களுக்கு பயத்தைக் கொடுக்கும் அபசகுனங்கள் உண்டாயின. இந்திரனுடைய வச்சிராயுதமானது

எல்லாவற்றையும் பொசுக்குவது போல் ஒளிவீசின. சுவாலையுடனும் புகையுடனும் அனேகம் எரிகொள்ளிகள் ஆகாயத்திலிருந்து விழுந்தன. வசுக்கள், உருத்திரர்கள், ஆதித்தியர்கள், சாத்யர்கள், மருந்துக்கள் மற்றுமுள்ள தேவகணங்கள் இவர்களுடைய ஆயுதங்களெல்லாம் முன்நடந்த தேவாசுர யுத்தத்தில் வெருண்டது போல் வெருண்டோடின. பெருங்காற்று வீசிற்று. ஆகாயத்தில் மேகமில்லாவிட்டாலும் பெரும் முழக்கமுண்டாயிற்று.

தேவர்களுக்குத் தேவனாகிய இந்திரன் இரத்த மழைபொழியச்செய்தான். தேவர்களுடைய ஒளிமழுங்கிற்று. தேவர்களுடைய சிரசில்இருக்கும் கிரீடங்களில் தூளிகளடைந்தன. இவைகளைக்கண்ட தேவேந்திரன் மிகவும் பயந்து, தேவர்களுடன் பிரகஸ்பதிபகவானிடம், சென்று வணக்கத்துடன் அவரைப்பார்த்து, "பகவானே! பயங்கரமான இவ்வித அபசகுனங்கள் உண்டாவதற்குக் காரணமென்ன? நம்மெல்லோரையும் யுத்தத்தில் அவமானப்படுத்தும் சத்துருக்கள் யாரையும் காணேம்" என்று கேட்டான். பிரகஸ்பதி பகவான், "தேவேந்திர! நீ பெரியோர்களுக்குச்செய்த அபராதத்தால் வாலகில்லியமகரிஷிகள் தவம் செய்து அதனால் உண்டான பெரும்பூதம் இது. இவன் வினதைக்குக் குமாரன்; கசியபருக்குப் புத்திரன்; ஆகாயமார்க்கத்தில் சஞ்சரிப்பவன்; தன்னிச்சைப்படி உருவமெடுத்துக் கொள்ள வல்லமை இவனுக்குண்டு. இவன் அமுதத்தை அபகரிக்க இப்போது வருகிறான். இவனுக்கு அமுதத்தைக்கொண்டு போவதற்கேற்ற ஆற்றலுண்டு. இவன்சாதிக்கமுடியாத காரியத்தைச் சாதிப்பான். எந்தக் காரியமும் முடிக்கவல்லவன்," என்றுரைத்தார். பிறகு இந்திரன் அமுதத்திற்குக் காவலாயிருக்கும் காவலாளிகளை நோக்கி "மகாபலசாலியாகிய கருடன் அமுதத்தை அபகரிக்க வருகிறான். நீங்கள் யாவரும் ஆயுதங்களுடன் அமுதத்துக்கு நான்கு புறத்திலுமிருந்து காத்து வரவேண்டும். பிரகஸ்பதி பகவான் கருடனை நிகரற்ற பகவான் எனக் கூறுகிறார்.

ஆதலால் அவன் அமுதத்தை அபகரியாவண்ணம் பாதுகாத்து வாருங்கள்," என்று உத்தரவிட்டான். தேவர்கள் இதைக் கேட்டதும் வியப்புற்று அமுதத்தைச் சுற்றி முயற்சியுடன் நின்றனர். இந்திரனும் வஜ்ராயுதத்துடன் அங்கிருந்தான. உற்சாகத்

துடனிருக்கும் தேவர்களனைவரும் சொர்ணமயமான ஆபரணங்களையும், விசித்திரமான கவசங்களையும் அணிந்துகொண்டு பயங்கரமானதும், குரூரமானது மாயுள்ள ஆயுதம், பாணம், சக்ரம் சந்து, பிரகாசமுள்ள கத்திகள் இவைகளை எடுத்துக்கொண்டு அமுத மிருக்குமிடம் சென்று அங்கு சூழ்ந்து நின்றார்கள். அவர்கள் அப்படி நிறைந்திருப்பது ஆகாயம் சூரிய கிரணங்களால் பிரகாசிப்பது போல் தோன்றிற்று.

---

## அத்தியாயம் 16.

---

சௌனகர் சூதரை நோக்கி, "இந்திரனுக்கு என்ன பிரமாதம் நேர்ந்தது. அவன் யாருக்கென்ன குற்றம் செய்தான்? வாலகில்லியர்களுடைய தவத்தினால் கருடன் உண்டானதெப்படி? கசியபமுனிவருக்கு பட்சிராஜனாகிய கருடன் புத்திரனாக ஏன் பிறந்தான்? அந்தக்கருடன் எவராலும் ஆக்கிரமிக்கக்கூடாதவனாகவும், தன்னிஷ்டப்படி உருவமெடுக்கக் கூடியவனாகவும், ஆகாயமார்க்கத்தில் சஞ்சரிக்கக் கூடியவனாகவும், எவ்விதம் ஏற்பட்டான். இந்த விஷயம் பூர்வ சரித்திரத்தில் காணப்படின் நான் கேட்க விரும்புகிறேன்," என்றார். சூதர், "நீ கேட்கிற விஷயம் புராணத்திலுள்ளது தான்; நான் சுருக்கமாகக்கூறுகிறேன் கேள்.

ஒரு சமயத்தில் கசியபர் புத்திரனை யபேட்சித்து ஓர் யாகம் செய்தார். அதற்கு முனிவர்கள், தேவர்கள் எல்லோரும் உதவி புரிந்தார்கள். அப்போது கஸ்யபர், இந்திரன் வாலகில்லியர் முதலியவர்களை நோக்கி, சமித்துக்கள் கொண்டுவரும்படி கட்டளையிட்டார். இந்திரன் பலவானாதலால், மலைபோன்ற சமித்துக் கட்டைத் தன் சக்திக்குத் தக்கபடி சேகரித்துக்கொண்டு அதிக சிரமமில்லாமல் வந்தான். அச்சமயம், பெருவிரற் பிரமாணமுள்ளவர்களும், ஒரு பலாசக்கழியை அநேகர் சேர்ந்து சுமப்பவர்களும், அதனால் அங்கங்கள் குன்றி யிருப்பவர்கள்போல் காணப்படுகிறவர்களும், சோர்ந்தவர்களும், பசுவின் குளம்படிபதிந்த இடத்தில் தேங்கியுள்ள நீரையுந் தாண்ட முடியாமல் கஷ்டப்படுகிறவர்களும் ஆகாரமில்லாமையால்வலுக்குறைந்தவர்களுமான வாலகில்லிய ரிஷிகளை இந்திரன் வழியிற்கண்டு, தன் பராக்ரமத்தில் கர்வமடைந்து

அவர்களைப் பரிகசித்து அவமதித்துச் சென்றான். உடனே அந்த முனிவர்கள் மிகவும் சினமடைந்து, இந்திரனுக்கு மிகுந்த பயத்தைத் தரத்தக்க செய்கையைச் செய்யத்துணிந்து தங்கள் தவத்தின் வலிமையாலும் சிரேஷ்டமான மந்திரங்களாலும் அக்னியில் ஹோமம் செய்தார்கள். அந்த மகரிஷிகள் எந்தப்பலனைக் கருதி இந்த ஹோமம் செய்தார்களெனில், கூறுகிறேன்:—தன்விருப்பப்படி வீரியங்கொள்பவனும், தன்னிஷ்டப்படி சஞ்சரிப்பவனும், தேவராஜனுக்கு அச்சத்தைக் கொடுப்பவனுமாக மற்றோர் இந்திரன் உண்டாகவேண்டும்; இந்திரனைக் காட்டிலும் நூறு மடங்கு வீரமுடைய பலமுள்ளவனாகவும், மனோவேகம் போன்ற வேகமுள்ளவனாகவும், எங்கள் தவத்தின் மகிமையால் இப்போதே உண்டாக வேண்டும்'' என்று ஹோமம் செய்தனர். இதனை யறிந்த தேவேந்திரன் மிகுந்த வருத்தமுற்று மகாதபசியாகிய கஸ்யபரைச்சரணமடைந்தான். கசியபர் வாலகில்லிய மகரிஷிகளைப்பார்த்து, ''நீங்கள் எதைக்குறித்து இப்பொழுதுஹோமம் செய்கிறீர்கள்? உண்மையைஉரைக்க வேண்டும்,'' என்றார். வாலகில்யர், ''ஏ கசியப முனிவரே! நாங்களெல்லோரும் மூடனும்புத்தியில்லாதவனும் ஐசுவரியமதத்தில் இறுமாந்திருப்பவனும் குல ஆசாரங்களைத் தவறி நடப்பவனுமான இந்திரனால் அவமான மடைந்தோம். ஆகையால் அவனைக்கொல்லுவதற்கு இந்தஹோமத்தை ஆரம்பித்துச்செய்து வருகிறோம். அப்படியே ஆகவேண்டும்,'' என்றுகூறினார்கள். கசியபர், ''பிரமதேவரின் கட்டளைப்படி இவன்இந்திரனாகவிருக்கிறான். தவத்தையே பொருளாகக்கொண்ட நீங்களும் இந்திரனுக்காகத்தான் முயற்சி செய்கிறீர்கள். பிரமதேவரின் கட்டளையை பொய்யாக்குவது தகாது. ஆனால் உங்கள் எண்ணமும் வீணாகாதது. ஆதலால் உங்களுடைய ஹோமத்தினால் உண்டாகும் இந்திரன் பறவைகளுக்கு இந்திரனாகட்டும். அவன் இந்த இந்திரனிலும் மிகுந்த பலசாலியாக விருப்பான். மிகவும் வணங்கிக் கேட்டுக்கொள்ளும் இந்த இந்திரனுக்கு நீங்கள் கிருபைசெய்யவேண்டும்,'' என்றார். இவ்விதம் கசியபர் கூறக்கேட்ட வாலகில்லியர்கள், அவரைப்புகழ்ந்து, ''சிருஷ்டி கர்த்தாவே! இந்திரனுண்டாவதற்கு நாங்களிந்த கருமத்தைச்செய்ய ஆரம்பித்தோம். இதை இப்பொழுது தங்களிடத்தில் ஒப்புவித்து விடுகிறோம். தாங்கள் உலக நன்மைக்கேற்றவாறு செய்து கொள்ளவேண்டும்,'' என்றார்கள். இச்சமயத்தில்

புத்திரனைக் குறித்துத் தவம் புரிந்துகொண்டிருந்த தக்ஷப்பிரஜாபதியின் புத்திரியாகிய வினதை தன் நாயகனாகிய கசியபரிடம் வந்தாள். பிறகு கசியபர் அவளைப் பார்த்து, "வினதே! நீ செய்த தவம் பலித்தது, மூவுலகத்திற்குள் சமர்த்தர்களான இரண்டு குமாரர்களை நீ யடையப்போகிறாய். வாலகில்லியமுனிவர்களுடைய தவமகிமையாலும், எனது சங்கற்பத்தாலும் அவர்கள் இந்த மூன்று லோகங்களும் புகழத்தக்க சிறப்பினையுடையவர்கள். மேன்மையுண்டாக்கத் தக்க இந்த கர்ப்பம் சிதைவுறாமல் பாது காத்துவா. இருவர்களுள் ஒருவன் பறவைகளுக்கு அரசனாகவும், உலகம் புகழத்தக்க பலவானாகவும் தன்னிஷ்டப்படி ரூப மெடுத்துக் கொள்ளத் தக்கவனாகவுமிருப்பான்," என்று தெரிவித்து விட்டு இந்திரனைப்பார்த்து "இந்திர! மகாபலசாலியாகிய அவ்விருவரும் உனக்குச் சகோதரர்கள்; உதவிபுரிபவர்கள். அவ்விருவரால் உனக்கு ஒரு கெடுதியும் ஏற்படாது. நீ துயரமடைய வேண்டாம். இனியும் நீ தான் இந்திரனாக இருக்கப் போகிறாய். பிரமசொரூபம் அறிந்தவர்களும், சொல்லை உறுதியாகக்கொண்டவர்களும் அதிக கோபமுள்ளவர்களுமாகிய பெரியோரைக் கர்வத்தினால் அவமதியாதே," என்றார். பிறகு இந்திரன் தன்சந்தேகம் தெளிந்து பொன்னுலகமடைந்தான். வினதையும் தன் மனோரதம் நிறைவேறிற்றெனக்கருதிச் சந்தோஷமடைந்தாள். பிறகு அருணனும் கருடனுமாகிய இரண்டு புத்திரர்களை ஈன்றாள். அங்கஹீனனாகிய அருணன் சூரியனுக்குச் சாரதியானான். கருடன் பக்ஷிகளுக்கு அரசனானான்.

---

## அத்தியாயம் 17.

---

இதன் பிறகு மகாபலவானாகிய கருடன் அம்மலைச்சிகரத்தினின்றுங்கிளம்பி விரைவாகத் தேவர்களிடம் சென்றான். அச்சமயம் தேவலோகம் நடுங்கிற்று. தேவர்கள் ஒருவர் மேலொருவர் ஆயுதங்களைப் போட்டுக் கொண்டனர். அவர்களுள் மின்னலுக்கும் அக்கினிக்கும் சமமான ஒளியுள்ளவனும் மிகுந்த பராக்ரமமுள்ளவனுமாகிய பௌமனென்பவன் அமுதத்திற்குக் காவலாக விருந்தான் அவன் கருடனை எதிர்த்து யுத்தம்புரிந்

தான். கருடன் அவனைத் தன் மூக்காலும் நகங்களாலும் துன்புறுத்தினான். அவன் இரண்டு நாழிகை கருடனுடன் போர்புரிந்து பிறகு இறந்தான். பிறகு கருடன் தன் சிறகின் காற்றினால் மண்ணைமிகுதியாகக் கிளப்பி உலகத்தை மறைத்ததுமன்றி அந்த மண்ணைத் தேவர்கள் மேலிறைத்தான். தேவர்கள் அந்தத்தூளிகளால் மறைக்கப்பட்டு கண்தெரியாமல் மயங்கினார்கள். இதைக் கண்ட இந்திரன் உடனே வாயுவை அழைத்து, இந்த மண்மாரியை அதிசீக்கிரமாக விலக்க உத்தரவிட்டான். இந்திரனது உத்தரவுப்படியே வாயுபகவான் அந்தத்தூளியை அதிசீக்கிரமாக விலக்கினார். தூளிபடலம் விலகியவுடன் அமரர்கள் கருடனை இம்சிக்கத் தொடங்கினார்கள். கருடன் சகலபிராணிகளும் நடுங்கும்படி கர்ச்சித்து ஆகாயத்திற் கிளம்பினான். தேவர்களுக்கு மேலே ஆகாயத்திலிருக்கும் கருடன்மேல் தேவர்கள், பரிகம், பட்டயம், சூலம் கதை முதலிய ஆயுதங்களைப் பிரயோகித்தார்கள். கருடன் சிறிதுங் கலங்காமல், அமர்புரிந்து கொண்டிருந்தான். எல்லாரையும் தகிக்கிறவன்போல் ஆகாயத்திலிருந்துகொண்டு தன் சிறகுகளாலும் மார்பினாலும் தேவர்களை இம்சித்து நாலாபக்கங்களிலும் தள்ளினான். இப்படிக்கருடனால் உபத்திரவ மடைந்த தேவர்கள் இரத்தத்தைப் பெருக்கிக் கொண்டு ஓடினார். அவர்களுள் சாத்தியர்களும் கந்தர்வர்களுங் கிழக்குத் திக்கைநோக்கிச் சென்றனர். வசுக்களும் ருத்திரரும் தென்றிசை சென்றனர். ஆதித்தியர்கள் மேற்றிசை சென்றனர். அசுவனி தேவர்கள் வடக்கு முகமாக ஓடினார். இவர்களனைவரும் கருடனைத்திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டே சென்றனர். பிறகு கருடன் அசுவக்கிரந்தன், ரேணுகன், உசாகன், சுவஸனன், நிமேஷன், கிரதனன், பதனன், இவர்களோடு யுத்தம் புரிந்தான். அவர்களனைவரையும் பிரளயகாலத்திற்கோபங்கொண்ட பினாகபாணியாகிய பரமசிவனைப்போல் சினந்து தன் இறக்கைகளாலும் அலகாலும் இம்சித்துப் பிளந்தான். அந்த ஒன்பது யக்ஷர்களும் மகாபல சாலிகளானாலும் கருடனால் பிளக்கப்பட்டு இரத்தத்தைப் பெருக்கிக் கொண்டு இரத்தமேகங்கள் போல் கிளம்பினார்கள். பிறகு கருடன் அவர்களனைவரையும் கொன்று அமுதத்தை யெடுப்பதற்காகச் சென்றான். அங்கு பிரசண்டமான வாயுவால் அபிவிருத்தியடைந்து ஆகாயத்தை அளாவி நிற்கும் ஜுவாலைகளுடன்

சூரியனைக் கொளுத்த வெழுந்தது போன்ற அக்கினி நாற்புறமும் சூழ்ந்து கொண்டிருக்கக் கண்டான். கண்டதும் மகாத்மாவாகிய கருடன் அநேக வாய்களை யெடுத்துக்கொண்டு நதிகளிருக்குமிடஞ் சென்று அவைகளிலுள்ள நீரைப்பருகிச் சீக்கிரமாகத்திரும்பி வந்து அந்த அக்கினியை அந்த நீரால் அவித்தான். அக்கினி அவிந்த பிறகு உள்ளே பிரவேசிக்க வேறொரு சிறிய உருவம் எடுத்துக் கொண்டான்.

---

## அத்தியாயம் 18.

---

பொன்மயமான நிறமுடைய கருடபகவான் வேகமாக வோடும் நீரானது கடலிற்பாய்வது போல் பிரவேசித்தார் அங்கே கூர்மையான வரம்பினையுடையதாய் எப்போதும் சுழன்று கொண்டிருக்கும் சக்ரத்தைக் கண்டார் அந்தச் சக்கரம் அக்கினியைப் போலவும் சூரியனைப் போலவும் பிரகாசம் வீசாநின்றது. அதனுடைய உருவம் பார்க்கப்பயங்கரமாக விருந்தது. அது அமுதமெடுப்பவர்களைக் கொல்லத தேவர்களால் ஏற்படுத்தப்பட்டது. அதில் நுழைய இடைவெளி யெங்கேனு மிருக்கிறதாவெனச் சற்றுநேரம் கருடன் அதனுடன் சுற்றினன். பிறகு தன் தேகத்தை ஒருநொடியில் சுருக்கிக் கொண்டு ஆரக்கால்களின் இடையே நுழைந்தார். அங்கு அந்த சக்ரத்தின் கீழே ஜ்வலிக்கின்ற அக்கினிக்கொப்பான இரண்டு மகா சர்ப்பங்களைக் கண்டான். இவைகள் மிகவும் பயங்கரமாக விருநதன. கண்கள் ஜ்வலித்தன. எப்போதும் கோபமுள்ளவைகள் போற் காணப்பட்டன. அவைகள் கண்களைக் கொட்டாமல் அமுதத்தைப்பாதுகாத்து வந்தன. அவ்விரண்டனுள் எது ஒருவனைக் கண்டாலும் அவன் சாம்பலாய் விடுவான். கருடன் அவ்விரண்டு சர்ப்பங்களைக் கண்டதும் வருத்தமுற்று வாயுபக்ஷணஞ்செய்யும் இவைகளை எவ்விதங்கொல்வதெனத் திகைத்தான். பிறகு சர்ப்பங்களின் கண்களில் விரைவாகப் புழுதியை இறைத்து பார்க்க முடியாமற் செய்து அவைகளின் சரீரத்தை மிதித்துக் கொண்டு அமுதத்தினருகே சென்று, அதை யெடுத்துக கொண்டான். பிறகு அந்தச்சக்

காரத்தை முறித்துக் கொண்டு வெளியே வந்தான். சூரியனுடைய ஒளியையும் மழுங்கச் செய்யும் மேனியை யுடைய கருடன் அந்த அமுதத்தை யருந்தாமல் வெளியே வந்து, அங்கிருந்து புறப்பட்டு வந்தான்.

வரும் வழியில் கருடன் மகா விஷ்ணுவைச் சந்தித்தான். அமுதபானத்தில் சிறிதும் ஆசையில்லாத அந்தக்கருடனிடத்தில் மகா விஷ்ணு சந்தோஷமடைந்து, அந்த பக்ஷிராஜனைப் பார்த்து, "உனக்கு வேண்டும் வரத்தைக்கேள்; கொடுக்கிறேன்," என்றார். கருடன், "நான் உமக்குமேலே யிருக்க வேண்டும். நான் அமிர்தம் உண்ணாமல் நரை திரை மரணங்களற்றிருக்கவேண்டும்," என்று கேட்டார். விஷ்ணு கருடனைப்பார்த்து, "அப்படியே தந்தேன்" என்றார். அவ்விரண்டு வரங்களையும் பெற்றுக்கொண்ட கருடன் விஷ்ணுவைப் பார்த்து, "உமக்கு நான் வரங்கொடுக்கிறேன். பகவானாகிய நீங்களும் என்னைக் கேட்கவேண்டும்" என்றார். விஷ்ணு, "நீயே|எனக்கு வாகனமா யிருக்கவேண்டும்," என்று கேட்டுக் கொண்டார். பகவான் கருடனை மேலே யிருப்பாயென்று சொன்னதற்காக அவனைத் தமக்குக் கொடியாக வைத்து கொண்டார். கருடன் நித்தியனான மகாவிஷ்ணுவை நோக்கி "அவ்வாறே ஆகட்டும்" எனக்கூறி வாயுவும் தோல்வியடையும் படியான வேகத்தோடு அவ்விடம் விட்டுச் சென்றார். அப்பொழுது அவனை இந்திரன் தன் வச்சிராயுதத்தால் அடித்தான். பக்ஷிராஜனாகிய கருடன், இந்திரனைப் பார்த்து, மந்தகாசம் செய்து, "இந்திரா! இந்த வச்சிராயுதம் எந்த முனிவருடைய முதுகெலும்பிலிருந்து உண்டானதோ, அந்த மகரிஷிக்கும், இந்த வச்சிராயுதத்திற்கும், உனக்கும் மரியாதை கொடுக்க, உன்னால் காணமுடியாத நுனியையுடைய ஓரிறக்கையை இதோ விடுகிறேன். வச்சியுராதத்தின் அடியால் எனக்குச் சிறிதும் தொந்தரவில்லை" என்று கூறி ஓர் இறக்கையை உதிர்த்தான். கருடனால் உதிர்க்கப்பட்ட அந்த இறகின் அழகைக் கண்ட தேவர்கள் "இவன் * சுபர்ணன்" என்று கூறினார்கள். இந்திரன் கண்டு மிகவும் வியப்படைந்து, இந்தப் பக்ஷி யொரு பெரும்பூதம் என்று கருதி கருடனை நோக்கி, "பக்ஷிராஜனே! உன் பலத்தைத் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். உன்னுடன் அழிவில்லாத நட்பினையும் விரும்புகிறேன்," என்றான்.

---

* அழகான சிறகுள்ளவன்,

## அத்தியாயம் 19.

---

தேவேந்திரன் இவ்விதம் கூறியதும் கருடன், "புரந்தரனே! உன் இச்சைப்படியே நம்மிருவருக்கும் சிநேகமிருக்கட்டும். என் வலிமை மிகவும் அதிகம். தேவர்களுக்குள் சிறந்தவனாகிய இந்திரனே! சாதுக்கள் காரணமின்றித் தங்கள் பலத்தைக் கூறிப் புகழ்ந்து கொள்ளமாட்டார்கள். காரணமின்றிப் புகழ்ந்து கொள்கிறவன் நிந்தைக் குரியவனாவான். பிறனொருவன் கேட்கும்போது குணங்களைக் குறித்துச் சொல்லலாம். மற்றப்படி தானே சொல்லக்கூடாது. நீ வினவியபடியால் உன்னைச் சிநேகிதனென்று நினைத்துக் கூறுகிறேன். மலைகள், காடுகள், கடல் சூழ்ந்த இந்தப் புவியையும் இப்புவியிலுள்ள உன்னையும் என் ஒரு சிறகில் தொங்கும்படி செய்து தூக்குவேன். அசையும் பொருள், அசையாப் பொருள் எல்லாவற்றையும் ஒன்றாகச் சேர்த்துச் சிரமமில்லாமல் எடுப்பேன். இது என் பலமென்றறிந்து கொள்," என்றான்.

கருடன் இப்படிக் கூறியதும், தேவேந்திரன் எல்லாருக்கும் நன்மைசெய்யக் கருதி, நீ சொல்வது சரி. என்னிடம் குறைவற்ற சிநேகமிருக்கவேண்டும். இந்த அமுதத்தை நீ எவர்களுக்குக் கொடுக்கப் போகிறாயோ அவர்களால் எங்களுக்கு மிகவுந்துன்பமேற்படும். உனக்கும் இந்த அமிர்தத்தால் பிரயோஜனமில்லை. அதை என்னிடத்தில் கொடுக்க வேண்டுகிறேன்," என்றான்.

கருடன், "ஒரு காரணத்தை உத்தேசித்து நான் அமுதத்தை எடுத்துக்கொண்டு போகிறேன். அமுதத்தை நான் யாருக்கும் உண்பதற்குக் கொடேன். ஆயிரங்கண்படைத்தவனே! யான் எங்கு இந்த அமுதத்தைக் கொண்டுபோய் வைக்கிறேனோ அங்கு நீ வந்து விரைவாக இதை எடுத்துக் கொண்டுவந்து விடலாம்" என, இந்திரன் "கருடா! இதனால் எனக்கு மிகவும் சந்தோஷமுண்டாயிற்று. உனக்கு என்னவரம் வேண்டுமோ கேள் கொடுக்கிறேன்" என்றான். கருடன், கத்ருவின் புத்திரர்களையும் தன் தாயார் அவர்களுக்கு அடிமையாக விருப்பதையுங் கருதி "தேவராஜனே! நான் எல்லாவற்றிற்கும் ஈசுவரனாக விருந்தபோதிலும் உன்னிஷ்டப்படி செய்யவேண்டுமாகையால், ஒரு வரங்கேட்கிறேன். மிகுந்தபலமுள்ள சர்ப்பங்கள் யாவும் எனக்கு ஆகாரமாகவேண்டும்" என்று

கேட்டான். அசுரர்களைச் சங்கரிக்கவல்ல இந்திரன், "அவ்விதமே ஆகுக" என வரமளித்து விட்டு போகிகளுக்கு ஈசுவரனும் தேவர்களுக்குத் தேவனுமாகிய மகாவிஷ்ணுவிடம் சென்று நடந்ததைக் கூறினான். மகாவிஷ்ணுவும் அதை யொப்புக் கொண்டார்.

பிறகு கருடன் தன் தாயாரின் சமீபம் சென்று வணங்கி, "அம்மா! இதோ அமிர்தங்கொண்டுவந்துவிட்டேன். இனி என்ன செய்யவேண்டும். அதைச் செய்யக் கட்டளையிடவேண்டும்" என்றான். வினதை பரமானந்தமடைந்து "எ பாலகா! உன்னுடைய அசாத்தியமான செய்கைக்காக நான் சந்தோஷமடைந்தேன். நீ மூப்புச் சாக்காடில்லாமல் தேவானுகூலனாக விருக்கக்கடவாய்" என ஆசீர்வதித்தனள்.

பிறகு கருடன், சர்ப்பங்களைப் பார்த்து. "ஏ நாகங்களே! உங்களுக்காக அமிர்தங்கொண்டு வந்திருக்கிறேன். தருப்பைகளில் வைக்கப் போகிறேன். நீங்கள் ஸ்நானஞ்செய்து பரிசுத்தர்களாயிருந்து இதைப் புசியுங்கள் நீங்கள் கூறியபடியே அமிர்தங் கொண்டு வந்து விட்டேன். ஆகையால் இந்தக் கணமுதல் என் தாயாருடைய அடிமைத் தனத்தைத் தீர்த்துவிடவேண்டும்" என்றான் சர்ப்பங்கள் அவ்விதமே செய்து விட்டோம் என்று கூறி ஸ்நானம் செய்யச் சென்றன அச்சமயம் பார்த்து இந்திரன் வந்து அமிர்தத்தை யெடுத்துக்கொண்டு தேவலோகத்திற்குப் போய்ச் சேர்ந்தான். பிறகு சர்ப்பங்கள் ஸ்நானஞ்செய்து விட்டு மங்கள வஸ்திரங்களை யணிந்துகொண்டு சுசியாக வந்து அமிர்தம் புசிப்பதில் "நான்முந்தி நான் முந்தி" யெனச் சொல்லிக்கொண்டு அமிர்தம் வைத்திருந்த இடத்தைப் பார்த்தன. அங்கு அமிர்தமில்லாமை கண்டு "நாம செய்த மோசத்திற்குப் பிரதிமோசஞ் செய்யப்பட்டது," என்றெண்ணி, வருந்தின. பிறகு அமிர்தம் வைக்கப்பட்டிருந்த தருப்பைகளை தங்கள் நாக்கினால் நக்கின. அதனால் அவற்றின் நாக்குகள் இரண்டு பிரிவாகப் பிளப்புண்டன. அந்தத் தருப்பைகள் அமிர்த சம்பந்த மடைந்ததனால் பரிசுத்த மடைந்தன. பிறகு சர்ப்பங்கள் யாவும் இவ்விதமே மோசமடைந்தன. கருடன் பலவானாக விருப்பதைக் கண்டு பொறாமைகொண்டு வருந்தின. பிறகு கருடன் தன் தாயாருடன் வனத்தில் அநேக சர்ப்பங்களைப் புசித்துக்கொண்டு சஞ்சரித்து வந்தான். பறவைகளெல்லாம் தங்களிறைவனாகிய கருடனுக்கு மரியாதை செய்து

வந்தனை. வினதையும் பரமானந்த மடைந்தாள். இச்சரித்திரத்தைக் கேட்பவனும் இதைப் படிப்பவனுமாகிய புண்ணியசாலி சொர்க்கலோகத்தை யடைவானென்பதில் ஐயமில்லை

## அத்தியாயம் 20.

சௌனகர், "சூதபுத்திரரே! சர்ப்பங்களுக்கேற்பட்ட சாபத்தையும் புத்திரனால் தாயாகிய வினதைக்கு ஏற்பட்ட மகிமையையும் கத்ரு வினதைகளுக்கு அவர்களுடைய பதியாகிய கசியபரால் வரம் கொடுக்கப்பட்டதையும் வினதையின் குமாரராகிய பட்சிகளினுடைய பெயர்களையும் கூறத்தெரிந்து கொண்டேன். சர்ப்பங்களின் பெயர்களைக் கூறவில்லை. அவைகளில் முக்கியமானவைகளின் பெயர்களையாவது தங்கள் முகமாகக் கேட்க விரும்புகிறேன். தயை செய்து கூறவேண்டும்" என்று கேட்க, சூதர், "தபோதனரே! சர்ப்பங்கள் அனேகமாகையால் அவைகளின் பெயரைச்சொல்லவில்லை. அவைகளில் முக்கியமான சர்ப்பங்களின் பெயரை இப்பொழுது கூறுகிறேன், கேளுங்கள். முதலில் பிறந்தவன் சேஷன், பிறகு வாசுகி, ஐராவதன், தட்சகன், கார்க்கோடகன், தநஞ்செயன், காளியன், மணிநாகன், ஆபூரணன், பிஞ்சரகன், ஏலாபத்திரன், வாமனன், நீலன், அநீலன், கல்மாஷன், சபளன், ஆரியகன், உக்ரகன், கலசபோதகன், சுமுகஸ், துர்முகன், விமுகன், அரிமுகன், சுமாரன், ததிமுகன், விமல பிண்டகன், ஆப்தன், கோடரவன், சங்கன், வாலிசிகன், நிஷ்டியூதகன், ஹேமகுஹன், நகுஷன், பிங்களன், பாஹிய கர்ணன், ஹஸ்திபாதன், முத்கரபிண்டகன், கம்பளன், அசுவதரன், காளீயகன், விருத்தன், சம்வரத்தகன், பத்துமன், (மற்றொன்று)பத்துமன், சங்கமுகன், சண்டப்பிரகோபனன், க்ஷேமகன், பிண்டாரகன், கரவீரன், புஷ்பதம் ஷ்டிரன், ஏலகன், பகுபாண்டரன், மூஷிகாதன், சங்கசிரன் பூர்ணதம், ஷ்டிரன், ஹரித்திரகன், அபராஜிதன், ஜியோதிகன், சிரீவஹன், கௌரவ்வியன், திருதராஷ்டிரன், புஷ்கரன், சல்லியகன், விரஜன், சுபாகு, சாலிபிண்டன், ஹஸ்திரபத்திரன், பிடரகன், முகரன், கோண நாசிதன், குஞ்சரன், குடறன், பிரபாகரன், குமுதன், குமுதாக்ஷன்,

தித்திரி, ஹலிகன், கர்த்தமன், பசுமூலகன், கர்க்கறன், அகரக்கரன், குண்டோதரன், மஹோதரன், ஆகிய இப்பெயருள்ள சர்ப்பங்களே முக்கியமானவைகள்.

மற்ற சர்ப்பங்கள் அநேக மிருப்பதால் அவைகளின் பெயரைக் கூறமுடியாது. இவைகளின் புத்திரபரம்பரையும், அப்புத்திரபரம்பரையின் பரம்பரையும் கணக்கற்றவைகள். ஆகையால் நான் சொல்லவில்லை. அனேகபாயிரம், லக்ஷம், இப்படிப்பல கணக்காக இருக்கின்றன. அவைகளைக் கணக்கிட முடியாது,'' என்றார்.

---

## அத்தியாயம் 21.

---

சௌனகர் சூதபுத்திரரைப் பார்த்து, "ஐயா சர்ப்பங்கள் தங்கள் தாயாரின் சாபத்தை யறிந்தபிறகு என்ன செய்தன,'' எனக்கேட்க, சூதர் சொல்லுகிறார்.

அந்த சர்ப்பங்களுக்குள் மகா மகிமை பொருந்திய ஆதிசேஷன் கத்ருவைவிட்டு நீங்கி வாயுபட்சணம் செய்துகொண்டு இந்திரிய நிக்கிரகம்செய்து கந்தமாதனமலையிலும் பத்திரீக ஆசிரமத்திலும், கோகர்ண க்ஷேத்திரத்திலும், புஷ்கர க்ஷேத்திரமென்கிற அரண்யத்திலும், இமயமலையிலும் இன்னும் மற்றுமுள்ள புண்ய தீர்த்தங்களுக்கும், தனித்தனியே சென்று அடக்கமாக விருந்து வெயில் காற்று மழை இவைகளைச்சகித்துக்கொண்டு விருப்பு வெறுப்பினை யொழித்து நாடோறும் ஸ்நானம் செய்து தவம் புரிந்து வந்தான்.

ஜடாமகுட தாரியாய், மரவுரி புனைந்து மன உறுதியுடன் கொடுமையான தவம்புரியும் ஆதிசேஷனுடைய தவத்திற்கிரங்கி பிரமதேவன் அங்கெழுந்தருளி, அவனைப்பார்த்து, "குற்றமற்றவனே! நீ ஏன் இவ்விதம் செய்கிறாய்; ஜனங்களுக்கு க்ஷேமத்தைச் செய்; நீ செய்யும் கடுமையான தவத்தால் பிராணிகளுக்குத் தாபம் அதிகமாக ஏற்படுகிறது. உனக்கு வேண்டியதென்ன? தெரிவி'' என்றார். ஆதிசேஷன், என்னுடன் பிறந்தோர் யாவரும் மூடர்கள். அவர்கள் ஒருவரையொருவர் பகைத்துக் கொள்கிறார்கள். அவர்களைப்பார்க்க விருப்பமில்லாமல் இங்கு தவஞ்செய்

கிறேன். அவர்கள் வினதையிடத்தும் அவள் பிள்ளையிடத்தும் பொருமைப் படுகிருர்கள். தந்தை கசியபர் கொடுத்த வரமகிமையால் கருடன் மிகுந்த பலவானுகவிருக்கிருன். அதைக் கண்டு அவனை எப்போதும் துவேஷிக்கின்றனர். நான் தவம் புரிந்து இச்சரீரத்தை விடப்போகிறேன். மரணமடைந்த பின்னர் பரலோகத்திலும் அவர்களுடைய சம்பந்தம் எனக்கில்லாமலிருக்க வேண்டும்," என்ருன். அதற்குப் பிரமதேவர், "உன் உடன் பிறந்தோருடைய தீயசெய்கைகளை யானறிவேன். அவர்கள் தங்கள் தாய்க்குச்செய்த தீங்கினிமித்தம் அடையப் போகும் தீங்கையும் நானறிவேன். இதற்குப் பரிகாரமும் முன்னமேயே ஏற்பட்டிருக்கிறது. தாயின் சாபம் உன்னைப் பாதியாது. நீ தான் உதவி செய்யப்போகிருய். உன்னிடம் எனக்கு மிகுந்த அன்பு ஏற்பட்டிருக்கிறது. உனக்கும் வேண்டிய வரனைக்கேள். உன் புண்ணிய வசததால் உன் புத்தி அறத்தினையேநாடி நிற்கின்றது. இந்ததர்ம புத்தி உனக்கு மேன்மேலும அதிகமாக நிலைபெறவேண்டும். என்ருர். சேடன், பகவானே! நான் விரும்புவதும் அதுவே என் புத்தியானது தருமத்திலுமசாந்ததிலும்தவத்திலுமே எப்போதும் செல்லவேணடும்" என்ருன். பிரமதேவர், "சேடனே! நீ இந்திரிய நிக்ரகம் செய்து மனச்சாந்தியை யடைந்திருப்பது கண்டு மகிழ்ந்தேன். உலகததிற்கு இதமானதை நான்சொல்லுகிறேன். நீ அதைச் செய்யவேண்டும். அதாவது, காடு, மலை, கடல், கிராமம், நகரம், வனம் முதலியவைகளுடன் கூடியிருப்பதால் அசைகின்ற இந்தப்பூமியை அசையாமலிருக்கும்படி, தாங்கிக்கொண்டிருக்கவேண்டும்,"எனச்சேடன்,வரமளிப்பவரும்உலகநாயகனுமாகிய தங்களுத்தரவுப்படி இந்தப்புவியைத்தாங்கிக் கொண்டிருக்கிறேன். இந்த பூமி எனக்கு வழிவிடவேண்டும் என்ருன். அதற்குபிரமன் "நாகராஜாவே! நீ பூமியில் கீழே செல் பூமி தானுகவே இடங்கொடுக்கும். நீ இநத பூமியைத் தாங்குவது எனக்கு மிகவும் பிரீதியை உண்டாக்கும். நீ சேடனுகவும் தருமவானுகவும் ஆகிருய். பூமியைத் தாங்கச்சக்தியுமுனக் குண்டு. நீ என்னைப் போலவும் இந்திரனைப்போலவும் சுகமாயிரு," என்று வரமளிததனர்.

பிறகு ஆதிசேஷன் அவ்விதமேயாகட்டு மென ஒப்புக்கொண்டு பூமி கொடுத்த வழியே பிரவேசிதது தன் சிரசினுல பூமியைத்தாங்கிக் கொண்டு பூமிக்குக் கீழிருக்கிருர். பிறகு பிரம்ம

தேவர் ஆதிசேடனுக்கு வினதையின் குமாரனாகிய கருடனையும் நண்பனாகக் கொடுத்தார். பிறகு நாகங்கள், இந்திரனுக்குத் தேவர்கள் பட்டாபிஷேகஞ் செய்விப்பதுபோல் வாசுகிக்கு பட்டாபிஷேகம் செய்தன.

## அத்தியாயம். 22

நாகராஜனாகிய வாசுகி, தாயார் கொடுத்த சாபத்தைப் பற்றிச் சிந்தித்து, இச்சாபம் நம்மை யேன் பாதிக்காது? பாதியாமலிருப்பதற்கு நாம் செய்யும் உபாயம் யாது என்று தருமவானான ஐராவதன் முதலிய தன்னுடைய சகோதரர்களுடன் மந்திராலோசனை செய்து கூறுகிறான். "குற்றமற்றவர்களே! நமக்கு ஏற்பட்ட சாபத்தின் வரலாற்றை நீங்களறிவீர்கள். அந்தச்சாபத்திலிருந்து நம்மை விடுவித்துக்கொள்ள வேண்டுவது அவசியமல்லவா? சாபங்களெல்லாவற்றிற்கும் பரிகாரம் உண்டு. தாயார் சாபத்திற்கு பரிகாரமே கிடையாது. அழிவற்றவரும் மகாமகிமையுள்ளவரும் சத்திய சொரூபருமாகிய பிரமதேவர் முன்பாக நாம்சபிக்கப்பட்டோம் என்பதைக் கேட்கும் என்மனம் நடுங்குகிறது. குணமில்லாத நமது தாய் நாமெல்லோரும் நாசமடைய இந்தமகாகோரமானசாபத்தைக் கொடுத்திருக்கிறாள் என்பது நிச்சயம். அப்படிச் சபிக்கும்போது கசியபரும் தடுக்கவில்லை. ஆகையால் இச்சாபத்தினின்றும் விடுபடவழி தேடவேண்டும். நீங்கள்யாவரும் புத்தியில் சிறந்தவர்கள். சாமார்த்தியசாலிகள். இச்சமயத்தை வீணாக்கக் கூடாது. மறைந்திருந்த அக்னிபகவானைத் தேவர்கள் எப்படிக் குகையில் கண்டார்களோ அப்படியே நாமும் ஆலோசித்து நமது சாபத்தினின்று தப்பவேண்டும். சர்பங்களின் நாசத்திற்குக் காரணமாக ஜனமேஜய மகாராஜன் செய்யும்சர்ப்பயாகம் நடவாமலிருப்பதற்கும் சாபத்திற்குள்ளாகிய நாம் தீங்கடையாமலிருப்பதற்கும் உபாயத்தை இப்பொழுதே ஆலோசிக்கவேண்டும்" என்று கூறினான்.

சர்ப்பங்கள் அவ்விதமே செய்வோம் என்று சொல்லி நிச்சயம் செய்து கொண்டன. மந்திராலோசனையில் சிறந்த ஏலாபுத்திர னென்பவன் "ஏ நாகங்களே! கேளுங்கள் நாமெல்லோரும் பிராமணவடிவம் கொண்டு ஜனமேஜய மகாராஜரிடம் சென்று

சர்ப்பயாகம் செய்யாமலிருக்கும்படி யாசிப்போம்" என்றான். அப்பொழுது தங்களை மகா புத்திசாலியாக நினைத்துக் கொண்டு சில சர்ப்பங்கள், "நாமெல்லோரும் ஜனமேஜய மகாராஜனுக்கு மந்திரிகளாகப்போவோம்; அப்போது அரசன் நம்மை எந்தக்காரியத்திலும் யோசனை கேட்பான். அது போல் யாகத்தைப்பற்றியுங் கேட்பான். அப்பொழுது சர்ப்பயாகம் செய்வது பாவமென்று சொல்லி நடக்க வொட்டாமல் தடுத்து விடுவோம். அல்லது சர்ப்பயாகத்தின் விதியை அறிந்தவனும், அந்த யாகத்தை நடத்த ஏற்படுவோனுமாகிய உபாத்தியாயனை நம்மில் ஒருவன் சென்று கடித்து விடுவோம். பிறகு அவன் மரணமடைந்து விடுவான். யாகம் நிறைவேறாது. இப்படி எவன் அந்த யாகத்தின் விதியை அறிந்து நடத்துவதற்கு ஏற்படுகிறானோ அவனையும் கடித்தோமாகில்யாகம் நடைபெறாமலே நின்று விடும்," என்றன. தர்மசிந்தனையும் தயையுமுடைய இன்னும் சில நாகங்கள் மற்றவைகளைப் பார்த்து, "நீங்கள் புத்தியில்லாமல் யோசனை செய்கிறீர்கள். பிரம்மஹத்தி செய்வது சரியல்ல. ஆபத்துவந்த காலத்தில் மனச்சாந்தியடைவது சிறந்த தருமங்களுக்குக் காரணமாகும். அதை மீறி அதர்மம் செய்வது உலகத்திற்கு மிகுதியான துன்பத்தை உண்டாக்கும்" என்றன. பிறகு சில சர்ப்பங்கள், "நாம் மின்னல் இடியுடன் மேகங்களாகிச் சமயத்தில் மழைபொழிந்து யாகாக்னியை அணைத்து விடுவோம்" என்று கூறின. இன்னும் சில, "நாமெல்லோரும் இரவில் சென்று ஒருவரையும் அறியாமல் யாகப் பாத்திரங்களை அபகரித்து வந்து விடுவோம். அல்லது நாமெல்லோரும் நூறுபிரக்கணக்காகச் சென்று யாகத்திற்கு வந்திருக்கும் ஜனங்களைத் தீண்டுவோம். அல்லது எல்லா ஆகாரங்களையும் மூத்திரத்தினாலும், மலத்தினாலும் கெடுத்து விடுவோம்" என்றன. வேறு சில, "நாகங்கள் நம்மில் சிலர் அவ்வரசனுக்கு ரித்துவிக்குகளாகியாகத்தில் தட்சணை யதிகமாய்க் கொடுக்கவேண்டுமென்றும் மற்ற விதமாகவும் இழிவுண்டாக்குவோம். பிறகு அரசன் நமக்குச் சுவாதீனனாகி நமது கோரிக்கையை நிறைவேற்றுவான்" என்றன. மற்றும் சில நாகங்கள் "ராஜா ஜலக்ரீடை செய்யுங்காலத்தில் நம்மிடமாகிய பாதாளத்திற்குக் கொண்டுவந்து விடுவோம். பின் அந்த யாகம் நிறைவேறாது" என்றன. இன்னும் சில "அந்த அரசனைக் கடித்துக்கொன்று விடுவோம். வாசுகியே! எங்களுடைய

ஆலோசனை இவ்விதமாகவே யிருக்கின்றன. இனி அரசனே தாங்கள் முடிவு செய்கிற ஆலோசனைப்படி நடக்கிறோம்" என்றன.

இவ்விதம் சர்ப்பங்கள் கூறியதும் வாசுகி சர்ப்பங்களைநோக்கி, "சர்ப்பங்களே! நீங்கள் கூறியது உசிதமல்ல, உங்கள் எல்லோருடைய புத்தியும் எனக்குப்பிடிக்க வில்லை. மகாத் மாவாகிய கசியபரிடம் சென்று அவரது அனுக்கிரகமடைவதுதான் நமக்கு நன்மை தருமென்று நினைக்கிறேன். நீங்கள் கூறியபடி செய்ய எனக்கு என்மனம் இடங் கொடுக்கவில்லை. உங்களுக்கு நன்மையைச் செய்யவேண்டியது என்பொறுப் பாகையால், குணதோஷங்கள் யாவும் என்னைச் சேர்ந்தவை. இதனால் நான் மிகவும் கஷ்டப்படுகிறேன்," என்றான்.

---

## அத்தியாயம். 23.

---

இவ்விதம் சர்ப்பங்கள் கூறியதையும் வாசுகி கூறியதையும் கேட்டு ஏலாபத்ரன் கூறுகிறான்.

"ஏ பிரபுவே! ஏசர்ப்பங்களே! இவ்விஷயத்தைப்பற்றி முன்னமேயே நிச்சயித்திருக்கிறேன். உங்களனைவர்க்கும் அதனை ஏற்றுக்கொள்ளப் பிரியமில்லையாயின் அது அவ்விதமே யிருக்கட்டும். இப்போது அதைப்பற்றி எனக்கு ஞாபகம வந்திருக்கிறது. விவரமாகக் கூறுகிறேன். கேட்கவேண்டும்.

"கசியபப்பிரஜாபதியிடம் சென்று அனுக்கிரகம்பெறவேண்டுமென்பதே மேலானது. அப்படிச் செய்தால்தான் யாகம் நடைபெறாமலிருக்கும். ஜனமே ஜயமகாராஜனும் மகாமகிமை யுள்ளவன். தெய்வத்தால் கெட்டவொருவன் பௌரஷத்தை யடையக்கூடாது. தெய்வத்தால் கெடுதியடைந்தவன் அந்த தெய்வத்தையேயடைய வேண்டும். நாமனைவரும் தெய்வத்தால் கெடுதியை யடைந்திருக்கிறோம். இப்போது தெய்வத்தையே சரணமடைவோம். வேறு நமக்குக் கதியேது? என் சொல்லைக்கேளுங்கள். நான் தாயாரின்மடியில் உட்கார்ந்திருக்கும்போது, இந்தச் சாபம் கொடுக்கப்பட்டது. அப்போது தேவர்களனைவரும் நாகர்கள் கொடியவர்கள் என்று சொல்லி பின் இரக்கம் கொண்டுபிரமதேவரிடம் சென்று," பகவானே! கத்ருவைப்போல் உமது முன்னிலை

யில் தன்னுடைய பிள்ளைகளுக்குச் சாபங் கொடுப்பவர்யார்? தாங்களும் அதைக்கேட்டுக் கொண்டு தடுக்காமல் சும்மா விருந்து விட்டீர்கள்; காரணம் என்ன?" என்று கேட்டார்கள். அதற்குபிரமதேவர், கொடியவைகளும் அச்சமுண்டாக்கத் தக்கவைகளும் விடமுள்ளவைகளுமான சர்ப்பங்கள் அளவுகடந்திருக்கின்றன. அவைகளால் பிரஜைகளுக்குக்கெடுதியுண்டாகாமல் நன்மை ஏற்பட வேண்டு மென்பதைக் கருதியே நான் தடை செய்யவில்லை. ஆகையால் அவைகளுக்கு அழிவு ஏற்படுவது நிச்சயம். தருமமறிந்த நாகங்களுக்கு அந்த பயத்திலிருந்து தப்பவழியுமிருக்கிறது. அதனை நீங்கள் கவனித்துத் தெரிந்து கொள்ளுங்கள். ஜனமேஜயமகாராஜன் சர்ப்பயாகம் செய்யும்போது அவைகளுக்கு விமோசனமுண்டாகும். யாயாவரர்களுடைய பரம்பரையில் ஜரத்காரு என்ற ஓர் முனிவர் உண்டாகப் போகிறார். அவர் இந்திரிய நிக்ரகம் செய்து மகாமகிமையுடன் விளங்குவார். அந்த ஜரத்காருமகரிஷிக்குத் தபோதனராகிய ஆஸ்தீகர்பிறக்கப்போகிறார். அந்த முனிவரால் சர்ப்பயாகம் தடைபடப் போகிறது. அப்பொழுது சர்ப்பங்களுக்கு விமோசனம் கிடைக்கும்," என்றார். தேவர்கள், "பிரம்மதேவரே! மகாதபோதனராகிய ஜரத்காரு முனிவர் எவளிடத்தில் புத்திரனை யுண்டு பண்ணப்போகிறார்," என, பிரமதேவர், "வாசுகிக்கு ஜரத்காரு என்னும் ஓர் அழகான சகோதரி பிறந்திருக்கிறாள். வாசுகி, அந்தக்கன்னிகையாகிய ஜரத்காருவை ஜரத்காரு முனிவர்க்குக் கொடுக்கப் போகிறான். அந்த ஜரத்காருமுனிவர் தன் பெயர்கொண்டவளாகியஜரத்காருவினிடம் வேதவேதாந்தங்களையும் நன் குணரவல்ல ஓர்புத்திரனை உண்டுபண்ணப் போகிறார். அவன்தான் நாகங்களைச் சாபத்திலிருந்து விடுவிக்கப் போகிறான்" என்றார் பிரமதேவர். இவ்விதம் கூறியபிரமதேவரைப் பார்த்துத் தேவர்கள் அப்படியே யாகவேண்டு மென்று கூறித் தங்களிருப்பிடம் சென்றார்கள். பிறகு பிரமதேவரும் தமதுலகம் சென்றார். ஆகையால் ஜரத்காரு வென்ற உமது சகோதரியை விருதநியமமுள்ள ஜரத்காரு முனிவர் கேட்கும் போது கொடுக்க வேண்டும். இவ்விதம் செய்யின் விமோசனம் ஏற்படும். இது தான் என் செவியிற்பட்டது. இது தான் யுக்தமான தென்று நினைக்கிறேன்" என்றான்.

## அத்தியாயம் 24.

அந்தணர்களுக்குள் சிறந்த சௌனகமுனிவரே! ஏலாபத்திரன் கூறியதைக் கேட்ட சர்ப்பங்கள் மனமகிழ்ச்சியடைந்து ஒப்புக் கொண்டார்கள். பிறகு வாசுகி ஜரத்காருவென்னும் தன் சகோதரியை அன்போடு ஆதரித்து வந்தான். பிறகு சிலகாலம் கடந்தபின்னர் தேவாசுரர்கள் கடலைக் கடைந்தனர். அதில் வாசுகி கயிறாக விருந்தான். அமுதங்கடைந்தானபின் தேவர்கள் வாசுகியுடன் பிரமதேவரிடம் சென்று அவரைப் பணிந்து "இந்த வாசுகி தன் தாயாருடைய சாபத்திற்குப்பயந்து மிகவும் சங்கடப் படுகிறான். அச்சங்கடத்தை நீக்க வேண்டும். இவன் நமக்குப் பிரியமான செய்கையையே செய்பவன். தன் ஞாதிகளுக்கும் நன்மையைச் செய்பவன்," என்று கூறி வேண்டிக் கொண்டார்கள். பிரமதேவர், "தேவர்களே! முன்பு ஏலாபத்திரன் கூறியபடி வாசுகி செய்யக்கடவன். பாவிகளான சர்ப்பங்களுக்கு மட்டும் அழிவேற்படும். அறநெறி செல்லும் சர்ப்பங்களுக்கு அழிவேற்படாது. ஜரத்காருமுனிவர் பிறந்து இப்பொழுது உக்ரமான தவம் புரிந்துவருகிறார். வாசுகி தன் சகோதரியான ஜரத்காருவை அவர் கேட்கும் போது கொடுக்கக்கடவன். ஏலாபத்ரன் சொன்னது மிகவும் உண்மை. பிழையல்ல," என்றார். இங்ஙனம் பிரமன் கூறியதைக் கேட்ட வாசுகி சர்ப்பங்களெல்லாவற்றையு மழைத்துக் கொண்டு தன்னிருப்பிடம் வந்தான்.

பிறகு சர்ப்பங்களைப்பார்த்து, "யாருக்கும் கட்டுப்படாத ஜரத்காரு எப்போது மனைவியை யடைய விரும்புகிறாரோ அப்போது வந்து உடனே எனக்குத் தெரிவியுங்கள். அப்படிச்சொன்னால் தான் நமக்கு க்ஷேமம்," எனக்கூறி ஜரத்காருவின் வரவைக் கவனித்துக் கொண்டிருக்கும்படி அநேக நாகர்களுக்குக் கட்டளையிட்டான்.

## அத்தியாயம் 25.

சௌனகர் "சூதபுத்திரரே! அந்த மகாத்மாவாகிய ஜரத்காருக்கு அப்பெயர் வந்ததற்குக் காரணம் என்ன? அதைத் தெரி

ந்து கொள்ள விரும்புகிறேன். தயை செய்து கூறவேண்டும்,'' என்று கேட்கச் சூதர் கூறுகிருர்.

"சௌனகரே! அழிந்து போவதற்கு ஜரையென்று சொல்கிருர்கள். துன்பத்தைச் செய்வதற்குக் காரு வென்பர். அவருக்கு வைராக்கியத்திஞல் சரீரம் காருவாகவிருநதது. அவர்காலக்கிரமத்தில் உக்கிரமானதவத்திஞல் சரீரத்தைக் குறைத்துக்கொண்டார். இதஞல் தான் அவருக்கு ஜரத்காரு வென்னும் பெயருண்டாயிற்று. வாசுகியின் சகோதரியும் தவமகிமையால் ஜரத்காரு வென்னும் பெயர் பெற்றனள்,'' என்ருர் இதைக்கேட்ட சௌனகர் சந்தோஷமடைந்து, "சூதரே! ஆஸ்தீகர் எவ்வாறு ஜனிததாரென்பதைக்கேட்க விரும்புகிறேன்'' என, சூதபுததிரர் புராணத்திலுள்ளபடி சொல்லத் தொடங்கிஞர். வாசுகி தன் சகோதரியை ஜரத்காருரிஷிக்காகச் சித்தமாய் வைத்துக்கொண்டிருநதான். ஜரத்காரு முனிவரோ வெகுகாலம் வரையில் விவாகத்தை விரும்பாமல் தவத்திலேயே யிருந்து வந்தார். அந்த மகாத்மா பூமிமுழுதும் திரிந்து கொண்டிருந்தார். மனேவியைப்பற்றி நினேக்கவே யில்லே. பின்மற்ருருகாலம் நேர்ந்தபோது குரு வம்சததிற் பிறந்த பரீக்ஷித்தென்னும் அரசன், அவரது பிரபிதாமகராகிய பாண்டு முன் இருந்தது போலவே வேட்டையாடுவதில் மிகவும் பழகி வந்தார். அபிமன்னியுவின் புத்திரராகிய அவர் பாண்டுவைப் போலவே உலகத்தில் பிரசித்தி பெற்றிருந்தார். அந்த அரசன் அநேக விலங்கினங்களே வேட்டையாடிக் கொண்டு காட்டில் சஞ்சரித்தான். அவன் ஒரு சமயம் பகவாஞகிய ருத்திரன் தேவலோகத்தில் மான் வடிவங்கொண்ட யாக புருஷனே அடித்தது போல ஒரு மானேயடித்தான். அடிபட்ட அந்த மான் காணுமற்போயிற்று. அப்படி அது காணுமற் போனது அந்த அரசன் சீக்கிரம் சொர்க்கம் போவானென்பதைத் தெரிவிப்பது போலிருந்தது. அரசன் அந்த மானேத்தேடிவெகுதூரம் அலேந்து அலேந்து பார்த்துக் கடைசியில் ஊட்டின கன்றுகளின் வாயிலிருந்து வெளிபட்ட மிகுந்தபால்நுரையை உண்டு மாட்டுக்கொட்டடிகளில் உட்கார்ந்திருக்கும் ஓர் ரிஷியைக்கண்டான். அவரைக்கண்டதும் அரசன் விரைவாகஅவரிடம் சென்று, "ஓ பிராமணரே! நான் அபிமன்யுவின் புத்திரஞகிய பரீக்ஷித்தென்னும் அரசன். நான் அடித்த மாஞென்று காணுமற் போய்விட்டது. அதைக்கண்டீரோ!'' எனக்

கேட்டான். மௌனவிருதத்திலிருந்த அந்த முனிவர் அரசனுக்கு யாதொரு பதிலும் கூறவில்லை. அதனால் அரசன் சினமடைந்து, இறந்த சர்ப்ப மொன்றைத் தன்வில்லின் நுனியால் எடுத்து அந்த ரிஷியின் கழுத்தில்மாட்டி விட்டுச் சென்றான்.

பிறகு அரசன் அவரைப்பார்க்காமலிருந்துவிட்டான். முனிவரும் மௌனமாக விருந்து விட்டார். பிறகு, அரசன் தான் அவ்விதம்செய்தும் கோபியாமல் பொறுமையுடனிருக்கும் முனிவர்மேற்கொண்ட கோபத்தைத் தணித்துக்கொண்டு துக்கத்துடன் பட்டணம் சென்றான். அந்தரிஷி அவ்விதமேயிருந்தார். பொறுமையைப் பூஷணமாகக் கொண்ட மகரிஷி தாம அவமதிக்கப்பட்டும் இராஜ தர்மத்திற்பிழைபடாத அந்தப் பரீக்ஷித்தினிடம் கோபம் கொள்ளவில்லை. பரத வம்சத்தர்களுக்குள் சிறந்த பரீக்ஷித்தும் தவமதியிற் சிறந்தவரும் தர்மகுண சீலருமாகிய அந்தரிஷியைத் தெரிந்து கொள்ளாமல் அவ்விதம் செய்தான்.

அந்த மகரிஷிக்குக் கடுமையான தவமும், மிகுந்ததேஜஸும் கோபமும் உடைய ஓர் புத்திரனிருந்தான். அவர்எவ்வளவு தூரம் வேண்டினாலும் அனுக்கிரகிக்கும் அந்தக்காரணமில்லாதவர். தருமநியாயம் சிறிதும் தவறாதவர். சிறுவயதினர். சிருங்கி யென்னும் பெயர் கொண்டவர். சகல பிராணிகளுக்கும் நன்மையைச் செய்ய ஆவலுடைய பிரம்ம தேவரிடம் சிற்சில சமயம் சென்று அவரைத் தரிசித்து வருவது வழக்கம். அப்படியே இச்சமயமும் தரிசனம் செய்து அவரிடம் உத்தரவு பெற்று ஆச்சிரமத்திற்கு வந்தார். வரும்போது மகாகோபமுள்ளவரும் விஷம் போன்றவருமாகிய அவரை, அங்கு விளையாடிக் கொண்டிருந்த அவரது நண்பன் கிருசன் என்னும ரிஷிபுத்திரன் கண்டு நகைத்து, "ஏ சிருங்கியே ! மகாதேஜஸுள்ளவரும், தவமதியிற்சிறந்தவருமாகிய உனது தந்தை தமது கழுத்தில் சவத்தைத் தரித்துக்கொண்டிருக்கிறார். ஏசிருங்கியே ! நீ கருவமடையாதே ! குற்றமற்ற மகாஞானிகளும் மகரிஷிகளின் மக்களுமாகிய நாங்கள் பேசும்போது நீயும் எங்களுக்குச் சரியாகப் பேசாதே. பிணத்தைச் சுமந்துகொண்டிருக்கும் பிதாவை உன் கண்கொண்டு பார்க்கப்போகும் உனக்கு ஆண்தன்மையேது ? அவரைக்கண்ட எனக்கே மிகுந்த துக்க முண்டாகிறது," என்று கூறினான்.

இதைக் கேட்டதும் மிகுந்த கோபமுள்ளவராகிய சிருங்கி வருத்தமுற்று, கிருசனென்பவனைப் பார்த்து, "அப்பா! என் பிதா எல்லாப்பிராணிகளுக்கும் நன்மையை விரும்புகிறவர். சதா காலம் வேறொன்றிலும் சித்தஞ் செலுத்தாமல் தேவனாகிய விஷ்ணுவைப் பூஜிப்பவர். வனத்திலுள்ள ஆகாராதிகளைப்புசிப்பவர். மேலும் எப்போதும் மௌனவிருதம் பூண்டவர். அப்படிப்பட்ட எனது பிதா இப்பொழுது பிணஞ் சுமக்க நேர்ந்தவிதமென்ன," என்று கேட்டார். கிருசன் "நண்பா! இக்கானகத்திற்கு வேட்டையாடவந்த பரீக்ஷித்து மகாராஜன் உனது தந்தையின கழுத்தில் இறந்து போன சர்ப்பத்தை இப்பொழுதுதான்போட்டுச் சென்றான்," என, சிருங்கி "துராத்மாவாகிய அந்த அரசனுக்கு எனது தந்தை செய்ததீங்கு யாது? உண்மையை நீ கூறவேண்டும். என் தவத்தின் மகிமையைப்பார்," என்று சொன்னார். கிருசன் "அபிமன்யுவின் குமாரனாகிய பரீக்ஷித்து மகாராஜன் தனியே வேட்டைக்கு வந்து தான் கண்ட ஓர் மானை அடித்தான். அந்த மிருகம் அவன் கண்ணுக்குத் தெரியாமல் ஓடிப்போயிற்று. அதைத் தேடிக்கொண்டு இந்த வனத்தில் எங்கும் சென்றலைந்து பசி தாகத்துடன் இங்குவந்து, கட்டைபோலிருப்பவரும் வாய் பேசாமலிருப்பவருமாகிய உன் பிதாவைப் பார்த்து, காணாமற்போன அந்த மானைக் கண்டதுண்டா, எனக்கேட்டான். மௌன விருதம் பூண்ட அவர் அவனுக்கு யாதொருபதிலும் சொல்லவில்லை பிறகு அரசன், அங்கு செத்துக் கிடந்த ஓர் பாம்பைத் தன் வில்லின் நுனியாலெடுத்து அதை உன் தந்தையின் கழுத்தில் மாட்டிவிட்டுப் போய் விட்டான். ஏ சிருங்கியே! தவத்தினின்றும் மாறுபடாத உன் தந்தை அப்படியேயிருக்கிறார். அந்த அரசன் அஸ்தினாபுரியிலிருக்கிறான்," என்றான். இதைக் கேட்டதும் சிருங்கி சற்று நேரம் ஸ்தம்பித்து நின்று பிறகு கண்களினின்று கனற்பொறி பரக்கக் கோபங்கொண்டு உடனே ஆசமனம் செய்து, "தியானத்திலிருக்கும் என் தந்தையின் கழுத்தில் இறந்த சர்ப்பத்தைப் போட்ட மகாபாபியும், பிராமணரை அவமதித்தவனும், குருவம்சத்திற்கு அபகீர்த்தியை யுண்டாக்கினவனுமாகிய அந்த அரசனைக் கொடிய விஷமுள்ள தக்ஷகன் என்கிற சர்ப்பராஜா என்வாக்கின் பலத்தால் இன்று முதல் எழாவது நாள் இராத்திரிக்குள் கடித்துக் கொல்லக்கடவன். பரீட்சித்தும் யமலோகம் செல்லக்கடவன்," என்று சபித்தார்.

இவ்விதம் மிகக் கோபத்துடன் சாபங்கொடுத்து விட்டுத் தமது ஆச்சிரமமடைந்து இறந்த பாம்பு கழுத்தில் மாலையாக விருக்கத் தியானத்திலிருக்கும் விருத்தாப்பியராகிய தமது தந்தையைப் பார்த்து, மறுபடியும் கோபமும் வியாகூலமும் அடைந்து கண்களில் நீர்ததும்ப நின்று "பிதாவே! இவ்விதம் தங்களை அவமானப் படுத்திய குருவம்சத்து அதமனாகிய பரீட்சித்து என்னும் அரசனுக்குக் கடுமையான சாபங்கொடுத்தேன். இன்று முதல் ஏழு நாள் இராத்திரிக்குள் சர்ப்பராஜனாகிய தக்ஷகன் அவனைக் கடித்து எமலோகத்திற்கு அனுப்பப்போகிறான்," என்றான். அவ்வளவு கோபங்கொண்ட பிள்ளையைப்பார்த்து சமீகர், "நீ சாபங்கொடுத்தது எனக்குச் சம்மதமில்லை. இது தவம் புரிபவர்களுக்குத் தருமமல்ல. நாம் அந்த அரசனுடைய தேசத்தில் வாசஞ்செய்கிறோம். அவ்வரசன் நீதியாக இராஜ்யபரிபாலனம் செய்கிறான். ஆகையால் அவனுக்குச் சாபங்கொடுத்தது அவ்வளவு உசிதமல்ல. அரசன் எவ்விதமிருப்பினும் நம்போன்றவர்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும். தருமத்தைக கெடுக்கின் அது நம்மைக் கெடுத்து விடும் இதிற் சிறிதும் ஐயமில்லை. அரசன் இல்லாத தேசத்தில் எப்போதும் தீங்குகளுண்டாகும். கருவங்கொண்ட உலகத்தை அரசன் தருமமாகச் சிக்ஷிக்கிறான். அவ்விதம் சிக்ஷிப்பதால் அதருமம் நீங்குகிறது. வருத்தமடைந்தவன் தருமத்தைச் செய்யமாட்டான். கிரியைகளை நடத்த மாட்டான். நன்மையான எதையுஞ் செய்யான். தருமம் அரசனாலேயே விருத்தியடைகிறது தருமத்தால் சொர்க்கங்கிடைக்கும். அரசனாலேயே யாகங்கள் நடக்கவேண்டும். யாகத்தினால் தேவர்கள் திருப்தி யடைகிறார்கள். தேவர்களால் மழையுண்டாகிறது. மழையால் ஒஷதிகள் உண்டாகின்றன. ஒஷதிகளால் உலகத்திற்கு அளவு கடந்த நன்மையுண்டாகிறது மானிடர்களைப் போஷிப்பவன் அரசனே; ஆகையால் அரசன் மானிடர்களுக்கு நாதன் என்று மனு கூறியிருக்கிறார். அரசன் நம்மைக்காப்பாற்றாதபட்சத்தில் நமக்கு மிகவும் கெடுதி யுண்டாகும்.

இஷ்டப்படி தருமம் செய்ய நம்மால் முடியாது. சாஸ்திரங்களைக்கண்ணாகக் கொண்ட அரசர்களால் இரக்ஷிக்கப்பட்டு நாம் மிகுதியான தருமத்தைச் செய்து வருகிறோம். அவர்களுக்கும் தருமத்தில் பாகமுண்டு.

பரீக்ஷித்து மஹாராஜன் அவருடைய பிரபிதாமஹனாகிய பாண்டு மஹாராஜனைப்போல் நம்மைக் காப்பாற்றுகிறான். அவ்வரசனுக்கு மன்னிப்புக்கொடுக்க வேண்டியது நமது கடமை. அவ்வளவு மகிமை பொருந்திய அவ்வரசன் மிருகத்திற் கொண்ட விருப்பத்துடனும் களைப்புடனும் பசியுடனும் வந்து தெரியாமல் இந்தக்காரியம்செய்தான். இதிற்சந்தேகமில்லை.எப்போதும் அரசனைச் சபிக்கக்கூடாது. புத்திர! நீ தெரியாமல் கெட்ட காரியத்தை அதி சீக்கிரத்தில் செய்து விட்டாய்" என்றார். இவ்விதம் தந்தைகூறிய தும்சிருங்கி, "ஏபிதாவே! நான் செய்தது நல்லதாயினும், கெடுதலாயினும், உமக்குப் பிரியமாயினும், அப்பிரியமாயினும் முன் நான் சொன்ன வார்த்தை பொய்யாகாது" என்று சொல்ல, சமீகர், "நீ உக்ரமான சக்தியுள்ளவனென்றும், சத்தியம் பேசுகிறவனென்றும் நானறிவேன். ஒருபோதும் நீபொய் சொல்வதில்லை. இதுவும் பொய்யாகாது. அதனாலே தான் உனக்கு நான் கூறினேன். நீ எனக்கு மகனாக இருப்பதாலும், வாலிபனாக இருப்பதாலும் உன் அவசரத்தைக் கண்டு உபதேசிக்கிறேன். நீ பொறுமையுடன் வனத்திலுள்ள உணவுகளைப் புசித்துக் கொண்டு இந்தக்கோபத்தையும் ஒழித்து விட்டு வாழவேண்டும். அறநெறிகடைப்பிடித் தொழுகவேண்டும். ஐம்பொறிகளையு மடக்கி சம்பாதித்த அறமானது கோபத்தால் நாசமடையும். அறநெறி கடந்தார்க்கு நற்கதிகிடைப்பதரிது. பொறுமை யுள்ளவர்களுக்கே காரியம் கைகூடும். ஆகையால் பொறுமையை வகிக்க வேண்டும். இந்திரிய நிக்ரகஞ் செய்யவேண்டும். பிரமலோகத்திற் கப்பாலுள்ள உலகமும் பொறுமையால் கிடைக்கும். நான் இப்பொழுது பொறுமையுடன் செய்ய வேண்டியதையே செய்கிறேன்.

"பக்குவமடையாத அறிவினையுடையவனும், மிகக் கோபம் கொண்டவனுமாகிய என்மகன் நீ எனக்குச் செய்த அவமதிப்பைப்பொறுக்காமல் உன்னைச் சபித்து விட்டான் என்று அரசனுக்குத் தெரியப்படுத்துகிறேன்," என்றார்.

---

## அத்தியாயம் 26.

---

தபோதனரும், விருத நியமங்களுடையவரும், தயையுடையவருமாகிய சமீகர் ஆசார சீலனாகிய கௌரமுகன் என்னும் பெயர்

கொண்ட தமது சீடனொருவனைப் பரீக்ஷித்து மகாராஜனிடம் சென்று க்ஷேமத்தைத் தெரிவித்துச் சாபவரலாற்றையும் தெரிவித்து வரும்படி அனுப்பினார்.

கௌரமுகன் என்ற சீடன் விரைவாகப் பரீக்ஷித்து மகாராஜனுடைய நகரம் சென்று அரண்மனைக் காவற்காரர்களால் தன்னுடைய வருகையை அரசனுக்குத் தெரிவிக்கச் செய்து, அவன் சபையிற் பிரவேசித்து அவனுடைய உபசரணையை யேற்றுக் கொண்டு சிறிது பொழுது சிரமபரிகாரம் செய்த பின்னர் சமீகர் கூறிய பயங்கரமான சாபவரலாற்றை மந்திரிகள் முன்னிலையில் தெரிவிக்கிறார்.

“இராஜேந்திரா ! உன்னுடைய இந்த தேசத்தில் சமீகர் என்னும் பெயர்கொண்ட ஒரு முனிவரிருக்கிறார். அவர் ஐம்புலன்களை வென்றவர். மனச்சாந்தி யுடையவர். அரியதவ மகிமையுள்ளவர். நீ அந்த மகாமுனிவருடைய கழுத்தில் உனது வில்லின் நுனியால் ஒரு செத்த அரவத்தைத் தூக்கிப்போட்டாய். நீ செய்த அவமதிப்பைப் பாராட்டாது சமீகர் மன்னித்தார். அதனை அவர் குமாரனாகிய சிருங்கி பொறுக்கவில்லை. அவர் சமீகரை அறியாமல் “இன்று முதல் ஏழு ராத்திரிக்குள்ளாக தக்ஷகன் என்னும் அரவந்தீண்டி பரீக்ஷித்து இறக்கக் கடவன்” எனக்கடுஞ் சாபமிட்டிருக்கின்றனர். இதனைப்பிறகு அறிந்த சமீகர் தங்கள் மீதிரக்கங்கொண்டு அச்சாபத்தினின்று தப்புவதற்கேற்ற உபாயத்தைத் தேடிக்கொள்ளும்படிக்குத் தங்கள் நன்மையை யுத்தேசித்துத் தங்களிடம் தெரிவிக்க என்னை யனுப்பினார்,” என்றார்.

குருநந்தனனாகிய அந்தப் பரீக்ஷித்து மகாராஜன் இக்கடுஞ் சொற்களைச் செவியுற்றதும் மௌனவிரதமுடையவரும், தயையுள்ளவருமாகிய சமீகருக்குத் தான் செய்த பெரும் அபராதத்தைச் சிந்தித்து மிகவும் வருத்தமுற்றான் ஆனால் தன் மரணத்தைக் குறித்து மனதிற் சிந்திக்கவுமில்லை. கௌரமுகனை நோக்கி “நான் செய்த பெருங்குற்றத்தை இன்னும் பொறுத்துக் கொள்ளும்படி முனிவருக்குப் பன்முறையும் தெரிவிக்க வேண்டும்,” என்று கூறி அவரை அனுப்பினான்.

இவ்விதம் அரசன் கூறியதும் கௌரமுகன் அவனிடம் விடைபெற்றுக்கொண்டு தனது குருவாகிய சமீகமுனிவர் ஆச்சிரமத்திற்கு வந்து சேர்ந்தான்.

கௌரமுகன் தன்னைவிட்டுப் பிரிந்ததும் அரசனுக்குப்பெருத்த யோசனை யுண்டாகித் தன்னுடைய அமைச்சர்களை வரவழைத்துத் தனது மரணத்தைப் பற்றி அவர்களிடம் ஆலோசனை செய்து ஒற்றைத் தூணோடு கூடிய ஓர் மாளிகையைக் கட்டுவித்து அதற்கு அநேக காவல்களை ஏற்படுத்தினான். தவிர தகுந்த மூலிகைகளுடன் வைத்தியர்கள், மந்திர சித்திபெற்ற அந்தணர்கள் இவர்களையும் நான்கு பக்கங்களிலும் வீற்றிருக்கத் திட்டப்படுத்தி அந்த மாளிகையி லிருந்து இராஜ்ய பரிபாலனம் நடத்திவந்தான்.

இப்படியிருக்கையில் ஏழாவது நாள் வந்தது. இப்பொழுது காசியபர் அரசனுக்குத் தக்ஷகனால் தீங்குண்டாகப் போகிறதென்பதைத் தெரிந்துகொண்டு "இவ்வரசனுக் குண்டாகும் விஷத்தை யொழித்தால் தர்மம் அர்த்தம் இவ்விரண்டையும் அடையக் கூடும்," என நினைத்து வைத்தியஞ் செய்யப் புறப்பட்டார்.

அவர் புறப்பட்டு வரும் வழியில், சர்ப்ப சிரேஷ்டனாகிய தக்ஷகன், வயதுசென்ற ஓர் அந்தணவேடம்பூண்டு அவர் முன் தோன்றி, "அந்தணரே! நீர் எங்கே எந்தக்காரியத்தை யுத்தேசித்துச் செல்கிறீர்?" என்று கேட்டான். கசியபர், அந்த பிராமணனைப்பார்த்து குருவம்சத்தி லுண்டான சூரனாகிய பரீக்ஷித்து மகாராஜனை பன்னக சிரேஷ்டனாகிய தக்ஷகன் தன்னுடைய விஷாக்கினியால் பொசுக்கப்போகிறான். ஒப்புயர்வற்ற வீரனும், மகாத்துமாவும் பாண்டவர்களைச் சேர்ந்தவனுமாகிய அவ்வரசனை, விஷத்தைப் போக்கும் மாந்திரீகமறிந்தவனும், உலகமெங்கும் புகழ்படைத்தவனுமாகிய நான் சொஸ்தப்படுத்துவதற்குச் செல்கிறேன். எனது குருவின் அனுக்கிரகத்தால் விஷத்தைப் போக்க வல்லசக்தி என்னிடம் ஏற்பட்டிருக்கிறது," என்றார். இதைக்கேட்ட தக்ஷகனாகிய அந்த அந்தணன் "ஏ பிராமணா! நான்தான் அவ்வரசனை விஷத்தால் தகிக்கப்போகும் தக்ஷகன். என்னால் கடிக்கப்பட்டவனைப் பிழைப்பிக்க எவனாலும் முடியாது, திரும்பிப்போ" என்றான். "நீ அரசனைக்கடித்தால் அந்த விஷத்தைப் போக்கி அவனைப்பிழைப்பிக்க முடியு மென்பது என்மந்திரசக்தியின் வலிமையால் உண்டான நிச்சயம்" என்றார்.

## அத்தியாயம் 27.

---

இதைக் கேட்டதும் தக்ஷகன், "கசியபரே! நான் கடித்த மற்றெதனுடைய விஷத்தையும் போக்க வல்ல சாமார்த்தியம் உமக்கிருக்குமாகில், இதோ இந்த ஆலமரத்தைக் கடிக்கிறேன். இதைப் பிழைப்பியும் பார்ப்போம்" என்றான். கசியபர், "நாக சிரேஷ்டனாகிய ஏ தக்ஷகா! நீ இந்த ஆலமரத்தைக் கடித்து இதில் விஷம் பரவும்படி செய். நான் அந்த விஷத்தைப் போக்கிவிடு கிறேன். என் மந்திரசக்தியின் மகிமையைப்பார்" என்றார். இப்படி முனிவர் கூறியதும் தக்ஷகன் அந்த ஆலமரத்தைக் கடித்தான். உடனே அந்த மரத்தில் நான்கு பக்கங்களிலும் தீப்பிடித்து எரிந்து சாம்பலாயிற்று. அப்பொழுது தக்ஷகன், "ஏ அந்தண சிரேஷ்டனே! இந்த மரத்தைப்பிழைப்பியும்," என்றான். கசியபர், சாம்பலாய்ப்போனமரத்தை ஒன்றுசேர்த்து, "ஏ தக்ஷக! இதோ இப்பொழுது யான் பிரயோகிக்கும் என் மந்திர மகிமையைப்பார். உன் முன்பாகவே பிழைப்பிக்கிறேன்" எனக்கூறி, அந்தச் சாம்பலிலிருந்து முதலில் முளை கிளம்பும்படி செய்தார். பிறகு அம்முளையிலிருந்து இரண்டு இலைகளுண்டாகும்படி செய்தார். பிறகு இலைகளுடன் கிளைகளை யுண்டுபண்ணினார். இதைக் கண்டதும் தக்ஷகன் மிக ஆச்சரியத்தை யடைந்து "பிராமணோத்தமரே! தங்களிடத்தில் அதியற்புதமான சக்தியிருக்கிறது. நீர் நான் கடித்ததா லுண்டாகும் விஷத்தையே யன்றி மற்றெதுவானாலும் போக்குவீரென்பதில்லையமில்லை. தபோதனரே! நீர் அரசனிடம் இதற்காக விரும்பியுள்ள பிரயோசனம் யாது? அதை நான் தமக்குக் கொடுக்கிறேன். நீர் திரும்பிவிடும். பிராமண சாபமடைந்தவனும், ஆயுள் முடிந்தவனுமாகிய அவ்வரசனிடம் உமது மந்திரம் பலிப்பது சந்தேகந் தான். அப்படி நேரிடின் மூவுலகமும் புகழும் உமதுகீர்த்தி கிரணங்களை யிழந்த சூரியன் போலாய் விடும்," என்றான். கசியபர், "நான் அரசனிடம் திரவியத்தை உத்தேசித்தே செல்கிறேன். அதை நீ அளிப்பாயே யாகில் பெற்றுக் கொண்டு திரும்பி விடுகிறேன்" என்றார். தக்ஷகன் அவ்வரசனிடம் தாங்கள் விரும்பியதைவிட அதிகமாகவே நான் கொடுக்கிறேன். நீர் திரும்பிப்போய் விடும்" என்றான். கசியபர், பரீக்ஷித்து மகாராஜானுடைய ஆயுளுக்கு இறுதி

காலம் வந்து விட்டதென்பதைத் தமது ஞானத்தைக் கொண்டு ஆலோசனை செய்து அறிந்து அவனிடம் தாம்விரும்பிய பொருளைப் பெற்றுக் கொண்டு திரும்பித் தம தாச்சிரமம் சென்றார். பிறகு தக்ஷகன் அதிவிரைவாக அஸ்தினாபுரி வந்து, அரசன் விஷத்தைப்போக்கவல்ல அநேகமந்திர ரக்ஷணைக்குள்ளாயிருக்கிறானென்பதை யறிந்து நாம் இவ்வரசனை வஞ்சிக்க உபாயம் யாதெனயோசித்துத்தன் அருகேயிருந்தசர்ப்பங்களைப்பார்த்து, "முனிவர் வேடமெடுத்துக் கொண்டு பழம், தருப்பை, தீர்த்தம் இவைகளுடன் அரசனிடம் சென்று அவனுக்குப் பழம் புஷ்பம் தீர்த்தம் இவைகளைக் கொடுங்கள்" எனக்கட்டளையிட்டான். தக்ஷகன் கட்டளைப்படி சர்ப்பங்கள் அரசனிடம் சென்று தருப்பை தீர்த்தம், கனி இவைகளை அவனிடம் கொடுக்க, அரசன் அவைகளை அன்போடு ஏற்றுக்கொண்டு சர்ப்பமாகிய அந்தணர்கள் விரும்புங் காரியத்தையும் பூர்த்தி செய்தனுப்பினான். முனிவர்களாக மாறு வேடம் பூண்ட அந்த நாகங்கள் சென்றவுடன் அரசன் தனது நண்பர்களையும் அமைச்சர்களையும் பார்த்து முனிவர்கள் நம்மிடத்தன்போடு கொடுத்த இந்தக் கனியைப் புசியுங்கள். நானும் புசிக்கிறேன்," எனக்கூறிப் பழங்களில் ஒன்றையெடுத்தான். சிருங்கி முனிவருடைய சாபத்தாலும் அவன்விதியாலும் எந்தப் பழத்தில் தக்ஷகனிருந்தானோ அந்தப் பழமே அவன் கையில் அகப்பட்டது. அதைப்புசித்தான்.

ஏ சௌனக முனிவரே! அரசன் எடுத்த அந்தக் கனியில் தாம்பிர வர்ணத்துடன் கருமையான கண்களையுடைய ஓர் குட்டைப் புழுவொன்றிருந்தது. அதைக் கண்டதும் மன்னன் அமைச்சர்களைப்பார்த்து, "சூரியன் அஸ்தமிக்கப் போகிறான். இனி விஷத்தின் பயம் எனக்கில்லை. அந்த சிருங்கி முனிவருடைய வாக்குப் பொய்யாகமலே யிருக்கட்டும். இந்தக் கிருமியே தக்ஷகனாகி என்னைக் கடிக்கட்டும்; அப்படி ஏற்படுமாயின் அந்தணனை அவமதித்த தோஷமும் பரிகாரமாகிறது," என்றான். அதைக் கேட்ட அமைச்சர்களும் காலத்திற்குக் கட்டுபட்டவர்களாகி அதுவே உசிதமென்றார்கள். மரணத்தை விரும்பியவனும் பிரக்ஞையையிழந்தவனுமாகிய பரீக்ஷித்து மகாராஜன் நகைத்துக் கொண்டே அந்தக் கிருமியைத் தன் கழுத்தில் வைத்துக்கொண்டான். அரசன் நகைத்துக் கொண்டிருக்கும் போதே தக்ஷகன் தன் உட்

லால் அரசனைச் சுற்றிக் கொண்டான். உடனே பேரிரைச்ச லிட்டுக் கொண்டு அரசனைக் கடித்தான். அரசனது உடலைத் தக்ஷகன் அவ்விதம் சுற்றிக் கொண்டதைப் பார்த்த அமைச் சர்கள் தங்கள் முகங்களின் ஒளி யிழந்து பெருங்கூச்சலிட்டுக் கொண்டு ஓடினார்கள். அதன் பின் மிகுந்த துக்க மடைந்த அந்த மந்திரிகள் தாமரைப் பூவை யொத்த நிற முள்ளவனும், ஆகாயத்தைப் பிளந்து செல்பவனுமாகிய தக்ஷக னென்கிற அந்த ஆச்சரியகரமான சர்ப்பத்தைக் கண்டார்கள். பிறகு தக்ஷகனுடைய விஷ நெருப்பால் சூழப்பட்ட அந்த கிரு கத்தை விட்டுத் திசைகள் தோறும் ஓடினார்கள். பரீக்ஷித்து மகா ராஜனும் வஜ்ரத்தால் அடியுண்டவன் போல் பூமியில் விழுந்தான்.

இவ்விதம் தக்ஷகனால் அரசன் மரணமடைந்த பின்பு இராஜா வுக்குச் செய்ய வேண்டிய பரலோக கிரியைகளைச் செய்தார்கள். பிறகு இராஜ புரோகிதர்களாகிய பிராமணர்கள், மந்திரிகள், பட் டணத்து ஜனங்கள் எல்லாரும் ஒன்று கூடி பரீக்ஷித்தின் புத்தி ரனை இராஜாவாகப் பட்டாபிஷேகம் செய்தனர். அந்த அரசனைத் தான் ஜனமேஜயனென்று சொல்லுகிறார்கள்.

அந்த ஜனமேஜயன் தான் சிறுவனாக இருக்கும்போதே சிறந்த புத்திமானாக விருந்தான். அரசர்களுக்குள் சிரேஷ்டனாக வும் விளங்கினான். இவன் தன் மந்திரிகள் புரோகி தர்கள் இவர்களுடன் தன் பிரபிதாமஹனாகிய தர்ம ராஜாவைப் போல் அரசு புரிந்து வந்தான். ஜனமேஜயன் பகைவர்களைச் சங் கரிக்கும் சாமர்த்தியமுள்ளவனாக விருப்பதைக் கண்ட அவன் மந்திரிகள் அவன் மேல் மிகவும் சந்தோஷமடைந்து, காசிதேச மன்னனாகிய ஸ்வர்ணவர்மா வென்பவனிடம் சென்று அவன் பெண் ணாகிய வபுஷ்டை யென்பவளை அரசனுக்காகக் கேட்டனர். அந்த ஸ்வர்ணமஹாராஜன் குருசிரேஷ்டனாகிய ஜனமேஜயனுக்கு பெண் கொடுக்கச் சம்மதித்து விவாகத்தை முடித்தான். ஜன மேஜயன் அந்த வபுஷ்டையை விவாகம் செய்துகொண்டு மனமகி ழ்ச்சி யுடனிருந்தான். பிறமாதர்களிடம் மனதைச் செலுத்தா மலிருந்தான். மலர்ந்த புஷ்பங்கள் நிறைந்த தடாகங்களிலும் வனங்களிலும், முன்னம் புரூரவசு என்ற அரசன் ஊர்வசியுடன் சுகித்ததுபோல மனமகிழ்ச்சி யுடன் விளையாடினான். வபுஷ்டை யும் மகா பிரசித்தவானாகிய ஜனமேஜயனைக் கணவனாகவடைந்த

தற்கு மகிழ்வுற்று அவனுடன் சுகமாக விளையாடி ஆனந்தத்தை அவனுக்கு உண்டுபண்ணினான்.

---

## அத்தியாயம் 28.

---

இச்சமயத்தில் மகா தபோதனராகிய ஜாத்காரு முனிவர் சூரியன் அஸ்தமனமாகுமிடமே தமக்குத் தங்குமிடமாகக் கொண்டு பூமிமுழுதும் சஞ்சரித்து வந்தார். அப்பொழுது ஓர் பெரும் பள்ளத்தில் எலியால் கத்தரிக்கப்படும் விலாமிச்சம் புல்லொன்றைப்பிடித்துக் கொண்டு தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருக்கும் தமது பிதிர்க்களைப் பார்த்து, அவர்களோடு சம்பாஷித்து அவர்களைக் கரையேற்றுவான் கருதித் தமது பெயரை யொத்த பெயரமைந்த ஓர் கன்னிகையைக் கல்யாணம் செய்து கொள்வேனென்று சங்கற்பித்துக் கொண்டு காட்டிற்கு வந்தார். அங்கே "நான் ஏழை வயோதிகன், என்பெயருள்ள கன்னிகையையாசிக்கின்றேன்," என்ற இம்மொழிகளை மூன்று முறை உரக்கக் கூறினார்.

முன்னமேயே ஜரத்காரு வரும் சமயத்தைக் கவனிக்கும்படி வாசுகியினாற் கட்டளையிடப்பட்டிருந்த நாகங்கள், அச்செய்தியைவாசுகிக்குத் தெரிவித்தன. நாகராஜனாகிய வாசுகிதன்சகோதரியாகிய ஜரத்காருவுடன் முனிவரிடம் சென்று அவர் சொன்ன நிபந்தனைக்குக் கட்டுப்பட்டு ஜரத்காருவைக் கல்லியாணஞ் செய்து கொடுத்தார். அவரும் விதிப்படி விவாகம் செய்து கொண்டார்.

இவ்விதம் ஜரத்காரு முனிவர், ஜரத்காருவென்ற ஸ்திரீயை மணம் புரிந்து மகாமுனிவர்கள் கொண்டாடப்பன்னக சிரேஷ்டனாகிய வாசுகியின் கிருகம் அடைந்து, அங்கு சயனக் கிருகம் சென்று தமது மனைவியுடன் கூறுகிறார்.

"பிரியமுள்ள நாயகியே! எனக்கு நீ எப்போதும் அப்பிரியத்தைச் செய்யக்கூடாது. அப்பிரியமான பேச்சையும் பேசக்கூடாது. ஏதேனும் அப்பிரியம் ஏற்பட்டால் உன்னை விட்டுப்பிரிந்து விடுவேன். பிறகு உன் கிருகத்தில் வாசஞ் செய்யமாட்டேன். இம்மொழிகளை ஞாபகத்தில் வைத்துக்கொள்," என்றார்.

இதைக்கேட்டதும் வாசுகியின் சகோதரி மிகுந்த துக்கமடைந்து அவ்விதமே நடக்கிறேனென்று ஒப்புக்கொண்டு அவருக்குப் பணிவிடைசெய்து வந்தாள்.

அவள் ருதுஸ்நானம் செய்த ஓர் நாள் கிரமப்படி முனிவருடன் சேர்ந்தாள். அப்பொழுது அவளுக்கு அக்கினிக்கு நிகரான கர்ப்பமுண்டாயிற்று. அக்கினிக்கொப்பான தேஜஸுள்ள அந்த கர்ப்பம் சுக்கில பட்சத்து சந்திரனைப்போல் வளர்ந்தது. பிறகு சில நாட் சென்றபின் மகாதபோதனராகிய ஜரத்காரு முனிவர், மிகவும் சிரமமடைந்தவர் போல், தமது மனைவியின் மடியில் தலையைவைத்துக்கொண்டு நித்திரை செய்தார். இவர் தூங்கிக்கொண்டிருக்கையில் சூரியன் அஸ்தமனமானான். அப்போது நல்ல மனதுள்ள வாசுகியின் சகோதரி தன் கணவனது தர்மம் கெடுமே யெனப்பயந்து, "நான் எனது நாயகனை யெழுப்புவது தர்மமாகுமோ! ஆகாதோ! தெரியவில்லையே! இவரை யெழுப்பினால் நிச்சயமாகக் கோபிப்பரே! என்ன செய்வேன். ஸந்தியா காலம் தப்புமாயின் தருமசீலருக்குக் கோபம்வரும். அல்லது தர்மத்திற்குக் குறைவு ஏற்படும்" என்றுபலதடவை யோசித்துக் கடைசியில் எவ்விதமாயினும் தர்மத்திற்கு லோபமுண்டாகலாகாதெனத் தீர்மானித்துத் தன் மடியில் சயனித்திருக்கும் அக்கினிக்கொப்பான தேஜஸுடைய முனிவரைப்பார்த்து, மதுரமான குரலுடன் கூறுகிறாள்.

"மகாபாக்கிய முள்ள நாதரே! எழுந்திருக்க வேண்டும். சூரியாஸ்தமனமாகிறது. தாங்கள் ஸ்நானம் செய்து சந்தியை உபாஸிக்க வேண்டும். அக்கினிஹோத்திரம் ஸித்தமாக விருக்கிறது. இந்தக்காலம் ரம்மியமா யிருப்பதோடு பயங்கரமாகவும் இருக்கிறது. பிரபுவே! செவ்வானம் பரவியிருக்கின்றது மேற்றிசையில்" என்று கூறி எழுப்பினாள். மகா தபோதனராகிய ஜரத்காரு முனிவர் நித்திரை யினின்றும் விழித்துக் கொண்டு தமது மனைவியைப் பார்த்துச் சினந்து, "ஏ ஜரத்காருவென்கிற பெயர் கொண்ட பெண் சர்ப்பமே! நீ என்னை அவமதித்தாய்; ஆகையால் நான் உன்னருகாமையில் இருக்கமாட்டேன். ஏ பிரியே! நான் நித்திரை செய்தால், என்னை யனுசரித்து அஸ்தமனமாகச் சக்தியில்லையா சூரியனுக்கு. அவ்விதம் எண்ணித்தான் சயனித்திருந்தேன். அவமதிப்பை யடைந்தபின் எவனும் இந்த

இடத்தில் வசிக்கமாட்டான். என்னைப்போன்ற தருமசிலனுக்குக் கேட்க வேண்டுமோ?" என்றார்.

இவ்விதங் கூறியதும் வாசுகியின் சகோதரியாகிய ஜரத்காரு, தேக நடுக்கமுற்று மிகவும் பயத்துடன் தன் நாயகனை நோக்கிக் கூறுகிறாள்.

"ஏ பிராமணோத்தம! நான் தங்களை அவமதிக்க வேண்டுமென்கிற எண்ணங்கொண்டு எழுப்பவில்லை. தங்களுக்குத் தரும லோபமுண்டாகக் கூடாதென்று எழுப்பினேன்" என்றாள் ஜரத்காருமுனிவர், மிகக்கோபங்கொண்டு தன் மனைவியை விட்டு நீங்கவேண்டு மென்கிற எண்ணங்கொண்டவராதலால், "ஏ சர்ப்பகன்னிகையே! என்வாக்குப் பொய்யாவதில்லை. ஏற்கனவே உன்னுடன் பிரதிக்ஞைசெய்து கொண்டேனல்லவா; இதுவரையில் இங்கு உன்னுடன் சுகமாகவாசஞ் செய்துகொண்டிருந்தேன். நான் போகிறேன். போனபின்பு உன்சகோதரனாகிய வாசுகியினிடம் சமாசாரத்தைத் தெரிவி. நான் சென்றபின் நீயும் வருந்தாதே" என்றார்.

சிலாக்கியமான சரீரமுள்ள ஜரத்காருவானவள், கவலையுடனும் துக்கத்துடனும், முகவாட்டத்துடனும் முனிவரை நோக்கி கைகுவித்துக் கண்ணில் கண்ணீர்பெருகநின்று, நடுக்கத்துடன் "தருமந்தெரிந்த தபோதனரே! அறநெறி கடைப்பிடித்தொழுகி, எப்போதும் பிரியத்தையும், இதத்தையும் செய்பவளும் தங்களுடைய நன்மையையே விரும்பியவளும், எப்போதும் தங்களுக்குப் பிரியத்தைச் செய்பவளுமாகிய என்னை விட்டுப் பிரியலாகாது; எனது தமையன் என்னைத் தங்களுக்கு மனைவியாகக் கொடுத்தது தங்களுடைய பிதிர்க்களுக்கு நற்கதியளிப்பதற்கேதுவான புத்திரனை நான் யடைவதன் பொருட்டே. அப்படியிருக்க, புத்திரனை யடையவில்லை. எளியோனாகிய என்னை வாசுகி நிந்திக்கமாட்டானா? உம்மிடம் புத்திரனையடைந்தா லல்லவா பந்துக்களுக்கு க்ஷேமமுண்டாகும். எனக்குக் கிடைத்த தங்களுடைய சம்பந்தம் பிரயோசனமற்றதாகாமல் அனுக்கிரகம் செய்யவேண்டும். இன்னும் உருவமடையாத கர்ப்பத்தையென்னிடம் வைத்து, மகாத்மாவாகிய நீர் யாதொரு அபராதமும் செய்யாத என்னை விட்டுப் பிரிய விரும்புவது தகுமா?" எனக் கேட்டாள்.

இவ்விதம் தமது பனைவி சொன்னவுடன் தவத்தையே தன மாகக் கொண்ட ஜரத்காரு முனிவர், அவளைப் பார்த்து "அழ கானவளே ! அக்கினிக்கு நிகரானதும் தர்மத்தில் பிருந்த சித்த முள்ளவனும் வேதவேதாங்கங்களில் கரைகண்டவனுமாகிய ஒர் புத்திரன் உன் கர்ப்பத்தில் இருக்கிறான்" என்று கூறிவிட்டு அந் தத் தர்மாத்மாவாகிய ஜரத்காரு முனிவர் திரும்பவும் அதியுச்ர மானதவஞ் செய்ய நிச்சயஞ் செய்து கொண்டு சென்றார்

---

## அத்தியாயம் 29.

---

### ஆஸ்திகர் ஜனனம்.

ஜரத்காருவானவள் பர்த்தா சென்றவுடனே தன் தமையா னிடம் வந்து நடந்த விஷயத்தைத் தெரிவித்தாள். அச்செய்தி கேட்டதும் நாகசிரேஷ்டனுகிய வாசுகி மிகவும் வருத்தமடைந்து துக்கத்துடனிருக்கும் தன் சகோதரியைப் பார்த்து, "மங்கள சொரூபமுடைய ஜரத்காருவே ! உன்னை நான் ஜரத்காரு முனிவ ருக்குத் தானஞ் செய்ததன் காரணம் அறிவாயா? உன்னிடம் புத்திர னுண்டானால் அந்தப் புத்திரன் எங்களை சர்ப்பயாகத்தி லிருந்து காப்பாற்றுவான் என்று பிரமதேவர் கூறியிருக்கிறார். மகாபுத்திசாலியாகிய ஜரத்காரு முனிவர், உன்னைக் கல்யாணம் செய்துகொண்டது வீணுகமலிருக்கவேண்டும். அம்முனிவரால் உனக்கு கர்ப்பம் உண்டாயிருக்கிறதா? ஆனால் இம்மாதிரியான சங் கதியைப்பற்றி உன்னைக் கேட்பது நியாயமல்ல ஆயினும் காரியம் பெரிதாயிருப்பதனல் அதைப்பற்றி நான் உன்னைக் கேட்டேன். மகாதபோதனராகிய உனது நாயகன் எவராலும் தடுக்க முடியா தவரென்பதை நான் அறிவேனுகையால், அவரைப் பின் தொடர் ந்து செல்லேன். ஒரு சமயம் என்னை அவர் சபித்தாலும் சபித்து விடுவார். குழந்தாய் ! உன் கணவன் உன்னிடம் நடந்து கொ ண்ட தெப்படி ? அதை யெனக்குத்தெரிவித்து என் சங்கடத்தை யொழி" என்று கேட்டான் ஜரத்காருவானவள் "சகோதரனே! பெருந்தவமுள்ள அம்மஹாத்மாவினிடம் சந்ததியைக் குறித்து நான் கேட்டேன். எனக்குச் சந்ததியுண்டாகுமெனத் தெரிவித்து விட்டுப் போய் விட்டார். வேடிக்கையாகவும் என்னிடம் அவர்

வீண்வார்த்தை பேசியதில்லை ஆபத்துக்காலத்தில் பொய் பேசுவதேது? "ஏ நாகதன்னிகையே! நீ சங்கடப் படவேண்டாம். அக்கினி, சூரியன் இவர்களுக்குச் சமமான காந்தியுள்ள புத்திரன் உனக்கு உண்டாகப் போகிறான்" என்று எனக்குச் சொல்லிவிட்டு அந்தத் தபோதனராகிய எனது புருஷன் சென்றார். ஆகலால் உன் மனதிலிருக்கிற துக்கத்தை யொழி" என்றாள்.

இதைக் கேட்டதும் வாசுகி சந்தோஷமடைந்து "அவ்விதமே ஆகட்டும்" எனக்கூறி அவள் வார்த்தையே ஏற்றுக் கொண்டான். பிறகு வாசுகி தன் சகோதரியை நல்ல வார்த்தை சொல்லியும், அவள் விரும்பிய பொருள்களைக் கொடுத்தும் கௌரவப்படுத்தி ஆதரித்துவந்தான். பிறகு ஜரத்காருவின் வயிற்றிலிருந்த கர்ப்பமானது சுக்கில பக்ஷத்துச் சந்திரன் ஆகாயத்தில் விருத்தியாவதுபோல் விருத்தியடைந்து வந்தது. அதன்பின் ஜரத்காருவானவள், காலந்தவறாமல் தேவகுமாரனைப் போன்ற ஓர் புத்திரனைப் பெற்றாள்.

அந்தக் குமாரன் வாசுகியின் கிருகத்திலேயே வளர்ந்துவந்து பிறகு பிருகுவின் புத்திரராகிய ச்யவனருடைய புத்திரரிடத்தில் வேதங்களையும் வேதாந்தங்களையும் அத்தியயனஞ் செய்தார். பிரமசரிய விருதானுஷ்டங்கள் தவறாமலிருந்து வந்தார். அவர் தமது சிறு பிராயமுதற் கொண்டு புத்தியையும் பொறுமையையும் பூஷணமாகக் கொண்டிருந்தார். ஜரத்காரு முனிவர் வனத்திற்குச் செல்லும் போது கர்ப்பத்திலிருந்த இவரை (அஸ்தி-இருக்கிறார்) என்று சொன்னாரல்லவா? அதனால் தான் இவருக்கு ஆஸ்திகர் என்னும் பெயர் உலகத்தில் விளங்கி வருகிறது. இவர் மகா புத்திசாலியாக விளங்கினமையால் வாசுகி தன்னுடைய வீட்டிலேயே வைத்திருந்து வளர்த்து வந்தான். சூலபாணியும், சொர்ணதேஜஸையுடையவரும் தேவ நாயகனுமாகிய பரமசிவ மூர்த்தியைப் போல் சர்ப்பங்களுக்கு சந்தோஷமுண்டாக வளர்ந்து வந்தார்.

---

## அத்தியாயம் 30.

இவ்விதம் சூதபுராணிகர் கூறியதைக் கேட்டு மகிழ்வுற்று சௌனகர், சூதமுனிவரைப்பார்த்து "தபோதனரே? ஜனமேஜயமகாராஜன் தன் தந்தைக்கு சொர்க்கபதவி கிடைத்ததைப் பற்றித் தன் மந்திரிகளை என்ன கேட்டான். அதை விரிவாகத் தெரிவிக்க வேண்டுகிறேன்" என்றார். சூதபுராணிகர், ஜனமேஜயன் தன் மந்திரிகளைப் பார்த்து "மந்திரிகளே! நீங்கள் என் பிதாவின் வரலாற்றைப்பற்றி யறிந்திருப்பீர்கள். பிரக்யாதி பெற்ற வெனது தந்தைக்கு மரணம் நேர்ந்த விதமெப்படி? அதைத்தெரிந்துகொண்டு சரியாக விருக்கும் பக்ஷத்தில் பிரீதியாக ஏதேனும் செய்ய விரும்புகிறேன். விபரீதமான செய்கையை நான் ஒரு போதும் செய்யேன்" என, மந்திரிகள், "அரசனே! மகாத்மாவும் தருமமறிந்தவருமாகிய தங்களுடைய தந்தை தருமமே ஓருருக்கொண்டதெனப்பகரும்படி யிருந்தார். இந்த உலகத்தில் நான்குவருணத்தவரும் தத்தம் நெறியினின்று தவறாதிருக்கும்படி அரசு புரிந்து வந்தார். மகாபராக்ரமசாலியாக விருந்தார். அவருக்குப் பகைவரே யில்லாதிருந்தார்கள். அவருக்கு ஒருவரிடம் துவேஷமில்லை. எல்லாரிடத்திலும் சமபுத்தி யுடையவராக விருந்தார். பிரமதேவருக்குச் சமமாக விளங்கினார். வித்துவான்கள் அனேகரை ஆதரித்து வந்தார். புருஷனை யிழந்த பூவையர்கள், அநாதைகள், கிருபணர்கள், அங்கவீனர்கள், இவர்கள் மீதிரக்கங்கொண்டு ஆதரித்து வந்தார். மற்றொரு சந்திரனைப் போலிருந்து வந்தார். எல்லாரும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்து வந்தார்கள். அழகுள்ளவர். ஸத்தியவான். மகாபராக்ரமசாலி. கிருபாசாரியரிடம் தனுர் வித்தை பயின்றவர். கிருஷ்ண பகவானிடத்து அன்புள்ளவர். குருவம்சம் குறைந்த சமயம் உத்தரை என்பவளிடம் பிறந்தவர். அபிமன்னியுவுக்கு நிகரான பலமுடையவராக விருந்தார். அரச நீதியையுணர்ந்தவர். சகல நற்குணங்களுமமையப் பெற்றவர். ஜிதேந்திரியர். பெரியோர்களால் புகழப்படுகிறவர். குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் இவ்வாறினையும்வென்றவர். மகாபுத்திசாலி. இவ்வளவனந்த குணங்கள் நிறைந்த அவ்வரசன் அறுபது வருஷகாலம் பிரஜைகளை நீதியாக பரிபாலித்து வந்தார். பிறகு தக்ஷகன் தீண்டியதால் மரணமடைந்தார்.

பிறகு இந்தராஜ்யத்தை நீதிப்படி தாங்களடைந்து ஆயிரம் வருஷகாலமாகப் பரிபாலித்து வருகிறீர்கள். சிறுவயதிலேயே வித்தையை யடைந்து பிராணிகளைக் காப்பாற்றும் நன்னிலைமையை யடைந்தீர்கள்," என்றார்கள். அரசன் தன் மந்திரிகளைப்பார்த்து "மந்திரிகளே நல்ல நடத்தை யுடனிருந்த பிதாமகர்களின் ஒழுக்கத்தைக் கேட்ட எனக்கு இந்த வம்சத்தில் ஜனங்களுக்கு அப்பிரியமான செய்கையைச் செய்தவர்களில்லை யென்றே தெரியவருகிறது. அங்ஙனமிருக்க, இப்பொழுது நீங்கள் கூறிவந்தபடி மகா நற்குணங்கள் வாய்ந்த எனது தந்தை மரணமடைந்ததன் உண்மையைக் கூறுங்கள்," என்றார். மந்திரிகள் தங்களுடைய ராஜனாகிய ஜனமேஜயனுக்கு இகபர நன்மைகளை நாடினவர்களாகையால், பரீக்ஷித்து மகாராஜன் வேட்டைக்குச் சென்று, அங்கோர் மானைத்துரத்திக் கொண்டோடி அது அகப்படா விடத்துச் சமீகமுனிவரைக்கண்டு அம்மானைப்பற்றிக்கேட்டு, அவர் தனக்கு விடையளிக்காமல் மௌனமாக விருந்தமைக்குச் சினந்து அவர் கழுத்தில் செத்த பாம்பொன்றைப் போட்டு வீட்டுக்குத் திரும்பினதையும், சமீகமுனிவரின் குமாரர் சிருங்கி யென்பவர், அரசனது செய்கைகண்டு சினங்கொண்டு அரசனுக்குச் சாபமளித்ததையும், அவர் அப்படிச் சாபமளித்ததை அம்முனிவரின் தந்தை சமீகமுனிவர் தமது சீடனைக்கொண்டு அரசனுக்குத் தெரிவித்ததையும், பிறகு அரசன் தகுந்த விடத்தில் ஜாக்கிரதையாக விருந்ததையும், விஷவைத்தியம் செய்யவந்த கசியபரை காட்டில் தக்ஷகன் கண்டு அவருக்கு வேண்டிய பொருள் கொடுத்துத்தடுத்ததையும், பிறகு தக்ஷகன் வஞ்சனையால் அரசனைக் கடித்து எரித்ததையும், விரிவாகக்கூறி ,,அரசனே! உதங்கமுனிவருடையவார்த்தையையும் அனுசரித்து இனிச்செய்யவேண்டியதைச் செய்யுங்கள்" என்றார்கள்.

---

உதங்க முனிவரென்பவர் ஒரு சமயம் தன்னுடைய குரு பத்தினிக்கு பௌஷ்ய ராஜன் மனைவி தரித்துக் கொண்டிருந்த குண்டலங்களைக் குருதக்ஷிணையாகக்கொண்டுவந்துகொடுப்பதன் பொருட்டுப்புறப்பட்டுச்சென்று அந்தக் குண்டலங்களை வாங்கிக் கொண்டு வருகையில் வழியில் தக்ஷகன் அதை அபகரித்துக் கொண்டு போய் விட்டான். பிறகு உதங்க முனிவர் நாகலோகம் சென்று அந்தக்குண்டலங்களைப் பெற்றுக் கொண்டு வந்து தமது குருபத்தினிக்குக் கொடுத்து அவர்கள் ஆசீர்வாதமடைந்து, தக்ஷகன் மேல் தாம் கொண்ட கோபத்தின் நிமித்தம் ஜனமேஜய ராஜனிடம் சென்று அவனிடம் "உன் பிதாவைக் கொன்ற தக்ஷகனுக்குத் தீங்கு தேடு," என்று சொல்லி, தருமத்திற்கு விரோத மில்லாமல் உபதேசம் செய்தவர்,

இவ்வாறு மந்திரிகள் கூறியதும் ஜனமேஜயன், "மந்திரிமார்களே! தக்ஷகனால் கடிபட்டமரத்தை மீண்டு காசியபர் உண்டு பண்ணியது மிகவும் ஆச்சரியந்தான். பாபபுத்தியுள்ள தக்ஷகன், நான் பரீக்ஷித்தைக் கடித்தால் இந்த அந்தணன் அவனைப்பிழைப்பித்து விடுவான். நான் கடித்தபின்பும் அரசன் உயிரோடிருந்தால், உலகம் பரிகசிக்கும் என ஆலோசனை செய்து அந்தக் காசியபமுனிவருக்குப் பொருள் கொடுத்துச் சந்தோஷப்படுத்தினன் போலும். மந்திரிகளே! ஜனசஞ்சாரமில்லாத காட்டில் காசியபருக்கும் தக்ஷகனுக்கும் நடந்த சம்வாதத்தை பார்த்தவர்கள் யாவர்? எவர்கள் கேட்டவர்கள்? உங்கள் செவிக்கு அது எப்படி எட்டியது? இதை நான் கேட்க விரும்புகிறேன். இதைத் தெரிந்துகொண்டு பிறகு சர்ப்பங்களுக்குநாசமுண்டாக்கயோசனை செய்கிறேன், என்றான். மந்திரிகள், "அரசனே! அந்த மரத்தில் சாய்ந்துபோன கிளைகள் அநேக மிருந்தன. ஆகையால் அதிலேறி ஒருவன் விறகு வெட்டிக்கொண்டிருந்தான். கசியபர் தக்ஷகன் இருவரும் அம்மரத்தில் ஆளிருப்பதைக் கவனிக்கவில்லை. ஆகையால், அவனும் அந்த மரம் விஷாக்கினியால் பற்றி யெரியும் போது எரிந்து விட்டான். பிறகு அந்த மரம் கசியபரால் உயிர் பெற்றபோது அவனும் உருவமடைந்து உயிருடனெழுந்தான். அவன் இங்கு வந்து அவ்விருவருடைய சம்வாதத்தைக் கூறினன். நாங்கள் அவனிடம் கேட்டபடி உங்களுக்குத் தெரிவித்தோம். இனி தங்களுடைய விருப்பம் போல் செய்யுங்கள்" என்றார்கள். இதைக் கேட்டதும் அரசன் கையைப்பிசைந்து கொண்டு பெருமூச்செறிந்து தாமரைப்பூப்போன்ற கண்களினின்று நீர் பெருகப் பூமியில் விழுந்தான். பிறகு எழுந்து துக்கத்துடன் ஆசமனம் செய்து ஓர் க்ஷணகாலம் ஆலோசித்து ஒருவிதமாக நிச்சயஞ் செய்துகொண்டு மந்திரிகளனைவரையும் நோக்கி, "எனது தந்தை பரலோகஞ் சென்றதைக் கேட்ட எனக்குண்டான தீர்மானத்தைக் கேளுங்கள். துராத்மாவாகிய தக்ஷகனுக்கு பதில் தீங்கு செய்ய நினைக்கிறேன். சிருங்கி முனிவருடைய சாபத்தை ஒரு காரணமாகக்கொண்டு என் பிதாவை யெரித்துக்கொன்றனே. அவனுடைய கெட்ட எண்ணத்தைப் பார்த்தீர்களா? அந்தக் கசியபமுனிவர் இங்கு வந்திருந்தால் எனது தந்தை கட்டாயம் பிழைத்திருப்பார். கசியபருடைய அனுக்கிரகத்தால் என் பிதா

பிழைத்திருந்தால் தக்ஷகனுக்கு நேரிடும் குறையாது? அறியாமையால் தந்தையைப் பிழைப்பிக்கவந்த முனிவரைத் திருப்பி அனுப்பிவிட்டான். தக்ஷகன் செய்தது பெரும் பிழை; ஆகையால் இந்த உதங்கமுனிவருக்கும், எனக்கும், உங்களெல்லோருக்கும் மிகுந்த பிரியமான காரியத்தைச் செய்து பிதாவுக்குச் செய்ய வேண்டிய கடனைச் செய்கிறேன்,'' என்றார்.

---

## அத்தியாயம் 31.

---

ஸ்ரீமானாகிய அரசன் இவ்வாறு கூறியதும் அமைச்சர்கள் அதனை அங்கீகரித்துக் கொண்டார்கள். பிறகு ஜனமேஜயன் புரோகிதர்களையும், ரித்விக்குகளையும் அழைத்து, "என் பிதாவை வதம் செய்த துராத்மாவாகிய தக்ஷகனுக்கு நான் எவ்விதமான தண்டனை செய்யலாமென்பதை நீங்கள் கூறுங்கள். தக்ஷகன் அவனுடைய பந்துக்களாகிய சர்ப்பங்களுடன் ஜ்வலிக்கும் அக்கினியில் என் தந்தையை யெரித்தது போல் எரியவேண்டும்,'' என்று சொன்னார். ரித்விக்குகள், ''அரசனே! சர்ப்பசத்ர மென்னும் ஓர் யாகமிருக்கிறது. அது உமக்காகவே ஏற்பட்டதெனப் புராணம் கூறுகிறது. நராதிபனே! அந்த யாகம் உன்னையன்றி மற்றெவராலும் செய்யமுடியாதது. அந்த யாகத்தை அனுஷ்டானம் செய்ய எங்களுக்கு அதிகாரமில்லை. இவ்விதம் புராணம் அறிந்தவர்கள் கூறுகிறார்கள்,'' என்றார்கள். இதைக் கேட்டதும் அரசன், தக்ஷகன் ஜ்வலிக்கும் அக்கினியில் விழுந்து எரிக்கப்பட்டுப் போனதாகவே நினைத்தார். பிறகு அரசன் மந்திர மறிந்த அந்தணர்களை நோக்கி, "பிராம்மணர்களே! நான் யாகம் செய்யப்போகிறேன். சேர்க்கவேண்டிய சாமக்கிரிகளைச் சேர்க்கவேண்டும்,''என்று சொல்ல, பிராம்மணர்கள், "யாகசாலை கட்டுவதற்காக அதற்கு வேண்டிய இடத்தைச் சாஸ்திரப் பிரகாரம் அளக்கச் செய்தனர். பிறகு யாகவிதியை அறிந்த முனிவர்கள் எல்லாம் நிறைந்ததும், பிராம்மணக் கூட்டங்களுடன் கூடியதும் தனதானியங்கள் நிறைந்ததும், மனதிற்குப் பிடித்ததுமான யாகசாலைக்கு அரசனை அழைத்துச் சென்று தீக்ஷை செய்வித்தார்கள். நடக்கப்போகிற யாகத்தில் உண்டாகும் இடையூறைக் குறிப்பிடும் அபசகுனங்கள் அப்பொழுதே யுண்டாயின யாகசாலையை அமைக்கும்போதே வாஸ்த சாஸ்திரம் தெரிந்தவனும், அத

ற்க வேண்டிய சூஸ்திரங்களை அப்பியாசம் செய்தவனும், பிராசீன நடவடிக்கைகளைத் தெரிந்து கொண்டவனும், புத்திசாலியுமான ஓர் சிற்பி. "இந்த யாகசாலையை அமைக்க யத்தனம் செய்த காலமும், தேசமும் உசிதமாக இருக்கவில்லை. இந்த யாகம் ஓர் பிராமணன் மூலமாக விக்னமடையப் போகிறது" என்று தெரிவித்தான்.

இதைக் கேட்ட ஜனமேஜயன் தீக்ஷையை அடைவதற்கு முன் வாசற்காப்பவனை நோக்கி "எனக்குத் தெரியப்படுத்தாமல் ஒருவரையும் உள்ளே பிரவேசிக்க விடவேண்டாம்" என்று கட்டளையிட்டான்.

பிறகு சர்ப்பயாகம் ஆரம்பமாயிற்று. யாகம் செய்யும் ரித்விக்குகள் தத்தமக்குரிய கிரியைகளைச் செய்யத் தொடங்கினர். கறுப்பு வஸ்திரங்களைப் போர்த்துக்கொண்டு புகையினால் சிவந்த கண்களுடன், ஜ்வலிக்கும் அக்கினியில் மந்திர பூர்வமாக ஹோமம் செய்தனர். அப்போது சர்ப்பங்கள் எல்லாவற்றையும் அவற்றின் பனநங்குப்படி அக்கினியின் முன்னிலையில் அழைத்தனர். பிறகு ஜ்வலிக்கும் அந்த அக்கினியில் சர்ப்பங்கள் வந்துவிழுந்தன. துடித்துக்கொண்டும் ஒன்றையொன்று சுற்றிக்கொண்டும், படமெடுத்துச் சீறிக்கொண்டும், அக்கினியில் விழுந்தன. வெளுப்பு நிறமும், கறுப்பு நிறமும் நீல நிறமுமான சர்ப்பங்கள் வந்து விழுந்தன. கிழங்களும் குட்டிகளுமாகவந்து விழுந்தன. ஒருகுரோசநீளமும் ஒருயோசனை அகலமுமான நாகங்கள் இடைவிடாமல் விரைவாக வந்து அக்கினியில் வந்து விழுந்தன. இவ்வாறு லக்ஷக்கணக்காகவும், கோடிக்கணக்காகவும் அந்த யாகத்தில் நாகங்கள் அழிந்தன. குதிரைகள் போல் சிலவும், யானைத்துதிக்கைகள் போல் சிலவும், மதயானை போன்ற பெரிய உடலுள்ளவை சிலவுமாக அக்கினியில் விழுந்தன.

---

## அத்தியாயம் 32.

---

பாண்டவர்கள் வம்சத்தில் ஜனித்த புத்திசாலியாகிய ஜனமேஜய மஹாராஜன் செய்த மிகவும் குரூரமான சர்ப்பயாகத்தில் எவர்கள் ரித்துவிக்குகள், எவர்கள் சபையோர்கள், எவர்கள்

சர்ப்பயாகத்தின் விதானம் தெரிந்துகொண்டவர்கள் இவைகளை விஸ்தாரமாகக் கூறவேண்டுமென்று சௌனகர் கேட்டார்.

அந்த சர்ப்பயாகத்தில் சியவனர் வம்சத்தில் உண்டானவரும், வேதமறிந்துகொண்டவர்களுக்குள் சிரேஷ்டருமான சண்டபார்க்கவர் ஹோதாவாக இருந்தார். குத்ஸவம்சத்தில் ஜனித்த ஜைமினி முனிவர் உத்காதாவாக விருந்தார். சாரங்கரவரென்ற பிராம்மணர் பிர்ம்மாவாக விருந்தார். பிங்களர் அத்வர்யுவாக விருந்தார். பிள்ளைகளுடனும் சிஷர்களுடனும் கூடின வியாச முனிவர், உத்தாலகர், கமடகர், சுவேதகேது, பிங்களர், அஸிதர், தேவலர், நாரதர், பர்வதர், ஆத்திரேயர், கண்வர், ஜடரர், கரிகடர், வாத்ஸிய வம்சத்தில் ஜனித்த சுருதசிரவஸ்து, கோஹலர், தேவசர்மா, மௌத்கல்லியர் இன்னும் மற்றுமுனிவர்கள் சபையோர்களாக இருந்தார்கள். அந்த சர்ப்ப யாகத்தில் ரித்துவிக்குகள் ஹோமம் செய்யும்போது, பிராணிகளுக்கு அச்சத்தைக் கொடுக்கும் நாகங்கள் அக்னியில் விழுந்தன. நாகங்களினுடைய ஊனீர் கொழுப்புகளுடன் சிறு வாய்க்கால்களாக ஓடின. எப்போதும் பொசுங்கிக் கொண்டிருக்கும் சர்ப்பங்களின் துர்நாற்றம் வீசிற்று. அக்னியில் விழும்போதும், ஆகாயத்தில் இருக்கும்போதும் சர்ப்பங்களிடம் கூச்சல் எங்கும் கேட்டது. தக்ஷகன் என்ற சர்ப்பசிரேஷ்டன் இந்த சர்ப்பயாகத்திற்குப் பயந்து இந்திரன் கிருகம் சென்றிருந்தான். அவன் ஜனமேஜயன் சர்ப்பயாகம் செய்யத்தீக்ஷையை அடைந்திருப்பதை இந்திரனிடம் தெரிவித்து பயத்துடன் சரணமடைந்தான். அப்போது இந்திரன் சந்தோஷமடைந்து "ஏ தக்ஷகா! இங்கு உனக்குப்பயமில்லை சர்ப்பயாகம் நடப்பதாலும் நீ யஞ்சவேண்டாம். உனக்காக நான் முந்தி பிரம்மதேவரைப் பிரார்த்தித்திருக்கிறேன். ஆகையால் நீ அஞ்சவேண்டாம்; மனதிலிருக்கும் சஞ்சலத்தை விட்டுவிடு" என்றான். இவ்விதம் சமாதானம் செய்தவுடன் தக்ஷகன் மகிழ்வுற்று இந்திரனுடைய கிருகத்தில் சுகமாக வாசம் செய்தான்.

இங்ஙனம் யாகத்தில் எப்போதும் சர்ப்பங்கள் விழுந்து கொண்டிருக்கும் போது வாசுகியின் பரிவாரம் குறைந்தது. அதனால் வாசுகி அதிகமான துக்கத்தையும், வருத்தத்தையும் அடைந்தான். பிறகு வாசுகி தன் சகோதரியைப்பார்த்து, "மங்கள சொரூபமுடைய நாக கன்னிகையாகிய ஜரத்காருவே! என்

னுடைய அங்கம் யாவும் தகிக்கப்படுகின்றன. மனம் கலங்கு கிறது. மனம் சுழலுகிறது. திசைகள் தோன்றவில்லை. கண்கள் சுற்றுகின்றன. இருதயம் பேதிக்கும் போல் இருக்கிறது. நான் சுவாதீனத்தை யிழந்திருக்கிறேன். ஜ்வலிக்கும் யாகநெருப்பில் விழப்போகிறேன்.

பரீக்ஷித்துராஜன் குமாரனாகிய ஜனமேஜயன் செய்யும் யாகம் இடையூறின்றி நடக்கிறது. அந்த யாகம் நம்மைக் கொல் வதற்காக ஏற்பட்டது. நிச்சயமாக நானும் யமலோகம் செல்ல வேண்டியதுதான். சகோதரியே! உன்னை எதற்காக ஜரத்காரு முனிவருக்குக் கொடுத்தேனோ அந்தக் காலம் வந்துவிட்டது. உறவினர்களுடன் எங்களைக் காக்கவேண்டும். அந்த யாகத்தைத் தடுப்பவன் ஆஸ்தீகனென்று பிரம்மதேவர் எனனிடம் சொன்னார்.

ஆகையால், உன் குமாரன் குழந்தையாயினும் பெரியோர் களுக்குச் சமமாயும் வேதமறிந்த ஞானிகளுக்குள் சிறந்தவனாக வும் இருப்பதால், ஐயமின்றி நாங்களெல்லோரும் உயிர் பிழைப்பதினிமித்தம் உன் பிள்ளையிடம் சொல்'' என்று கூறி னான்.

பிறகு நாககன்னிகையாகிய ஜரத்காரு தன் குமாரனை அழை த்து, "ஏபுத்திரா! என் பிராதாவால் நான் உன் தந்தைக்கு ஓர் கார ணத்தை முன்னிட்டுக் கொடுக்கப்பட்டேன். அந்தககாரணம் நிறைவேற்றப்படவேண்டிய காலம் வந்திருக்கிறது. அந்த விஷ யத்தை மெய்ப்பிக்கவேண்டும்'' என, ஆஸ்தீகர் "அம்மா! அக்காரணம் யாது? அதன் உண்மையைக்கேட்டு அப்படியே செய் கிறேன்; சொல்,'' என்றார்.

நாகராஜன்சஹோதரியாகிய ஜரத்காரு, சிறிதும் அச்சமின்றி தன் உறவினர்களின் நன்மையைக்கருதி ஆஸ்தீகரைப்பார்த்து, "ஏ புத்திரா! "கத்ரு தன் குமாரர்களைச்சபித்த வரலாற்றைக்கேள். உச் சைசிரவஸ் என்னும் குதிரையின நிறத்தை கறுப்பாகச் செய்து வினதையை அடிமையாகக் கொள்ள இச்சிக்காதபிள்ளைகளை கத்ரு நோக்கி "குமாரர்களே! நீங்கள் ஜனமேஜயன் சர்ப்பயாகத்தில் அக்னியில் விழுந்துபொசுங்கி யமலோகம் செல்வீர்கள்''என்றுசபி த்தாள். அதைக்கேட்டுக்கொண்டிருந்த பிரம்மதேவர் "அப்படியே யாகுக'' எனக்கூறிச் சந்தோஷித்தார். வாசுகி பிரம்மதேவர் சந் தோஷித்தாரென்பதைக்கேட்டு அமிருத மதனமானவுடன்,

தேவர்களைச் சரணமடைந்தான். தேவர்கள் அம்ருதமதனத்தில் வாசுகியின் உதவிபெற்றிருப்பதால் என் பிராதாவாகிய அவரை இந்த சாபம் சர்ப்பங்களைபாதிக்காமலிருக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ள பிரமதேவரிடம் அழைத்துச் சென்றார்கள். "பிரமதேவரே! இந்த நாகராஜனாகிய வாசுகி தன்னையும் தன் பந்துக்களையும் உத்தேசித்து துக்கத்துடனிருக்கிறான். இவர்களுக்குக் கத்ருவின் சாபம் பலிக்காமலிருக்கும்படி அனுக்கிரகம் செய்யவேண்டும்" என்றார்கள். பிரம்ம தேவர், "தேவர்களே! ஜரத்காரு என்ற முனிவர் ஜரத்காரு என்னும் பெயர் கொண்ட ஒர் பெண்ணை மனைவியாக அடைவார். அவ்விருவருக்கும் உண்டாகப் போகிற புத்திரன் இவர்களைச் சாபத்திலிருந்து விடுவிக்கப் போகிறான்" என்று பதில் கூறினர். பன்னகராஜனாகிய வாசுகி இந்தவார்த்தையைக் கேட்டு மஹாத்துமாவாகிய உன் தந்தைக்கு என்னை விவாகஞ்செய்து கொடுத்தார். இந்தவிஷயம் முந்தியே ஏற்பட்டது. பிறகு நீ என்னிடம் பிறந்தாய். அந்தச்சமயம் இப்போது வந்திருக்கிறது ஏ புத்திர! புத்திசாலியாகிய உன் தந்தைக்கு என்னைக் கொடுத்தது வீணாகாமலிருப்பதற்கு, ஜ்வலிக்கும் யாகாக்னியில் விழாமல் எங்களையும், என்பிராதாவாகிய வாசுகியையும் காக்கவேண்டிய; கண்மணி! நீ எவ்விதம் நினைக்கின்றாய்" என்றாள்.

இவ்விதம் சொன்னவுடன் அந்த ஆஸ்தீகமுனிவர், துக்கத்தால் மிகவும் தாபமடைந்தவாசுகியைப் பிழைப்பிக்க எண்ணங்கொண்டு, மாமாவாகிய வாசுகியைப்பார்த்துக்கூறுகிறார். "பன்னகங்களுக்குள் சிறந்தவனாகிய வாசுகியே! மஹாபலம் பொருந்திய நாகராஜனே!! அந்தச்சாபத்திலிருந்துநான் உன்னை விடுவிக்கிறேன். இது உண்மை; நீ மனதிற்கவலை கொள்ளாதே. உனக்குப்பயமில்லை. உனக்கு மிகுந்த கீர்த்தி உண்டாகும்படி நான் முயற்சிக்கிறேன். வேடிக்கையாகப் பேசுவதிலும் நான் பொய் சொல்லுவதில்லை. இந்த விஷயத்தில் கேட்க வேண்டுமா? ஏ மாமா! தீக்ஷையுடனிருக்கும் ஜனமேஜயனிடம் நான் சென்று மங்கள வசனங்களால் அவ்வரசனை ஸ்தோத்திரம் செய்து, யாகம் நடைபெறாமல் செய்கிறேன். என்னிடம் தாங்கள் சந்தேகிக்க வேண்டாம். இவைகளைச் செய்ய என்னால் முடியுமென்றெண்ணும்" என்று கூற, வாசுகி "ஏ ஆஸ்தீக! சாபத்தை அடைந்த நான் சுழலுகிறேன். என் மனது

வெடிக்கிறது. திசைகள் ஒன்றுந்தெரியவில்லை. என்னசெய்வேன்,'' என்றான். ஆஸ்திகர், "ஏ பன்னகோத்தமனே! நீ கொஞ்சமேனும் தாபமடைய வேண்டாம். ஜ்வலிக்கும் அக்னியாலுண்டான பயத்தை நான் ஒழிக்கிறேன்'' என்றார்.

இவ்விதம் வாசுகியின் மனச்சஞ்சலத்தை நிவர்த்தி செய்து, சர்ப்பங்களுக்கு விடுவிப்பதின்பொருட்டு, குணங்கள் நிறைந்த பிராம்மண சிரேஷ்டராகிய ஆஸ்தீகமுனிவர் ஜனமேஜயன் யாகசாலைக்கருகே வந்து, சூரியன் அக்னி இவர்களுக்குச்சமமான சபையோர்கள் நிறைந்த யாகசாலையைப் பார்த்து, அங்கு பிரவேசித்தார். அப்போது வாசற்காப்பவர்கள் தடைசெய்தார்கள். அதனால் அந்த யாகசாலையில் பிரவேசிப்பதற்குக் கூடாமைகண்டு மகா கீர்த்தி வாய்ந்த அரசனையும் ரித்துவிக்குகளையும், சபையோர்களையும் அக்னியையும் பின்வருமாறு ஸ்தோத்திரம் செய்தார்.

---

## அத்தியாயம். 33.

---

"பரத வம்சத்தில் பிறந்தவர்களுக்குள் சிரேஷ்டனும், பரீக்ஷித்து மஹாராஜன் குமாரனுமாகிய ஜனமேஜய! ஸோமன், வருணன், பிரஜாபதி இவர்களின் யாகத்தில் நடக்கும் பிரயோகம் போல் உம்முடைய யாகத்திலும் நடக்கிறது. எங்களுக்குப் பிரியமுள்ளவர்களாகிய உங்களுக்கும், எங்களுக்கும் க்ஷேமம் உண்டாக வேண்டும்.

இந்திரன் நூறுயாகம் செய்தவன். மற்றவர்கள் அந்த மாதிரி நூறு யாகம் செய்தால் இந்திரன் யாகத்திற்குச் சமமாகும். ஏ ஜனமேஜய! நீர் செய்யும் இந்த யாகம் இந்திரனுடைய நூறு யாகத்திற்குச்சமமாகவே இருக்கிறது. ஏ ஜனமேஜய! உனக்கும், எங்களுக்கும் க்ஷேமம் ஏற்படவேண்டும். யமன், ஹரிமேதச்சு, ரந்திதேவன் இவர்கள் செய்த யாகம் போல் உம்முடைய யாகம் நடக்கிறது. உமக்கும், எங்களுக்கும் க்ஷேமம் உண்டாகவேண்டும். ஏ பரீக்ஷித்தின் புத்திர! கயன், சசிபிந்து, குபேரன், இவர்கள் அனுஷ்டித்ததுபோல், நடத்துகிறீர். உமக்கும் எங்களுக்கும்க்ஷேமமுண்டாக வேண்டும். நிருகன், அஜமீடன் தசரத குமாரனாகிய இராமன் இவர்களுடைய யாகம்போல் நடக்கிறது. உமக்கும், எங்

களுக்கும் க்ஷேமமுண்டாக வேண்டும். தருமபுத்திரர், நளன், கிருஷ்ணன், வியாசர் இவர்களுடைய யாகம்போல் ஜனமேஜய! உன்யாகம் நடக்கிறது. ப்ரியமுள்ள உங்களுக்கும், எங்களுக்கும் மங்களமுண்டாக வேண்டும். சூரியன் அக்னி இவர்களுக்குச் சமமான தேஜஸுடைய இந்த ரித்துவிக்குகள் இந்திரன் யாகத்தில் சிரத்தையுடனிருந்து போலிருந்து காரியங்களை நடத்துகிறார்கள். இவர்களுக்கேற்பட்ட ஞானத்தைக்காட்டிலும் அதிகமான ஞானமுள்ளோர் யாருமில்லை. இவர்களிடம்தானம் செய்வது கொஞ்சமும் வீணாகாது. வியாசமுனிவருக்குச் சமானராகிய முனிவர் உலகத்தில் யாருமில்லை; அந்தவியாசருடைய சீடர்கள் பூமியில்சஞ்சாரம் செய்து, தங்களுக்குரிய காரியங்களையும் அனுஷ்டானம்செய்துகொண்டு ரித்துவிக்குகளாக இருக்கிறார்கள் மஹாத்துமாவான வரும், சுவர்ணமயமான வீரியமுள்ளவரும், பிரபஞ்சமெங்கும் வியாபித்தவரும், பிரதக்ஷிணமாகச் சுற்றும் ஜ்வாலைகளையுடையவரும், மிகவும் ஜ்வலிப்பவருமான அக்னிபகவான் நீர் ஹோமம் செய்யும் ஹவிஸ்ஸைப் புசிக்கிறார். ஏ இராஜனே! இவ்வுலகத்தில் பிரஜைகளைப் பரிபாலிக்கும் அரசன் உன்னைத் தவிர வேறு யாரும் இல்லை. உன்னுடைய தைரியத்தால் நான் அன்புடைய மனமுடையவனானேன். நீ வருணன், தருமராஜனாகிய எமன், வச்சிராயுத்தத்தை கையில் கொண்ட இந்திரன் இவர்கள் போல் இவ்வுலகத்தைப் பரிபாலிக்கிறாய்.

ஆகையால் ஏ புருஷசிரேஷ்டனே! இவ்வுலகத்தில் உனக்குச் சமானமாகிய புருஷன் வேறு யாரும் இல்லை. நீர் விருதத்தை அனுஷ்டானம் செய்யும் விஷயத்தில் கட்வாங்கன், நாபாகன் திலீபன், யயாதி, மாந்தாதா, சூரியன், பீஷ்மாசாரியர் இவர்களுக்குச் சமானமான மகிமையையும் தேஜஸையும் அடைந்திருக்கிறீர். தைரியத்தில் வான்மீகமுனிவரைப்போலும், கோபத்தில் வசிஷ்டமுனிவரைப்போலும், பிரபுத்தன்மையில் இந்திரனைப்போலும், காந்தியில் நாராயணமூர்த்தியைப்போலும் விளங்குகிறீர். எமதர்மராஜன் எப்படித் தருமநிச்சயம் தெரிந்தவனோ, கிருஷ்ணன் எவ்விதம் குணங்கள் நிறைந்தவனோ, அப்படியே தருமங்களறிந்தவராகவும், குணங்களுடையவராகவுமிருக்கிறீர். சம்பத்துகளுக்கும், மற்ற பொருள்களுக்கும் இருப்பிடமாக இருப்பதுபோல் யாகங்களுக்கும் இருப்பிடமாயிருக்கிறீர்.

பலத்தில் தமபோத்பவனைப்போலும், அஸ்திரவித்தை, சஸ்திரவித்தைகளில் ஸ்ரீராமனைப்போலும், தேஜஸில்படாவாக்கினி, சந்திரன் இவர்களைப்போலும், சுலபமாகத் தரிசனம் செய்யக் கூடாத விஷயத்தில் பகீரதனைப்போலும் இருக்கிறீர்.

இவ்விதம் ஆஸ்தீக முனிவர் ஸ்தோத்திரம் செய்தவுடன், அரசன், சபையோர்கள், ரித்விக்குகள், அக்கினிபகவான், மற்ற எல்லோரும் எதிர்நோக்கினார்கள்.

பிறகு ஜனமேஜயமகாராஜன் சபையிலிருப்பவர்களின் அபிப்பிராயங்களை முகக்குறியால் பறிந்துசொல்லுகிறார்.

"பிராமணர்களே! இவர்பாலராயினும் ஞானத்தில் உயர்ந்தவர்போல் நன்றாகப்பேசுகிறார். இவர் பாலரல்ல. ஞானத்தால் உயர்ந்தவரென்பதே என் தீர்மானம். ஆகையால் நான் இவருக்கு வரமளிக்க விரும்புகிறேன். நீங்கள் இது விஷயத்தில் சம்மதிக்க வேண்டும்" என்றார் உடனே சபையிலிருந்த யாவரும் அரசனைப் பார்த்து "ஏ இராஜனே! இந்த அந்தணன் பாலனானாலும் பூஜிக்கத் தகுந்தவன். இச்சபையில் வித்துவானாகிய அந்தணனுக்கும் அவித்துவானாகிய அந்தணனுக்கும் அவரவர்கள் அறிவை யனுசரித்துப் பூஜை ஏற்படுகிறது. இந்த பிராமண சிரேஷ்டனை நமது காரியமனுகூலமாகும்பொருட்டு பூஜையை விரைவாகச் செய்ய வேண்டும். தக்ஷகன் என்ற சர்ப்பராஜன் வருவதற்குத் தடையின்றி தாம் விரும்பியதை உம்மிடம யடைய இம்முனிவர் தகுதியானவர்' என்றார்கள்

ஜனமேஜயமகாராஜன் ஆஸ்தீக முனிவருக்கு வரம் கொடுக்க எத்தனப்பட்டும் சமயத்தில் ஹோதாவானவர் சிறிதும் சந்தோஷமின்றி "இந்தயாகத்தில் தக்ஷகன் வரமாட்டான்" என்றார். அரசன் "அந்தணர்களே! இந்த சர்ப்பயாகம் முடிவு பெறுவதற்கும், தக்ஷகன் சீக்கிரமாக வருவதற்கும் ஏற்றமுயற்சியை நீங்களெல்லோரும் மிகுந்த சக்தியுடன் செய்யவேண்டும். தக்ஷகன் தான் எனக்குச் சத்துரு" என்று கேட்டுக்கொண்டார். ரித்துவிக்குகள், "அரசனே! உங்கள் தகப்பனைக்கொன்ற தக்ஷகன் பயமடைந்து இந்திரன் கிருகத்தில் வசிக்கிறான" என்று சாஸ்திர மறிந்த தேவதைகளும் அக்னிபகவானும் தெரிவிக்கின்றனர். முன் மஹாத்துமாவான சூதன் எவ்விதம் கூறினானோ அவ்விதமே முடியும்போலிருக்கிறது. இப்போது ஏ ராஜனே! இந்திரன்

"உன்னை அக்னிபகவான் பொசுக்கமாட்டான். நீ என்னருகே இரு" என்று தக்ஷகனுக்குத் தைரியங் கூறி காப்பாற்றிக் கொண்டிருக்கிறான்" என்றார்கள்.

இச்சங்கதியைக்கேட்டதும் தீக்ஷையை அடைந்த ஜனமேஜயன் மிகுந்தவருத்தமடைந்து, கருமங்கள் நடக்கும்போதே இந்திரனுடன் தக்ஷகன் அக்கினியில் விழும்படியாகவும், தக்ஷகனை விட்டுவிடாமலிருக்கும்படியாகவும் ஹோதாவை அடிக்கடி பிரார்த்தனை செய்துகொண்டார்.

உடனே ஹோதா இந்திரனுடன் தக்ஷகன்தானே இங்குவரும்படியான மந்திரங்களை ஜபித்து "தக்ஷகனுடன் இந்திரன் இங்குவந்து அக்னியில் விழட்டும்" என்று (ஜம்பஸ்வியஹந்தா ஜம்பன் என்ற அசுரனைக் கொன்றவன்) என்ற மந்திரங்களைச் சொல்லி அக்னியில் ஹோமம் செய்தார்கள் அப்பொழுது தக்ஷகனுக்கு அபயம் கொடுத்த தேவேந்திரன், விமானமேறி தேவர்கள் ஸ்துதி செய்ய மேகங்கள் சூழ்ந்துவர, வித்தியாதரர்கள் அப்சரஸ்திரீகள் இவர்களுடன் தக்ஷகனுக்கும் தனக்கும் நாசம் ஏற்படுமென்று நினைத்துக்கொண்டே வந்து சேர்ந்தான். அப்பொழுது இந்திரன் தன் உத்தரீயத்தில் தக்ஷகனை மறைத்து வைத்திருந்தான். அப்படியும் தக்ஷகனுக்குப் பயமொழிந்தபாடில்லை. பிறகு அரசன் கோபங்கொண்டு தக்ஷகனைக் கொல்ல விரும்பி மந்திரமறிந்த மஹானுபாவர்களை நோக்கிச் சொல்லுகிறார்.

"ஏ பிராம்மணர்களே! அந்த தக்ஷகன் இந்திரன் கிருகத்தில் இருந்து, இந்திரன் தக்ஷகனை விடாமலிருந்தால், இந்திரன தக்ஷகன் இருவரையும் அக்னியில் தள்ளுங்கள்" என்று கேட்டுக் கொண்டார். ஜனமேஜயன் இவ்விதம் சொல்லக் கேட்ட ஹோதா அங்கிருக்கும் தக்ஷகனை மந்திர ஜபம்செய்து வரவழைத்தார்.

ஹோதா இவ்விதம் ஹோமம் செய்யும்போது, இந்திரனுடன் தக்ஷகன் ஆகாயமார்க்கமாக வந்தான். இந்திரன் இந்த யாகத்தைப் பார்த்து துக்கமடைந்து, அதிக பயத்துடன் நடுங்கி அங்கு தானே தக்ஷகனை விட்டுத்தன்னுலகம் சென்றான். இந்திரன் சென்றவுடன் தக்ஷகன் பயத்தால் பிரமமடைந்து ரத்துவிக்குகள் ஹோமம்செய்யும்மந்திர பிரபாவத்தால் மெய்மறந்து அக்னிஜ்வா

லைக்குச் சமீபம் வந்தான். உடனே சபையில் ரித்துவிக்குகள் ஓர் வார்த்தை சொல்லுகிறார்கள்.

"ஏ இராஜனே! இதோ தக்ஷகன் உம்முடைய சுவாதீன மடைந்து வருகிறான். இந்த நாகராஜன் பலத்த சப்தம் செய்வது காதிற்படுகிறது. இந்த சர்ப்பராஜன் இந்திரனால் விடப்பட்டு அவயவங்கள் நடுங்க மந்திர பலத்தால் சுழன்றுகொண்டு பெருமூச்சுடன் வருகிறான். பிரபுவாகிய இராஜ சிரேஷ்டரே! நீர் செய்யும் இச்சர்ப்பயாகம் விதிதவறாமல் நடக்கிறது.

பிராம்மண சிரேஷ்டராகிய இந்த ஆஸ்திகமுனிவருக்கு வரம் கொடுக்கவேண்டும்," என்றார்கள். அரசன் ஆஸ்திகரைப்பார்த்து, "அப்பிரமேயராகிய முனிவரே! நீர் பாலராயினும் உம்முடைய குணத்திற்குத் தக்க கௌரவம் கொடுக்கிறேன். உம்முடைய மனதில் விரும்பியதை நீர் கேளும். கொடுக்கக்கூடாததாயினும் நான் கொடுக்கிறேன்" என்றார். நாகசிரேஷ்டனாகிய தக்ஷகன் அக்னியில் விழப்போகிற சமயத்தில், இதுதான தருணமென்று ஆஸ்திக முனிவர் "ஏ ஜனமேஜய! நீர் எனக்குவரம கொடுப்பதானால், இந்த யாகம இத்துடன் முடிவாகவேண்டும்; இங்கு சர்ப்பங்கள் இனி விழக்கூடாது," என்று வரம் கேட்டார்

ஏ சௌனகரே! இநத வார்த்தையைக்கேட்ட பரீக்ஷித்தின் குமாரனாகிய ஜனமேஜயன் சந்தோஷமற்ற மனதுடன் ஆஸ்திகரைப்பார்த்து, "ஏ பிராம்மண! சுவர்ணம், வெள்ளி, கோக்கள். மற்ற வஸ்துக்கள் எதுவானாலும் உமக்கு வரமாகக் கொடுக்கிறேன், என் யாகம் முடிவாகாமலிருக்கட்டும்" என்று கேட்டுக்கொண்டார்.

அதுகேட்ட ஆஸ்திகர், "அரசனே! சுவர்ணம் முதலியவைகளை நான் விரும்பவில்லை. இந்த யாகம் நடக்காமலிருப்பது தான் எனக்கு வேண்டும். இதனால் என் தாய் வர்க்கத்திற்கு க்ஷேமம் உண்டாகிறது," என்றார்.

இவ்விதம் ஆஸ்திகமுனிவர் சொல்ல, ஜனமேஜயன் "பிராமண சிரேஷ்டர்களுக்குள் சிறந்த பிராமணரே! மற்றவரம் கேளும; உமக்கு மங்கள முண்டாகட்டும்." என்றார். ஆஸ்திகர் வேறு வரம் கேட்கவில்லை. ஆகலால் அந்தச் சபையிலுள்ள வேத

மறிந்த யாவரும் "ஏ ஆசனே! பிராம்மணனுக்கு வரத்தைக் கொடும்," என்று ஒருமித்து உபதேசித்தார்கள்.

---

## அத்தியாயம். 34

---

"சூத புராணிகரே! சர்ப்பயாகத்தில் விழுந்த சர்ப்பங்களின் பெயரைக் கேட்க விரும்புகிறேன்" என்று சௌனகர் கேட்க சூதர் கூறுகிறார். வேதமறிந்தவர்களுக்குள் சிறந்த சௌனக முனிவரே! இந்த யாகத்தில் அக்னியில் விழுந்த சர்ப்பங்களைக் கணக்கிடமுடியாது. ஆயிரம், லக்ஷம், அற்புதம் இந்தக்கணக்குக்குமேலிருக்கும். அவைகளில் முக்கியமான சர்ப்பங்களின் பெயரைக் கூறுகிறேன். அதிலும் வாசுகியின் வம்சத்தில் உண்டான சர்ப்பங்களை முக்கியமாகக்கேளும். நீலவர்ண முள்ளவைகளும், சிவப்பு வர்ணமுள்ளவைகளும், வெண்மை வர்ண முள்ளவைகளும், பெரிதான சரீர முள்ளவைகளும், விஷங்களால்நிறைந்தவைகளும், சுவாதீனத்தன்மை இல்லாதவைகளும், தாய் கொடுத்த சாபத்தால் துன்பமடைந்தவைகளும், கிருபண சுவபாவமுள்ளவைகளுமாயிருந்தன. அவைகளின் பெயர் வருமாறு:—மானசன், பூர்ணன், சதவாலன், ஹலீசகன், பிச்சிலன், கௌணபன், சக்ரன், கோணவேகன், புரகாபின், ஹிரண்ணியவாஹன், சரணன், கக்ஷகன், காலதந்தகன் இப்பெயர்கொண்ட சர்ப்பங்கள் வாசுகியின வம்சத்தில் உண்டானவைகள் தவிர மற்றப் பரம்பரையில் பிறந்த சர்ப்பங்கள் அநேகமுண்டு. அந்தச்சர்ப்பங்களும் பயங்கரமான உருவமுள்ளவைகளாலும் ஜ்வலிக்கும் அக்னியில் விழுந்தன.

தக்ஷகன் குலத்தில்உண்டானசர்ப்பங்களின் நாமதேயங்களை கூறுகிறேன் கேளும்:--

புச்சகன், மங்களன், பிண்டபோத்தா, பேணகன், உச்சிகன் சரபன், பங்கன், வல்லபன், விரோஹணன் சிலி, சலகான், மூகன், சுகுமாரன், பிரவேபனன், முத்கரன், சசரோமன், சுமஹாவேக வாஹனன் முதலிய இப்பெயர் கொண்டவைகளேயாம். இவைகளும் அக்னியில் பிரவேசித்தன.

பாராவதன், பாரியாத்திரன், பாண்டவன், ஹரிண்க்கிரமன் விஹகன், சரபன், மோதன், பிரமோதன், சம்ஹதாவனன், இந்தச்

சர்ப்பங்கள் ஐராவதன் குலத்தில் பிறந்தவைகள். இவைகளும் அக்னியில் விழுந்தன. பிராம்மணசிரேஷ்டரே! கௌரவ்விய குலத்திலுண்டான சர்ப்பங்களின் பெயரைக்கேளும். ஜடிலன், குண்டலன், முண்டன், வேணிஸ்கந்தன், குமாரகன, பாஹகன், சிருங்கவேஷ்டன், தபர்த்தகன், போதன், போதகன, முதலியவைகளாம்; இன்னும் சர்ப்பங்கள் அநேகமாகையால் எல்லாவற்றையும் சொல்லவில்லை. இவைகளின் சந்ததியும் அச்சந்ததியின் பரம்பரையும் கணக்கிட முடியாது.

அக்னியில் விழுந்த நாகங்களில் சிலசர்ப்பங்கள இருதலையுள்ளவை; ஐந்துதலை, ஏழுதலை, பத்துதலை, நூறுதலை, கணக்கற்றதலையுள்ளவைகளும் உண்டு. இவையாவும பிரளய காலாக்னிபோன்று கொடுமையான விஷமுள்ளவைகளும, பயங்கரமானவைகளும், பெரிய சரீர முள்ளவைகளும், அதிகமான வீரியமுள்ளவைகளும், பர்வத சிகரம்போன்ற உயரமுள்ளவைகளுமாம். ஒர் யோஜனை தூரம்அகலமும், இரண்டு யோஜனை நீளமுமுள்ளவைகளும, காமரூபங்களும் காம பலமுள்ளவைகளும், விஷ ஜ்வாலையுள்ளவைகளுமான சர்ப்பங்கள் யாவும் சாபத்தின் கொடுமையால் சர்ப்ப யாகத்தில் தகிக்கப்பட்டன.

---

## அத்தியாயம் 35.

---

ஆஸ்தீக முனிவரின் மற்றொரு ஆச்சரியத்தையும் கேளும்.

"இந்திரனை விட்டுப்பிரிந்த தக்ஷகன், ஆஸ்தீகமுனிவருக்கு ஜனமேஜயன் வரம் கொடுக்க தர்க்கிக்கும்போது ஆகாயமார்க்கத்திலேயே நின்றான்

அப்பொழுது ஜனமேஜயன் கவலையுற்று இருப்பதைப் பார்த்து, ரித்துவிக்குகள் விதிப்படி ஹோமம் செய்தார்கள். அப்படியும் தக்ஷகன் அக்னியில் விழவில்லை," என்று சூதர் சொன்னார். சௌனகர், "ஏ சூதபுராணிகரே! மஹாத்துமாக்களாகிய அந்தணர்கள் ஜபம் செய்த மந்திரங்கள் என்ன? அவ்விதம் மந்திரங்களை ஜபம் செய்தும் ஏன் தக்ஷகன அக்னியில் விழவில்லை" என, சூதர், "பன்னகசிரேஷ்டனாகிய தக்ஷகன் பிரஞ்ஞையை இழந்து இந்திரனைவிட்டு விழும்போது, ஆஸ்தீகமுனிவர் "நில், நில்"

என்று மூன்று தடவை கூறினார். இதைக்கேட்ட தக்ஷகன் மனதில் துக்கமடைந்து அந்தரத்திலேயே நின்றான்; அதனால் தான்," என்றார்.

பிறகு ஜனமேஜயன் சபையோர்களின் வசனப்படி ஆஸ்தீக முனிவர் கேட்டுக்கொண்டதுபோல் "இந்தயாகத்தை இத்துடன் முடிவு செய்யுங்கள். சர்ப்பங்கள் சங்கடமின்றி இருக்கட்டும். இந்த ஆஸ்தீகமுனிவரும் சந்தோஷத்தை அடையட்டும். ஏற்கனவே சூதன் என்ற சிற்பி கூறியதும் உண்மை யாகட்டும்," என்று கூறினார்.

இவ்விதம் ஆஸ்தீகமுனிவருக்கு அரசன் வரம் கொடுத்தவுடன் எங்கும் கலகலவென்ற சப்தம் உண்டாயிற்று, அவ்விதமே பாண்டவ வம்சத்தில் பிறந்த ஜனமேஜயன் சர்ப்பயாகமும் தடைப்பட்டது. அரசனும் திருப்தி அடைந்தான்.

அந்த ஜனமேஜயன் அங்கிருந்த ரித்துவிக்குகளுக்கும், சபையோர்களுக்கும் அவரவர்கள் இஷ்டப்படி பணத்தைக் கொடுத்தான். பிறகு சூதஜாதியில் பிறந்த லோஹிதாக்ஷன் என்ற ஸ்தபதிக்கும் ஏராளமான பொருளைக் கொடுத்து சூதனென்ற ஸ்தபதியைப்பார்த்து "நீ ஏற்கனவே பிராமணன் காரணமாக இந்த யாகம் விக்னமடையு மென்று சொன்னது உண்மையாயிற்று" என்று கொண்டாடினார். அவனுக்கும், மற்றவர்களுக்கும் நியாயப்படி போஜனம், வஸ்திரம் முதலியவைகளைக் கொடுத்து விதிப்படி அவபிருதஸ்நானம்செய்வித்தான். பிறகு அரசன் சந்தோஷமுள்ள மனதுடன் ஆஸ்தீகமுனிவரை நோக்கி "தாங்கள் மறுபடியும் வரவேண்டும். நான் அசுவமேதயாகம் செய்யப்போகிறேன். அதில் தாங்கள் சபையோராக இருக்கவேண்டும்" என்று கூறிவணக்கத்துடன் சம்மானம் செய்து அனுப்பினார். ஆஸ்தீக முனிவரும் சந்தோஷமடைந்து அவ்விதமே ஆகட்டு மென்று அரசனிடம் தெரிவித்து, தமதுகாரியத்தையும்பூர்த்தி செய்துகொண்டு, அரசனையும் சந்தோஷப்படுத்தி, விட்டுப் பரமப்ரீதியுடன் இருகம் வந்து தாயிடத்திலும், மாமனிடத்திலும் நடந்தவைகளையெல்லாம் தெரிவித்து அவ்விருவரையும் சந்தோஷப்படுத்தினார்.

இந்த வரலாற்றைக் கேட்ட அங்குள்ள நாகங்கள் மேகந்தெளிந்து ஆஸ்தீக முனிவரைப்பார்த்து விசுவாசத்துடன் வேண்

டும் வரங்களைக் கேட்டுக் கொள்ளுமென்று கூறின. இவ்விதம் நாகங்கள் வரம்வாங்கிக் கொள்ள வற்புறுத்தியதும் ஆஸ்தீகர், "ஏ சர்ப்பங்களே! உலகத்திலப்பிரசன்னமான மனதுடன் அந்தணர்கள் அல்லது எந்தமானிடர்களேனும் காலையிலும்மாலையிலும் என் கதை அடங்கியஇச்சரித்திரத்தைக்கூறவோ அல்லதுபடிக்கவோ அல்லது படித்துப்பிறருக்குப்போதிக்கவோ செய்வார்களாயின் உங்களால் கொஞ்சமேனும் அவர்களுக்குப் பயம் உண்டாகக்கூடாது. இது தான் எனக்கு வேண்டிய வரம்" என்றார். சர்ப்பங்களும் ஆஸ்தீக முனிவரை நோக்கி "நாங்கள் சந்தோஷமடைந்தோம். நீர் கேட்டுக்கொண்டபடி செய்கிறோம்" என்று சொல்லின

## தோத்திரம்.

"ஜரத்காரு முனிவருக்கு ஜரத்காருவிடம் பிறந்த மகா கீர்த்தி வாய்ந்தவரும், சத்திய சந்தருமாகிய ஆஸ்தீகமுனிவர் எங்களை சர்ப்பங்களினின்று இரக்ஷிக்கட்டும.

அவிதன், கீர்த்திமான், சுநீதன் என்ற இந்தஆஸ்தீகமுனிவரின் நாமதேயங்களை பகலிலோ இரவிலோ ஸ்மரணம் செய்பவனுக்கு சர்ப்ப பயம் ஏற்படாமலிருக்கவேண்டும்.

எந்த முனிவர் ஜரத்காருவிடம் ஜரதகாருவுக்குப் பிறந்து மிகுதியான கீர்த்தியுடன் சர்ப்பங்களை ஜனமேஜயன் யாகத்தில் நின்று காப்பாற்றினாரோ அந்த ஆஸ்தீமுனிவரை ஸ்மரணம் செய்கிற என்னை மஹா பாக்கியமுள்ள நாகங்களே! ஹிம்ஸிக்காமலிருக்கவேண்டும்.

ஏ சர்ப்பமே! ஜனமேஜயன் யாகம்முடிவானவுடன் ஆஸ்தீகருடைய சொல்லை ஸ்மரித்துக் கொண்டு நீ விலகியிருக்கவேண்டும், உனக்கு மங்களம் உண்டாகவேண்டும்".

---

பிறகு சர்ப்பங்கள் ஆஸ்தீகமுனிவரின்வசனப்படி எந்தநாகம் அனுஷ்டிக்கவில்லையோ அதன் தலை நூறாதுண்டாகட்டும் என்று சாபமிட்டன.

இவ்விதம சர்ப்ப சிரேஷ்டர்கள் தெரிவித்தவுடன் மஹாத்துமாவாகிய ஆஸ்தீகமுனிவர் பரமானந்த மடைந்து வேறு இடம் புறப்பட எண்ணினார்.

நாகராஜன் நாகங்களின் மத்தியிலிருந்து இவ்விதம் சொல்லி விட்டு, அந்தச்சர்ப்பங்களுடன் தன்கிருகம் வந்து சேர்ந்தான்.

தருமாத்துமாவாகிய ஆஸ்தீக முனிவர் சர்ப்பங்களை விடு வித்து இகலோகவாழ்வை அநுபவித்து விட்டுக் கடைசியில் மோக்ஷமடைந்தார்.

இவ்விதம் சர்ப்பபயம் உண்டாகாமலிருக்கும் ஆஸ்தீகமுனி வரின் சரித்திரத்தை உமக்குக் கூறினேன்.

தருமங்களையும் புண்ணியங்களையும் விருத்திசெய்யும் சாவ ஞானியாகிய ஆஸ்தீகமுனிவரின் சரித்திரத்தைக்கேட்டவன், கிரு கஸ்தாசிரமத்திற்குரிய தருமங்களை விதிப்படி அநுஷ்டானஞ்செய்து பாபங்களெல்லாவற்றினு மிருந்து விடுபட்டு தீர்க்காயுளையும் அடைவான்.

சுபம்! சுபம்! சுபம்!!

ஆஸ்தீகோபாக்கியானம்.

முற்றிற்று.



ஸ்ரீ:

கடவுள்துணை.

# முகவுரை.

ஐந்திணையைம்பது என்பது கடைச்சங்கம் மருவிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. கீழ்க்கணக்கு நூல்களாவன;— க-நாலடி, உ-நான்மணிக்கடிகை, ந-இனியது நாற்பது, ச-இன்னாநாற்பது, ரு-களவழிநாற்பது, சு-கார்நாற்பது, எ-ஐந்திணையைம்பது, அ-ஐந்திணையெழுபது, கூ-திணைமொழியைம்பது, க0-திணைமாலை நூற்றைம்பது, கக-திருக்குறள், கஉ-திரிகடுகம், கந-ஆசாரக்கோவை, கச-பழமொழி, கரு-சிறுபஞ்சமூலம், கசு-முதுமொழிக்காஞ்சி, கஎ-ஏலாதி, கஅ-கைந்நிலை என இவை; இதனை,

*"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி—மாமூல
மெய்ந்நிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு" என்னும் வெண்பாவினு லறிந்துகொள்க. நானாற்பதைந்திணை என்புழி நானாற்பது, நாலைந்திணை எனவுரைக்க. கீழ்க்கணக்கு, நாலடி......மெய்ந்நிலைய காஞ்சியோடு ஏலாதி கைந்நிலையவாம் என்ப: என்க. கணக்கு-மேற்கணக்கு, கீழ்க் கணக்கு என இருவகைப்படும். ஐம்பது முதல் ஐந்நூறிறுதியாக ஐவகைப்பாவானும் வருவது மேற்கணக்கெனப்படும். அவ்வகை யெண்ணில் அறம்பொருளின்பங்களைப்பற்றி வெண்பா ஒன்றனே வருவது கீழ்க்கணக்கெனப்படும். இவற்றிற்கிலக்கணம்;—

"மேல்கீழ்க் கணக்கென விருவகைக் கணக்கே"

---

* இவ்வெண்பா, "நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப், பால் கடுகு கோவை பழமொழி—மாமூல, மின்னிலைய காஞ்சியுடனேலாதி யென் பவே, நன்னிலைய தாகுங் கணக்கு" என ஆழ்வார்திருநகரியிற் கிடைத்த பழையதோர் திருக்குறளுரை யேட்டுமுகத்து எழுதப்பட்டுள்ளது. இப்பாடத்து ஐந்திணையென்பது ஐந்து திணை நூல்கள் என்க; அவை ஐந்திணை யைம்பது முதலிய நான்கும், கைந்நிலையும் ஆம்.

"மேற்கணக் கெனவுங் கீழ்க்கணக் கெனவும்
பாற்படும் வகையாற் பகர்ந்தனர் கொளலே"

"அகவலுங் கலிப்பா வும்பரி பாடலும்
பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறு
மிகுத்துடன் றொகுப்பது மேற்கணக் கெனவும்
வெள்ளைத் தொகையு மவ்வகை யெண்பெறி
னெள்ளறு கீழ்க்கணக் கெனவுங் கொளலே"

"ஐம்பது முதலா வைந்நூ றீறு
வைவகைப் பாவும் பொருணெறி மரபிற்
றொகுக்கப் படுவது மேற்கணக் காகும்"

"அடிநிமி ரில்லாச் செய்யுட் டொகுதி
யறம்பொரு ளின்ப மடுக்கி யவ்வத்
திறம்பட வுரைப்பது கீழ்க்கணக் காகும்"

எனவரும் பன்னிருபாட்டியற் சூத்திரங்களாலுணர்க. கீழ்க்கணக்கிற்கு வெண்பாவேயன்றி அதனினமும் ஆம் என்பது முதுமொழிக் காஞ்சியில் "ஆர்கலி யுலகத்து மக்கட் கெல்லா—மோதலிற் சிறந்தன் றொழுக்க முடைமை" என வெண்செந்துறை வந்தவாற்றானறிக. மேற்கணக்கிற்கே "ஐம்பது முதலா வைந்நூ றீறு" எனவும் "பதிற்றைந் தாதி பதிற்றைம்ப தீறு" எனவும் சிறுமைக்கும் பெருமைக்கும் எண்வரையறை கூறிக், கீழ்க்கணக்கிற்கு "அவ்வகை யெண்பெறின்" எனவும் "அடி நிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி" எனவும் ஒதினமையாற் கீழ்க்கணக்குச் சிறுபான்மை ஐம்பதிற்குறைந்தும் ஐந்நூற்றின் மிக்கும் வருமெனக்கொள்க. இனியது, இன்னா, களவழி, கார்நாற்பது ஐம்பதிற் குறைந்துவந்தன. முப்பால் ஐந்நூற்றின் மிக்கு வந்தது. இக்கீழ்க்கணக்கு நூல்களையே தாயபனுவல் என்னும் பெயராற் கூறுவர் எனவும், இவை அறம்பொருளின்பமென்னு மூன்றற்கு மிலக்கணஞ்சொல்லுவ எனவும், வேறிடையிடை அவையன்றியுந் தாவுச் செல்வதுமுண்டெனவும், இச்செய்யுட்கள் அடிநிமிராது இரண்டடிமுதல் ஆறடியிறுதியாகவருவன எனவும், அவை எழுத்தினைகன்றுகாட்டாது சில எழுத்தினான் வருவன எனவும், அவையெண்ணுச் சுருங்கிச் சிலவாகவருவன எனவும், "வனப்பியறானே"

என்னுஞ்செய்யுளியற் சூத்திரத்துப் பேராசிரியரும், நச்சினார்க்கினிய ரும் உரைத்தவாற்றானுணர்ந்துகொள்க. "சின்மென் மொழியாற் றாய பனுவலோ, டம்மை தானே யடிநிமிர் பின்றே" என்ற தொல் காப்பிய நெறியேபோற்றி ஆசிரியர் இருபாட்டியற்கண்ணும் "அடி நிமிர் பில்லாச் செய்யுட் டொகுதி" எனக்கூறியதுங் காண்க. இவ் வைந்திணையைம்பது அறம்பொருளின்பமெனவுடனெண்ணப்பட்ட மூன்றனுள் இன்பப்பகுதிபற்றிச் சிலவாய மெல்லிய சொற்களால் நான்கடியினேறாமல் ஐம்பதாய் எண்ணுச் சுருங்கி வெண்பாவான் வந்தமையாற் கீழ்க்கணக்காயவா றுகண்டுகொள்க.

இஃது அவ்வின்பப்பகுதிக்குரிய இருத்தல், புணர்தல், ஊடல், பிரிதல், இரங்கல் என்னும் ஐவகை யொழுகலாறுகளையும் முறையே முல் லை, குறிஞ்சி, மருதம், பாலை, நெய்தல் என்னும் பெயரான் ஐந் திணையாகவைத்து ஒவ்வொரு திணைக்கும் பப்பத்து வெண்பா வாகக் கூறுதலான் ஐந்திணையைம்பது எனப்பெயர்பெற்றது. இந் நூலுள் ஐந்திணையையும் முல்லை முதலாக நெய்தலிறுதியாகவைத் தது பெரும்பான்மையும் தொல்காப்பியத்து,

"மாயோன் மேய காடுறை யுலகமுஞ்
சேயோன் மேய மைவரை யுலகமும்
வேந்தன் மேய தீம்புன லுலகமும்
வருணன் மேய பெருமண லுலகமு
முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச்
சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"

என்னும் அகத்திணையியற் சூத்திரத்துக் கோளப்பட்ட முறையே பற் றியதாகும். மற்று எண்ணப்படாத பாலையையும் உடன்வைத்த தென்னையெனின்;—அது "நிலம் நான்கேயாகக்கூறலிற் பாலைக்கு நில மின்றெனின், அற்றன்று: 'புணர்தல்பிரிதலிருத்தலிரங்க லூட லிவற்றி னிமித்தமென் றிவை, தேருங்காலைத் திணைக்குரிப்பொருளே' (தொல். பொ. அகத். கச) என நால்வகைநிலத்துங்கொண்ட உரிப் பொருட்கிடையே பிரிதலும் உரிப்பொருளாக ஆசிரியர் கொண் டார், அப்பிரிவு நான்கு நிலத்திடையும் பொதுவாய் மயங்கிவருமெ ன்று கருதி; ஆதலின், ஈண்டுப் பாலைத்திணையையுந் திணையாக ஆசிரி

யர் நல்லந்துவனார் கோத்தாரென்று கூறுக" என ஆசிரியர் நச்சினார்க்கினியர் கலித்தொகை முகத்துக் கூறியவாற்றானுணரப்படும். இனி இம்முறைவைப்பிற்குக் காரணம் வருமாறு;—ஒவ்வொழுக்கமெல்லாம் இல்லறம்பற்றிய தாதலின் கற்பொடுபொருந்திக் கணவன்சொற்பிழையாது இல்லிருந்து நல்லறஞ்செய்தல் மகளிரதியற்கை முல்லையாதலின் அது முற்கூறப்பட்டது. புணர்தலின்றி இல்லறம் நிகழாமையின் புணர்தற்பொருட்டாகிய குறிஞ்சி அதன் பின் வைக்கப்பட்டது. புணர்ச்சியின் ஊடனிகழ்தலின் அதன்பின் மருதம் வந்தது. அம்மருதத்துக்கண்ணும் பரத்தையிற் பிரிவுபோலப் பிரிவொப்புமைநோக்கிப் பிரிதலாகிய பாலை அதன் பின்னையது. பிரிவுபற்றி உளதாகும் இரங்கலாகிய நெய்தல் அப்பாலைக்குப் பின்னின்றது என்பது. இவ்வைந்திணை யியல்புகள் பலவற்றை இந்நூல் கருவிங்கவிளங்க வுரைக்கும். இந்நூற்பாயிரத்துள் "ஐந்திணை யைம்பதுமார்வத்தி னோதாதார், செந்தமிழ் சேராதவர்" எனக்கூறியவாற்றானே இதன் பெருமை நன்கறியத்தக்கது. இதன்கண்ணுள்ள பாடல்கள் பல நச்சினார்க்கினியர் முதலிய நல்லாசிரியர்களாற் றம்முரைகளில் எடுத்தாளப்பட்டுள்ளன.

இந்நூலாசிரியர் மாறன்பொறையனார் என்பார். பாண்டியன் பெயரும் சேரன்பெயருமே இவர்க்குப்பெயராக இணைந்திருத்தலின் இவர் அவ்விருபேரரசர்க்கும் நட்பினால் உரிமையுடையரோ வென ஊகிக்கப்படுகிறார். மாறன்-பாண்டியன்; பொறையன்-சேரன். கோப்பெருஞ்சோழற்கும் பிசிராந்தையார் என்னும் புலவர்க்கும் உளதாகிய நட்புரிமையாற் பிசிராந்தையார் தம்பெயரைப் பிறர்க்குச்சொல்லும்பொழுது தம்பெயர் சோழனென்று அவ்வரசன்பெயரையே தம்பெயராகச் சொல்லியதனையும் ஈண்டைக்காராய்ந்துகொள்க. இதனைத் "தன்பெயர் கிளக்குங் காலை யென்பெயர், பேதைச் சோழனென்னுஞ் சிறந்த, காதற் கிழமையு முடையன்" எனவரும் புறப்பாட்டான் (உகச) அறிக. இவர் தந்நூல் முதற்செய்யுளிற் றிருமாலையும், முருகக்கடவுளையும், சிவபிரானையும் எடுத்தோதுதலான், இவர் வேதநெறிப்பட்ட ஒழுக்கினரென்பதும் அறியலாகும். இவரது சொற்பொருள் வழக்குக்களும், உவமைகளும், பிறவும் மற்றைக்கீழ்க்

கணக்கு நூல்களிலும் பத்துப்பாட்டிலும் எட்டுத்தொகையிலும் திருச்சிற்றம்பலக்கோவையிலும் ஆங்காங்குக் காணலாகும். இந்நூற்கண்ணுள்ள வெண்பாக்கள் ஒவ்வொன்றன்பின்னுந் தனித்தனியே கருத்துரையும் பொழிப்புரையும் உள்ளன. அவற்றை இயற்றினோர் பெயர் முதலியன ஒன்றும் புலப்படவில்லை. அவ்வுரைநடையினை ஆராயின் அவையும் முற்காலத்தனவாதல் தெளியப்படும். இவ்வுரைகளோடுகூடிய ஐந்திணையைம்பதுப் பிரதியிரண்டு இச்சங்கத்திற்குக் கிடைத்தன. இவை இம்மதுரைத் தமிழ்ச்சங்க ஸ்தாபகரும் அக்கிராசனாதிபதியுமாகிய பாலவனத்தம் ஜமீந்தார் ஸ்ரீமான்-பொ. பாண்டித்துரைத் தேவரவர்கள் நன்முயற்சியானே பெறப்பட்டன. இவற்றை உதவியபேருபகாரிகள் சென்னைவித்துவான்: மகா-௱-௱ ஸ்ரீ தி. செல்வக்கேசவராயமுதலியாரவர்கள் எம். ஏ., திருமயிலை வித்துவான்: மகா-௱-௱-ஸ்ரீ சண்முகம்பிள்ளையவர்கள் என்னும் இவர்கள். இவ்விருபிரதிகளினும் உள்ளவாறே இந்நூல் பதிப்பிக்கப்பட்டது.

இதனுள் முல்லையில் "மின்னுமுழக்கும்" என்பது முதலாகப் "பிரிந்தவர்மேனி" என்பதிறுதியாக உள்ள வெண்பாக்களாறும் "அணிநிறமஞ்ஞை" என்பதுபோலப் 'பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச்சொல்லியது' ஆயிற் செவ்வனம் இயைவனவாகும். அவ்வாறன்றிப் பிரதிகளிற் 'பருவங்கண்டழிந்த கிழத்திகூறுந் தோழி சொல்லியது' எனவேயுள்ளது. தலைவியது ஆற்றாமைக்குக் காரணமாய காரும் மாலையும் சிறுபறையோசை முதலியனவும் தோழி கண்டுகேட்டுத் தானும் ஆற்றாளாய்க் கூறிற்றாகித் தாமென்ன ஒரு காற்கொள்ளவுமாமென்று கருதி அதற் பாடம் மாற்றத் துணிந்திலேன்.

இஃது இம்மதுரைத் தமிழ்ச் சங்கத்தினின்று வெளியாகின்ற "செந்தமிழ்"ப் பத்திரிகைக்குரிய முதற்பிரசுரமாவது. இவ்வாறே இதுகாறும் அச்சிடப்படாமலுள்ள பொருளாற்பெரியவும் அளவாற் சிறியவும் ஆகிய பண்டையோருரைத்த தண்டமிழ்நூல்கள் பலவற்றை இச்செந்தமிழ் வாயிலாக வெளியிடக் கருதியிருத்தலின், அப்

பழைய ஏடுகளுடைய நல்லோர் அவற்றை இச்சங்கத்திற்கனுப்பியரு ளுமாறு அவரைப் பன்முறை வேண்டுகின்றேன்.

'அறிவ தறியு மறிவினர் கேண்மை
நெறியே யுரையாதோ மற்று' (ஐந்திணையைம்பது-உரு.)

'மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தா
ரொற்கங் கடைப்பிடியா தார்' (ஷை, சஅ.)

இங்ஙனம்,

ஸேதுஸம்ஸ்தானவித்வான்,

**ரா. இராகவையங்கார்,**

செந்தமிழ்ப் பத்திராசிரியர்.



# விஷயசூசிகை.

[எண்கள் பாட்டெண்கள்.]

## விஷயசூசிகை.

உ

கடவுள் துணை.

# மாறன்பொறையனார்

அருளிச்செய்த

# *ஐந்திணையைம்பது

## மூலமும் உரையும்.

பாயிரம்.

பண்புள்ளி நின்ற பெரியார் பயன்றெரிய
வண்புள்ளி மாறன் பொறையன் புணர்த்தியாத்த
வைந்திணை யைம்பது மார்வத்தி னோதாதார்
செந்தமிழ் சேரா தவர்.

---

## க.—முல்லை.

மல்லர்க் கடந்தா னிறம்போன் றிருண்டெழுந்து
செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி—நல்லா
யியங்கெயி லெய்தவன் றார்பூப்ப வீதோ
மயங்கி வலனேருங் கார்.

தலைமகளைத் தோழி பருவங்காட்டி வற்புறுத்தியது.

இதன்பொருள். மல்லரைவென்றவன் நிறம்போல இருளைச்செய்தெழுந்து செல்வக் கடப்பந்தாரினை விரும்பினான் வேல்போல மின்னி விசும்பின் இயங்குகின்ற முப்புரங்களை யெய்தவன் கொன்றைத்தார் பூப்ப மிடைந்து எழாநின்றது நல்லாய்! இக்கார் என்றவாறு. (க)

---

* இஃது சங்கத்தாராற் றொகுக்கப்பட்ட பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று.

உ. அணிநிற மஞ்ஞை யகவ விரங்கி
மணிநிற மாமலைமேற் றாழ்ந்து—பணிமொழி
கார்நீர்மை கொண்ட கலிவானங் காண்டொறும்
பீர்நீர்மை கொண்டன தோள்.

பருவங்கண்டழிந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்) அழகிய நிறத்தையுடைய மயில்களகவ முழங்கி நீலமணி நிறத்தையுடைய மாமலையின்கட் படிந்து, மெல்லிய மொழியையுடையாய்! கார்காலத்துத் தன்மையைக் கொண்ட மிக்க முகில்களைக் காணுந்தோறும் என்றோள்கள் பீரின் தன்மையைக் கொண்டன எ-று. (உ)

௩. மின்னு முழக்கு மிடியுமற் றின்ன
கொலைப்படை சாலப் பரப்பிய முல்லை
முகைவென்ற பல்லினா யில்லையோ மற்று
நமர்சென்ற நாட்டுளிக் கார்.

பருவங்கண்டழிந்த கிழத்திக்குத் தோழி சொல்லியது.

(இ - ள்) நமர்சென்ற நாட்டின்கண் மின்னும் முழக்கும் இடியும் என்றுசொல்லப்பட்ட இக்கொலைப் படைகளை நிரம்பப் பரப்புதற்கு இக்காரில்லையோ முல்லை முகை வென்ற பல்லினாய்! எ-று. (௩)

௪ உள்ளார்கொல் காதல ரொண்டொடி நந்திறம்
வள்வார் முரசின் குரல்போ லிடித்துறி
நல்லார் மனங்கவரத் தோன்றிப் பணிமொழியைக்
கொல்வாட்குக் கூர்ந்ததிக் கார்.

இதுவுமது.

(இ - ள்) நந்திறத்தைக் காதலர் உள்ளார்கொல்லோ ஒண்டொடி! தோலார்ந்த முரசின் குரலினோசைபோல இடித்து முழங்கித் தங்கொழுநரைப்

---

* இச்செய்யுளைப் பருவங்கண்டு பெருமகள் புலம்பற்கு உதாரணங் காட்டுவர் அகப்பொருள்விளக்கவுரைகாரர். (களவியல், ௫௩.)

பிரிந்த நல்லார் மனநெகவரும்படி தோன்றி நங்காதலர் சொன்ன இன்சொல்லைச் சிதைப்பதுபோல மிக்கது இக்கார் எ-று. (௪)

௫ கோடியர் தோற்ற மலைமேல் விரிநீர்கொண்மூக்
கூடி நிரந்து தலைபிணங்கி—யோடி
வளிகலந்து வந்துறைக்கும் வானங்காண் டோறுந்
துளிகலந்து வீழ்தருமென் கண்.

இதுவுமது.

(இ-ள்) குவடுகளுயர்ந்த தோற்றத்தையுடைய மலைகண்மேற் பெருமுகில்கள் இரண்டும் இடைந்து ஒன்றோடொன்று பிணங்கியோடிக் காற்றொடு கலந்து பெய்கின்ற விசும்பு காணுந்தோறும் துளிகலந்து பெய்யாநின்றன என்கண்கள் எ-று. (௫)

௬ முல்லை நறுமல ரூதி யிருந்தும்பி
செல்சார் வுடையார்க் கினியவாய்—நல்லாய்மற்
றியாருமில் நெஞ்சினே மாகி யுறைவேமை
யீரு மிருண்மாலை வந்து.

இதுவுமது.

(இ-ள்) நல்லாய்! இருந்தும்பி முல்லை நறுமலரை ஊதுதலால் தமக்குச் செல்சார்வாகிய கொழுநரையுடையார்க்கு இன்பத்தைச் செய்வனவாய் யாரும் துணையில்லாத நெஞ்சினேமாகி உறைவேமை இருண்மாலை வந்து ஈராநின்றது எ-று. (௬)

௭ தேரோன் மலைமறைந்த செக்கர்கொள் புன்மாலை
யாரான்பி னாய னுவந்தூதுஞ்—சீர்சால்
சிறுகுழ லோசை செறிதொடீ வேல்கொண்
டெறிவது போலு மெனக்கு.

இதுவுமது.

(இ-ள்) தேரினையுடைய பகலவன் மலையின்கண் மறைந்த செக்கர் கொண்ட புன்மாலையின்கண் வரிய ஆனிரையின் பின்னே ஆயன் விரும்பி ஊதுஞ் சீரமைந்த சிறுகுழல் இன்னோசை, வேல்கொண்டு எறிவது போலாநின்றது செறிதொடீ! எனக்கு எ-று. (௭)

அ பிரிந்தவர் மேனிபோற் புல்லென்ற வள்ளி
பொருந்தினர் மேனிபோற் பொற்பத்—திருந்திழாய்
வானம் பொழியவும் வாரார்கொ லின்னாத
கானங் கடந்துசென் றார்.

இதுவுமது.

(இ - ள்) துணைவரைப் பிரிந்தார் மேனிபோலப் புற்கென்ற வள்ளிகள், துணைவரோடு பொருந்தியிருந்தார் மேனிபோலப் பொலிவு தோன்றும் வகை வானம் பொழியவும் வாரார்கொல்லோ, திருந்திழாய்! இன்னாத கானங்களைக் கடந்துசென்றார் எ-று. (அ)

கூ வருவர் வயங்கிழாய் வாளொண்க ணீர்கொண்
டுருகி யுடன்றழிய வேண்டா—தெரிதியேற்
பைங்கொடி முல்லை யவிழரும் பீன்றன
வம்ப மழையுறக் கேட்டு.

பருவமென்றழிந்த கிழத்தியைத் தோழி
பருவமன்றென்று வற்புறுத்தியது.

(இ-ள்) விளங்கிய இழைகளையுடையாய்! நங்காதலர் பருவம் வந்தால் வருவர்; வாளினை ஒக்கும் நின்கண்கள் நீர்கொள்ள நீயுருகி மாறுபட்டு அழியவேண்டா; ஆராய்வாயாயிற் றன்பருவமல்லாமையின் நிலையில்லாத முழக்கங் கேட்டுப் பைங்கொடி முல்லைகள் அவிழரும்பு ஈன்றனகாண் எ-று. (கூ)

கo நூனவின்ற பாகதேர் நொவ்விதாச் சென்றீக
தேனவின்ற கானத் தெழிலோக்கித்—தானவின்ற
கற்புத்தாள் வீழ்த்துக் கவுண்மிசைக் கையூன்றி
நிற்பா ணிலையுணர்கம் யாம்.

வினைமுற்றிய தலைமகன்
தேர்ப்பாகன் கேட்பச் சொல்லியது.

(இ-ள்) நூல்பயின்ற பாகனே! நின்றேர் கடிதாகச் செல்வதாக; தேன் பயின்ற காட்டினது அழகை நோக்கித் தான்பயின்ற கற்பென்னுநின்ற தாளினைச் செறித்து உயிர்காத்துக் கவுளின்மிசைக் கையூன்றி நிற்பாளது நிலைமையை நாம்சென்று அறிவாம் எ-று. (கo)

முல்லை முடிந்தது.

---

# உ.—குறிஞ்சி.

கக பொன்னிணர் வேங்கை கவினிய பூம்பொழிலு
ணன்மலை நாட னலம்புனைய—மென்முலையாய்
போயின சின்னாள் புனத்து மறையினு
லேயினு ரின்றி யினிது.

பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத் தோழி
தலைமகட்குச் சொல்லுவாளாய்ச் செறிப்பறிவுறீஇயது.

(இ - ள்) பொன்போன்ற பூங்கொத்தையுடைய வேங்கைகள் அழகு பெற்ற பூம்பொழிலின்கண் வந்து நன்மலைநாடன் நினது நலத்தினைப் புனையக் கழிந்தன சிலநாள்; புனத்தின்கட் களவினான் எதிர்ப்பட்டோ ரின்றி இடையூறின்றியே யினிதாக எ-று. (க)

கஉ மால்வரை வெற்ப வணங்கு குரலேனல்
காவ லியற்கை யொழிந்தேம்யாந்—தூவருவி
பூக்கண் கழூஉம் புறவிற்றாய்ப் பொன்விளையும்
பாக்க மிதுவெம் மிடம்.

பகற்குறிவந்து பெயர்கின்ற தலைமகனைக்
கண்ணுற்றுத் தோழி செறிப்பறிவுறீஇயது.

(இ - ள்) பெரிய குவடுகளையுடைய வெற்பனே! வளைத்த கதிர்களை யுடைய பசுந்தினையைக் காத்தல் யாமொழிந்தேம்; தூவருவிகள் பூவின் கண்களைக் கழுவுகின்ற காட்டினை யுடைத்தாய்ப் பொன்விளையும் இப்பாக்கம் எம்முடைய இடமாதலான், நீயிங்கே வரக்கடவன் வருவாயாக எ-று. (உ)

கங கானக நாடன் கலவானென் றோளென்று
மானமர் கண்ணாய் மயங்கனீ—நானம்
கலந்திழியு நன்மலைமேல் வாலருவி யாடப்
புலம்பு மகன்று நில்லா.

சிறைப்புறத்தானாகத் தலைமகனை யியற்பழித்த
தோழிக்குத் தலைமகள் இயற்பட மொழிந்தது.

(இ - ள்) கானகநாடன் என்றோளைப் புணரானென்று சொல்லி, மான் போன்ற மதர்த்த கண்ணினையுடையாய்! அறிவு கெடா தொழிவாயாக;

பலநறுவிரைகளையுங் கலந்து இழியாநின்ற நன்மலையின்கண் உள்ள வாலிய அருவியையாட என்றோள்களின்கட் புலம்பும் நீங்கி னில்லாது எ-று. (௩)

௧௪ புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய் சாரற்
றினைகாத் திருந்தேம்யா மாக—வினைவாய்த்து
மாவினவு வார்போல வந்தவர் நம்மாட்டுத்
தாம்வினவ லுற்றதொன் றுண்டு.

தோழி தலைமகட்கு மெலிதாகச்
சொல்லிக் குறைநயப்புக்கூறியது.

(இ - ள்) செய்யப்பட்ட பூந்தழைகளான் அணியப்பட்ட அல்குலினை யுடைய பொன்னன்னாய்! மலைச்சாரலின்கட் டினையைக் காத்து நாம் இருந்தேமாக, வினையை வாய்க்கச்செய்து ஒருமாவினவுவார்போல வந்தாரொருவர் நம்மாட்டுத் தாம் வினவலுற்ற பிறிதொன்று உண்டு எ-று. (௪)

௧௫ * வேங்கை நறுமலர் வெற்பிடை யாங்கொய்து
மாந்தளிர் மேனி வியர்ப்பமற்—றாங்கெனைத்தும்
பாய்ந்தருவி யாடினே மாகப் பணிமொழிக்குச்
சேந்தனவாஞ் சேயரிக்கண் டாம்.

பகற்குறிக்கட் டலைமகன் சிறைப்புறத்தானாகத்
தோழி தாய்கேட்டகற்கு மறுமாற்றஞ் சொல்லுவாள்
போலப் படைத்துமொழிகிளவியான் வரைவுகடாயது.

(இ - ள்) வெற்பின்கண் வேங்கைமலரையுங் கொய்து நின்மகள் மாந்தளிர்மேனி வியர்த்தலான் அவ்விடத்து எல்லாவருவியும் பாய்ந்தாடினேமாகப் பணிமொழியையுடையாட்குச் சேயரிக்கண்டாம் சிவந்தன காண் எ-று. (௫)

௧௬ கொடுவரி வேங்கை பிழைத்துக்கோட் பட்டு
மடிசெவி வேழ மிரீஇ—யடியோசை
யஞ்சி யொதுங்கு மதருள்ளி யாமிருட்
டுஞ்சா சுடர்த்தொடி கண்.

* இதனை "ஐயச் செய்கை தாய்க்கெதிர் மறுத்துப், பொய்யென மாற்றி மெய்வழி கொடுப்பினும்" என்பதற்கு உதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர். (தொல், பொரு, கஎ, உ௩.)

இரவுக்குறிவந்து பெயருந் தலைமகனைக்
கண்ணுற்றுநின்ற தோழி வரைவுகடாயது.

(இ - ள்) கொலைவரி வேங்கையாற் கோட்பட்டுப் பிழைத்து மடிந்த செவியையுடைய வேழம் பிரிந்து தன்னடியோசையைப் புலி கேட்குமென்று அஞ்சி மெல்ல நடக்கும் வழியை நினைந்து, கருங்குழலின்கட் சுடர்த்தொடியையுடையாள் கண் துயிலா எ-று. (சு)

கஎ மஞ்சிவர் சோலை வளமலை நன்னாட
வெஞ்சாரு நீவருதி யென்றெண்ணி — யஞ்சித்
திருவொடுங்கு மென்சாயற் றேங்கோதை மாத
ருருவொடுங்கு முள்ளுருகி நின்று.

இதுவுமது

(இ - ள்) முகில் படாநின்ற சோலையையுடைய வளமலைநாடனே! ஒருநாள் ஒழியாது இரவின்கண் நீ வாராநின்றாய என்று எண்ணித், திருவொடுங்கு மென்சாயற் றேங்கோதை மாதர் அஞ்சி யுள்ளுருகி நின்று தன்மேனி மெலியாநின்றாள் எ-று. (எ)

கஅ *எறிந்தெமர் தாமுழுத வீர்ங்குர லேனல்
மறந்துங் கிளியினமும் வாரா — கறங்கருவி
மாமலை நாட மடமொழி தன்கேண்மை
நீமறவ னெஞ்சத்துக் கொண்டு.

தோழி செறிப்பறிவுறீஇத் தலைமகனை வரைவுகடாயது.

(இ - ள்) காடெறிந்து எமர் தாமுழுத ஈரங்குரல் ஏனலின்கண் மறந்தாயினுங் கிளியினமும் நாங்களும் வாரோம், கறங்கருவியினையுடைய மாமலை நாடனே! மடமொழியோடு நீ கொண்ட கேண்மையை நின்னெஞ்சத்துக் கொண்டு மறவாயாக எ-று. (அ)

கசு †நெடுமலை நன்னாட நீள்வேற் றுணையாகக்
கடுவிசை வாலருவி நீந்தி — நடுவிரு

* இதனை "ஓம்படைக் கிளவிப் பாங்கின் கண்ணும்" என்புழி எடுத்தோதினர் நச்சினார்க்கினியர். (தொல், பொரு, கள, உ௩) அகப்பொருள் விளக்க வுரைகாரரும் பாங்கி தலைமகனை முன்னிலையாக வெறிப்புணர்த்தி ஓம்படை சாற்றற்கு உதாரணங்காட்டுவர். (களவியல், ரு௰அ)

† இது இரவுக்குறி விலக்கியது என்றார் நச்சினார்க்கினியரும். (தொல், பொரு, கள, உ௩.)

னின்னா வதர்வர வீர்ங்கோதை மாதரா
ளென்னாவா ளென்னுமென் னெஞ்சு.

தோழி இரவுக்குறியின்கண்
நெறிவிலக்கி வரைவுகடாயது.

(இ - ள்) நெடுமலை நன்னாடனே! நீள்வேலே துணையாகக் கடிய விசையையுடைய வாலருவியை நீந்தி, நடுவிருளின்கண் இன்னாத வழியின்கண் நீவர, ஈர்ங்கோதை மாதராள் எப்பெற்றியாவாளோ என்று தடுமாறாநிற்கும் என்னெஞ்சு எ-று. (௧௯)

௨௦ *வெறிகமழ் வெற்பனென் மெய்ந்நீர்மை கொண்ட
தறியாண்மற் றன்னோ வணங்கணங்கிற் றென்று
மறியீர்த் துதிரந்தூய் வேலற் றரீஇ
வெறியோ டலம்வரு மாய்.

தலைமகள் தோழிக்கு அறத்தொடுநின்று
வெறிவிலக்கவேண்டும் உள்ளத்தாளாய்ச் சொல்லியது.

(இ - ள்) விரைகமழாநின்ற வெற்பன் எனதுமெய்யின்கண் உள்ள நீர்மையைக் கொண்டது அறியாளாய், அந்தோ தெய்வம் என்னை வருத்திற்று என்று வேலனைத் தந்து மறியை யறுத்து உதிரத்தைத் தூவி வெறியோடே வருந்தாநின்றாள் அன்னை எ-று. (௨௦)

குறிஞ்சி முடிந்தது.

---

## ௩.—மருதம்.

௨௧ கொண்டுழிப் பண்டம் விலைபொரீஇக் ‡கொற்சேரி
நுண்டுளைத் துன்னூசி விற்பாரி—னொன்றானும்
வேறல்லை பாண வியலூரன் வாய்மொழியைத்
தேற வெமக்குரைப்பாய் நீ.

பாணற்குத் தலைமகள் வாயின்மறுத்தது.

---

* இது வெறியச்சுறுத்தியது என்பர் நச்சினார்க்கினியர். (தொல், பொரு, கள, ௨௩.) அகப்பொருள்விளக்கவுரைகாரரும் வெறிவிலக்கிற்கு உதாரணம் காட்டுவர். (களவியல், ௬௮.)

‡ "வைகொண்ட வூசிகொற் சேரியின் விற்றெம்மில் வண்ணவண்ணப், பொய்கொண்டு நிற்கலுற் றோபுலை யாத்தின்னி போந்ததுவே" என்றார் திருச்சிற்றம்பலக்கோவையினும். (௩௮௬)

(இ-ள்) பண்டங் கொண்ட விலையை வேறுபடுத்துக் கொற்சேரியின் கண் நண்ணிய துளையையுடைய ஊசியை விற்றுத்திரிவாரின் யாதாலும் வேறல்ல; பாண! வியலூரான் வாய்மொழியைத் தெளிய எமக்கு உரைக்கின்ற நீ எ-று. (௧)

௨௨ போதார்வண் டூதும் புனல்வய லூரற்குத்
தூதாய்த் திரிதரும் பாண்மகனே—நீதா
னறிவயர்ந் தெம்மில்லு ளென்செய்ய வந்தா
னெறியதுகா ணெங்கைய ரிற்கு.

இதுவுமது.

(இ-ள்) மலர்களை நுகராநின்ற வண்டுகள் ஊதும் புனல்வயலூரற்குத் தூதாய் உழல்கின்ற பாண்மகனே! நீதான் அறிவு கலங்கி எங்கள் மனையுள் என்செய்யவந்தாய்? எங்கையர் மனைக்கு வழி அதுகாண் எ-று. (௨)

௨௩ யாணரகல்வய லூர னருளுதல்
பாண பரிந்துரைக்க வேண்டுமோ—மாணா
வறிவ தறியு மறிவினார் கேண்மை
நெறியே யுரையாதோ மற்று.

இதுவுமது.

(இ-ள்) வளமையுடைய அகல்வயலூரான் எமக்கு அருளுடையன் என்பதனைப், பாணனே! நீ காதலித்து உரைக்க வேண்டுமோ? மாட்சிப்பட அறியக்கடவதனையறியும் அறிவினையுடையார் செய்யும் நட்புநெறியை அவர் அருளுடைமையே உரையாதோ? எ-று. (௩)

௨௪ கோலச் சிறுகுருகின் குத்தஞ்சி யீர்வாளை
நீலத்துப் புக்கொளிக்கு மூரற்கு—மேலெலாஞ்
சார்தற்குச் சந்தனச்சாந் தாயினே மிப்பருவங்
காரத்தின் வெய்யவென் றாள்.

இதுவுமது.

(இ-ள்) அழகிய சிறுகுருகின் குத்தினையஞ்சிக் குளிர்ந்தவாளை நீலமலரின்கட் புக்கு ஒளிக்கும் ஊரினையுடையாற்குப், பண்டெல்லாம் புணர்தற்

குச் சந்தனக்குழம்பாயினேம்; இக்காலம் புண்ணிற்கு இடும் காரம் போல வெய்யவாம் எம்முடைய தோள் எ-று. (௪)

௨௫ அழலவிழ் தாமரை யாய்வய லூரன்
விழைதகு மார்ப முறுநோய்—விழையிற்
குழலுங் குடுமியென் பாலகன் கூறு
மழலைவாய்க் கட்டுரை யால்

வாயில்வேண்டிச் சென்றார்க்குத்
தலைமகள் வாயின்மறுத்தது.

(இ-ள்) அழல்போல அவிழுந் தாமரைகளையுடைய ஆய்வயலூரனுடைய கண்டார் விழையப்பட்ட மார்பம் தான்புகுநிற்கும்; குழலுங் குடுமியென் பாலகன் கூறும் மழலைவாயக கட்டுரையான் எம்மைவிரும்பிப் புணருமாயின் எ-று. (௫)

௨௬ பெய்வளைக் கையாய் பெருநகை யாகின்றே
செய்வய லூரன் வதுவை விழவியம்பக்
கைபுனை தேரேறிச் செல்வானைச் சென்றிவ
னெய்தி யிடருற்ற வாறு.

புதல்வனை முனிந்து தலைமகன் மறுத்தாளைப் போலத்
தோழிக்கு வாயினேர்ந்தது.

(இ-ள்) பெய்வளையினையுடைய கையாய்! எனக்குப் பெரிய நகையாகாநின்றது; செய்த வயல்களையுடைய ஊரன், பரத்தையர் புதுமணங்களின் உள்ள முழவு ஒலித்தலாற் கைபுனை தேரேறிச் செல்வானை இப்புதல்வன் கண்டு சென்று எய்த, அவ்வூரன் புதுமணம் புணரப் பெறாது இடருற்றவாறு எ-று. (௬)

௨௭ தண்வய லூரற் புலக்குந் தகையமோ
நுண்ணறல் போல நுணங்கிய வைங்கூந்தல்
வெண்மரற் போல நிறந்திரிந்து வேறாய
வண்ண முடையேமற் றியாம்.

வாயில் வேண்டிச் சென்றார்க்குத்
தலைமகள் வாயின்மறுத்தது.

(இ-ள்) தண்வயல் ஊரனை ஊடுந் தகையமோ? நுண்ணிய அறல் மணற்

போலும் நுணுகிய ஐவகைப்பட்ட கூந்தல் வெள்ளை மார்போலத் தன்னிறந் திரிந்து வேறுபட்ட நிறத்தையுடையேம் ஆதலான் எ-று. (எ)

உஅ ஒல்லென் றொலிக்கு மொலிபுன லூரற்கு
வல்லென்ற தென்னெஞ்சம் வாட்கண்ணாய்—நில்லென்னா
தேக்கற்றாங் கென்மகன் றளிரப வென்னானு
நோக்கான்றே ரூர்ந்தது கண்டு.

தலைமகள் தோழிக்கு வாயின்மறுத்தது.

(இ - ள்) ஒலிபுனலையுடைத்தாய்ப் பிறவோசையானும் ஒல்லென்றொலிக்கும் ஊரற்கு என்னெஞ்சம் நெகிழாது வலிதாயிற்று ; வாட்கண்ணாய்! புதல்வன் தன்னை விரும்பிநிற்பக் கண்டுவைத்துப் பாகனை நில்லென்று சொல்லாதே என் புதல்வனையும் பின்பாராதே தேரூர்ந்து பரத்தையர் மனைக்குச் சென்றது கண்டு எ-று. (அ)

உகூ ஒல்லென் னொலிபுன லூரன் வியன்மார்பம்
புல்லேன்யா னென்பேன் புனையிழையாய்—புல்லே
னெனக்கோர் குறிப்பு முடையனோ வூரன்
றனக்கேவல் செய்தொழுகு வேன்.

ஆற்றாமையே வாயிலாகப்புக்க தலைமகன் புணர்ந்து
நீங்கியபின்பு சென்ற தோழிக்குத்
தலைமகள் சொல்லியது.

(இ - ள்) ஒலிபுனலையுடைத்தாய்ப் பிறவோசையான் ஒல்லென்னும் ஊரனுடைய அகன்ற மார்பத்தினை யான் முயங்கேன் என்றுசொல்லி அவனைக் காணாதமுன் நினைத்திருப்பேன் ; புனையிழையாய்! அவனைக்கண்டபின் முயங்கேனுதற்கு எனக்கெனப் பெற்ற கருமம் உடையேனோ? ஊரன்றனக்கு ஏவல் செய்து ஒழுகுவேன் ஆதலான் எ-று. (கூ)

௩௰ குளிரும் பருவத்தே யாயினுந் தென்றல்
வளியெறியின் மெய்யிற் கினிதா—மொளியிழா
யூடி யிருப்பினு மூர னறுமேனி
கூட லினிதா மெனக்கு.

இதுவுமது.

(இ - ள்) குளிருங் காலத்தேயாயினும் தென்றற்காற்று எறியின் உடம்பிற்கு இனிதாம்; அதுபோல, ஒளியிழாய்! யான் அவனைப் புலந்திருந்தேன் ஆயினும், அவ்வூரன் அழகிய நாற்றத்தினையுடைய மேனியைக்கூடுதல் இனிதாம் எனக்கு எ-று. (கo)

மருதம் முடிந்தது.

---

## ச.—பாலை.

௩க * உதிரந் துவரிய வேங்கை யுகிர்போ
லெதிரி முருக்கரும்ப வீர்ந்தண்கார் நீங்க—வெதிருநர்க்
கின்பம் பயந்த விளவேனில் காண்டொறுந்
துன்பங் கலந்தழியு நெஞ்சு.

பருவங்கண்டழிந்த தலைமகள்
தோழிக்குச் சொல்லியது.

(இ - ள்) உதிரத்தையளைந்து துவரிய புலியினது உகிர்போலப் பருவத்தையெதிர்ந்து முருக்குக்கள் அரும்ப, ஈர்ந்தண் முகில் நீங்கக், காதலர்

---

* இவ்வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தமைக்கிலக்கணம், "வெண்டளை விரவியு மாசிரியம் விரவியும், ஐஞ்சீ ரடியு முளவென மொழிப" என்னுந் தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரத்துப் பேராசிரியர், "வெண்டளை விரவியும், ஆசிரியம் விரவியும் என்றது என்னையெனின்—அவ்வைஞ்சீரடி வெண்பாவோடு விராயும், ஆசிரியப்பாவோடு விராயும் வரும் என்றவாறு" எனவும், "கண்டகம் பற்றிக் கடக மணிதுளங்க, வொண்செங் குருதியி னோடு கிடப்பதே—கெண்டிக், கெழுதகை யில்லேன் கிடந்தூடப் பன்ஞள், எழுதகண் ணீர் துடைத்த கை" என்னும் வெண்பாவினுள் இரண்டாமடி ஐஞ்சீரான் வந்தது" எனவும் கூறியவாற்றானும், நச்சினார்க்கினியர், "வெண்பாவோடுங் கலிப்பாவோடும் விராயும், ஆசிரியப்பாவோடு விராயும் வரும் ஐஞ்சீரடிகளுமுள என்று கூறுவர் புலவர் எ-று." எனவும், "கண்டகம் பற்றி..............கை" "கிடங்கிற் கிடங்கிற் கிடந்த கயலைத், தடங்கட்டடங்கட்டளிரியல்கொள்ளாள்—கிடங்கில், வளையாற் பொலிந்தகை வையெயிற்றுச் செவ்வா, யிளையாடன் கண்ணொக்கு மென்று' இவற்றுள் இரண்டாமடி ஐஞ்சீரடி வந்த வாறுகாண்க" எனவும் கூறியவாற்றானும் உணர்க.

தம்மூட்டலைப்பட்டார்க்கு இன்பத்தைக் கொடுத்த இளவேனிலைக் காணுந் தோறுந் துன்பத்தோடு புணர்ந்து அழியாநின்றது என்னெஞ்சு. எ-று. (௧)

௩௨ விலங்கல் விளங்கிழாய் செல்வாரோ வல்ல
ரழற்பட் டசைந்த பிடியை—யெழிற்களிறு
கற்சுனைச் சேற்றிடைச் சின்னீரைக் கையாற்கொண்
டுச்சி யொழுக்குஞ் சுரம்.

தலைமகனது பிரிவுக்குறிப்பறிந்தாற்றாளாய
தலைமகளைத் தோழி ஆற்றுவித்தது.

(இ - ள்) அவர் செலவினை விலங்காதொழிக ; விளங்கிய இழையினையுடையாய் ! செல்லமாட்டார் ; காட்டழற்பட்டு வருந்திய பிடியினை அதனது எழிற்களிறு கற்சுனைச் சேற்றிடையுள்ள சின்னீரைத் தன் கையாலே கொண்டு அப்பிடியின் உச்சியின்கண் ஒழுக்குஞ் சுரத்தை எ-று. (௨)

௩௩ பாவையும் பந்தும் பவளவாய்ப் பைங்கிளியு
மாயமு மொன்று மிவைநினையாள்—பால்போலு
மாய்ந்த மொழியினாள் செல்லுங்கொல் காதலன்பின்
காய்ந்து கதிர்தெறூஉங் காடு.

மகட்போக்கியநற்றாய் கவன்று சொல்லியது.

(இ - ள்) பாவையையும், பந்தையும், பவளம்போன்ற வாயையுடைய பசுங்கிளியையும், ஆயத்தையும் இவற்றை ஒன்றும் நினையாளாய்ப், பால் போலும் சின்மொழியையுடையாள், தன் காதலன்பின் செல்லுங்கொல்லோ ! கனன்று பகலோன் சுடுகின்ற காட்டினை எ-று. (௩)

௩௪ கோட்டமை வல்விற் கொலைபிரியா வன்கண்ணா
ராட்டிவிட் டாறலைக்கு மத்தம் பலநீந்தி
வேட்ட முனைவயிற் சேறிரோ வையநீர்
வாட்டடங்கண் மாதரை நீத்து.

தோழி தலைமகனைச் செலவழுங்கியது.

(இ - ள்) கோட்டுகின்ற மூங்கில்விற்கொலையை இடையறுத வன்கண்மையையுடையார் ஆறலைத்து ஓட்டி வழியின்கண் நின்று அலைக்குங் கடறுகள் பலவற்றையு நீந்தி, வேட்டினையுடைய வெம்முனையின்கட் செல்வீரோ? ஐய ! நீர் வாட்டடங்கண் மாதரைத் துறந்து எ-று. (௪)

௩௫ கொடுவி லெயினர்தங் கொல்படையால் வீழ்ந்த
தடியிணை மாந்திய பேஎய்—நடுகல்
விரிநிழற் கண்படுக்கும் வெங்கான மென்பர்
பொருள்புரிந்தார் போய சுரம்.

தலைமகன் பொருள்வயிற் பிரிந்த காலத்து ஆற்றாளெனக் கவன்ற தோழிக்குத் தலைமகள் ஆற்றுவலென்பதுபட மொழிந்தது.

(இ-ள்) கோட்டிய வில்லினையுடைய வேடுவர் தங்கொல்படையானே வீழ்ந்த தசையையும் நிணத்தையையுந் தின்ற பேய்கள், போரின்கட்பட்டார் பெயர்பொறித்து நட்ட கல்லின் விரிநிழற்றுயிலும் வெய்ய காடென்று சொல்லுவர், தோழி! பொருளை விரும்பிப் போகிய கடறு எ-று. (௫)

௩௬ கடிதோடிய வெண்டேரை நீரமென றெண்ணிப்
பிடியோ டொருங்கோடிக் தாம் பிணங்கி வீழும்
வெடியோடும் வெங்கானஞ் சேவார்கொ னல்லாய்
தொடியோடி வீழ்ந்த துறந்து.

பிரிவுணர்த்திய தோழிக்குத் தலைமகள் உடன்படாது சொல்லியது.

(இ-ள்) விரைந்தோடிய பேய்த்தேரை நீரமென்று கருதிக் களிறுகள் பிடியோடே கூட ஓடித் தாளயர்ந்து பிணங்கிவீழும் பிளவோடிய வெங்கானத்தைச் சென்று நங்காதலர் சேவார்கொல்லோ? நல்லாய்! நங்கையிற் றொடியோடிவீழத் துறந்து எ-று. (௬)

௩௭ தோழியர் சூழத் துறைமுன்றி லாடுங்கால்
வீழ்பவள் போலத் தளருங்கா—றாழாது
கல்லத ரத்தத்துக் காதலன் பின்போதல்
வல்லவோ மாதர் நடை.

உடன்போய தலைமகட்கு நற்றாய் கவன்றுரைத்தது.

(இ-ள்) தோழியர் சூழ முற்றத்துத் துறையின் விளையாடும்பொழுதும் வீழ்பவளேபோலத் தளரும் கால்கள் ஓய்ந்து தாழாதே கல்வழியையுடைய அத்தத்துத் தன் கொழுநன்பின் போதலைவல்லவோ? காதலையுடையாள் நடை எ-று. (௭)

௫௮ சுனைவாய்ச் சிறுநீரை யெய்தாதென் றெண்ணிப்
பிணைமா னினிதுண்ண வேண்டிக் — கலைமாத்தன்
கள்ளத்தி னூச்சுஞ் சுரமென்பர் காதல
ருள்ளம் படர்ந்த நெறி.

பிரிவின்கண் ஆற்றாளாயின தலைமகளைத்
தோழியாற்றுவித்தது.

(இ - ள்) சுனையின்கண் உள்ள சிறியநீரைப் பிணைக்கு உண்ண நிரம் பாது என்று எண்ணிப் பிணைமான் இனிதாக உண்ணவேண்டிக், கலைமா னியமாத் தனது கள்ளத்தினாலே பொய்யே உறுஞ்சும் சுரமென்று சொல் லுவர்; நங்காதலர் தம் அகத்தினாற் போயினநெறி எ-று. (அ)

௫௯ மடவைகா ணன்னெஞ்சே மாண்பொரு ணசைபாட் டோடாப்
புடைபெயர் போழ்தத்து மாற்றாள் — படர்கூர்ந்து
விம்மி யுயிர்க்கும் விளங்கிழையா ளாற்றுமோ,
நம்மிற் பிரிந்த விடத்து.

தலைமகன் பொருள்வலித்த நெஞ்சிற்குச்
சொல்லிச் செலவழுங்கியது.

(இ - ள்) அறியாய்காண், மிக்கநெஞ்சே! மாட்சிமைப்பட்ட பொருளின் மாட்டுச் சேறலான், முயங்கி நாம் புடைபெயருங்காலத்தும் ஆற்றமாட்டா ளாய்த் துன்பமிக்கு விம்மி உயிராநின்ற விளங்கிழையாள் ஆற்றவல்லளோ? நம்மை நீங்கியவிடத்து எ-று. (௯)

௬௰ இன்றல்க ணீர்ம்பணையு ளிருங்கோதை தோடுணையா
நன்கு வதிந்தனை நன்னெஞ்சே நாளைநாங்
குன்றத ரத்த மிறந்து தமியமா
யென்கொலோ சேக்கு மிடம்.

இதுவுமது.

(இ - ள்) இன்று இவ்விடைக்கட் குளிர்ந்த சேக்கையுள் ஈர்ங்கோதையையு டையாள் தோள் நமக்குத் துணையாக மிகவுந்தங்கினை; நன்னெஞ்சே! இவ் வின்பத்தைவிட்டு நாளையிரவின்கண் யாம் மலைவழியேயிறந்து தமியேமாய் எவ்விடந் தங்குதும்? எ-று. (௰)

பாலை முடிந்தது.

---

# ௫.—நெய்தல்.

௪௧ தெண்கடற் சேர்ப்பன் பிரியப் புலம்படைந்த
தொண்டொடிக்கண் டுஞ்சுக வொள்ளிழாய்—நண்படைந்த
சேவலுந் தன்னருகிற் சேக்குமா லென்கொலோ
பூந்தலை யன்றில் புலம்பு.

அல்ல குறிப்பட்ட தலைமகற்குச் சொல்லுவாளாய்த்
தோழி தலைமகட்குச் சொல்லியது.

(இ-ள்) தெண்கடற் சேர்ப்பன் பிரிதலாற் றனிமையையடைந்த நின்னுடைய ஒள்ளியகண் துயில்கொள்க; ஒள்ளிய இழைகளையுடையாய்! நண்பினையடைந்த சேவலும் தன்னருகே உறையாநின்றதாகலான், என்னை கொல்லோ? செம்பூப்போலுஞ் சூட்டினையுடைய பெடையன்றில் புலம்புதல் எ-று. (௧)

௪௨ கொடுந்தா ளலவ குறையா மிரப்பேம்
ஒடுங்கா வொலிகடற் சேர்ப்பன்—நெடுந்தேர்
கடந்த வழியையெங் கண்ணாரக் காணா
நடந்து சிதையாதி நீ.

காமமிக்க கழிபடர்கிளவி.

(இ-ள்) கோடியிருந்த தாளினையுடைய அலவனே! ஒரு காரியம் நின்னை யிரப்பேம்; ஒலியாநின்ற அடங்காத கடற்சேர்ப்பன் நெடுந்தேர் போயின வழியை எம்முடைய கண் நிரம்பக்காணும்வகை அதன்மேல் நடந்து அழியாதொழிவாயாக எ-று. (௨)

௪௩ *பொரிப்புறப் பல்லிச் சினையன்ற புன்னை
வரிப்புற வார்மணன்மே லேறித்—தெரிப்புறத்
தாழ்கடற் றண்சேர்ப்பன் றாரகல நல்குமே
லாழியாற் காணேமோ யாம.

இதுவுமது.

* இதனைப், "பிரிந்த வழிக்கலங்கினும்" என்பதற்குதாரணங்காட்டுவர் நச்சினார்க்கினியர் (தொல், பொரு, கள, ௨௰.)

(இ-ள்) பொரிந்த புறத்தையுடைய பல்லிமுட்டைபோல அரும்பினையீன்ற புன்னைப்பூக்கிளையுடைய வரிப்பட்ட புறத்தினையுடைய உயர்ந்த மணற்குன்றின்மேல் ஏறியிருந்து, தெளிவுறத் தாழ்கடற் றண்சேர்ப்பனுடைய தாரகலத்தை நமக்கு நல்குமாயிற், * கூடல் இழைப்பாற் காண்பேம் யாம் எ-று. (௯)

௪௪ கொண்கன் பிரிந்த குளிர்பூம் பொழினோக்கி
யுண்கண் சிவப்ப வழுதே னொளிமுகங்
கண்டன்னை யெவ்வம்யா தென்னக் கடல்வந்தென்
வண்டல் சிதைத்ததென் றேன்.

பகற்குறிச்சட் டலைமகன் சிறைப்புறத்தானாகப் படைத்து
மொழிகிளவியாற் றோழி தலைமகட்குச் சொல்லுவா
ளாய்ச் செறிப்பறிவுறீஇ வரைவுகடாயது.

(இ-ள்) நம்மை இற்செறிக்கையாற் கொண்கன் பிரிந்த குளிர்பூம்பொழிலை நோக்கி உண்கண் சிவப்ப அழுத என்னுடைய ஒளி முகத்தைக்கண்டு அன்னை நினக்கு வந்த இடும்பை யாது என்னக் கடல்வந்து என்னுடைய விளையாட்டுச் சிற்றிலைச் சிதைத்தது என்று சொன்னேன்; எம்பெருமாட்டி! எ-று (௧)

௪௫ ஈர்ந்தண் பொழிலு ளிருங்கழித் தண்சேர்ப்பன்
சேர்ந்தென் செறிவளைத்தோள் பற்றித் தெளித்தமை
மாந்தளிர் மேனியாய் மன்ற விடுவனவோ
பூந்தண் பொழிலுட் குருகு.

தலைமகனைத் தோழி வரைவுகடாதற் பொருட்டுத்
தலைமகள் வரைவுவேட்டுச் சொல்லியது.

---

* இதனைக், "கூடலாவது வட்டமாகக் கோட்டைக்கீறி அதுக்குள்ளே சுழிசுழியாகச் சுற்றுஞ்சுழித்து இவ்விரண்டு சுழியாகக் கூட்டினால், இரட்டைப்பட்டாற் கூடுகை; ஒற்றைப்பட்டாற் கூடாமையென்று ஸங்கேதம்" என நாச்சியார் திருமொழி உரையினும், (கூடற்றிருப்பதிகம்) "மணற்குன்றினீத்தகன் றார் வருகென், றூழிதிருத்திச் சுழிக்கணக்கோதி" எனத் திருச்சிற்றம்பலக்கோவையினும் (௧௮௬) "வளைத்துக்கிடந்த வரிமணற்கூடலும்" என அம்பிகாபதிகோவையினும் (௯௨௨) வருவனவற்றான் உணர்க.

(இ-ள்) குளிர்ந்த தண்பொழிலின்கண் இருந்து பெரிய கழியையுடைய தண்சேர்ப்பன் புணர்ந்து என் செறிவளைத்தோள்பற்றி என்னைத் தெளிவித்த வஞ்சினத்தை, மாந்தளிர்மேனியாய்! பொய்யாக மறந்துவிட வல்லவோ? அப்பூந்தண்பொழிலுள் வாழுங் குருகுகள் எ-று. (௫)

௪௬ ஓதந் தொகுத்த வொளிர்கடற் றண்முத்தம்
பேதை மடவார்தம் வண்டல் விளக்கயருங்
கானலஞ் சேர்ப்ப தகுவதோ வென்றோழி
தோணலந் தோற்பித்த னீ.

பகற்குறிவந்து புணர்ந்து நீங்குந் தலைமகனைக்
கண்ணுற்றுநின்ற தோழி வரைவுகடாயது.

(இ-ள்) ஓதம் எறிந்து திரட்டிய ஒளிக்கடற் றண்முத்தங்களைப் பேதைமையுடைய மடவார் தம்வண்டல் இழைப்பதற்கு விளக்காக விருப்பஞ்செய்யுங் கானலஞ்சேர்ப்பனே! நினக்குத் தகுவதொன்றோ? என்னுடைய தோழியுடைய தோள்களின் நலத்தை நீ தொலைவித்தல் எ-று. (௬)

௪௭ பெருங்கட லுள்கலங்க நுள்வலை வீசி
யொருங்குடனே நுளையர் தந்த கொழுமீ
னுணங்கல்புள் ளோப்பு மொளியிழை மாத
ரணங்காகு மாற்ற லெமக்கு.

தோழிக்குத் தலைமகன் சொல்லியது.
தோழற்குச் சொல்லியதூஉமாம்.

(இ-ள்) பெரிய கடலின்கண் உள்ளனவெல்லாங் கலங்க நுண்ணிய வலைகளாலே வீசி ஒருங்குடனே நுளையன்மார் கொண்டுவந்த கொழுத்த மீன் உணங்கல்களைக் கவரும் புட்களை ஓப்புகின்ற ஒளியிழைமாதர் மிகவும் எமக்கு வருத்துந் தெய்வமாம் எ-று. (௭)

௪௮ எக்க ரிடுமணன்மே லோதந் தரவந்த
சித்தில நின்றிமைக்கு நீள்கழித் தண்சேர்ப்ப
மிக்க மிகுபுகழ் தாங்குபவோ தற்சேர்ந்தா
ரொற்கங் கடைப்பிடியா தார்.

தலைமகனைத் தோழி வரைவுகடாயது.

(இ - ள்) திரைவந்து இட்ட இளமணல்மேல் ஓதம் தரவந்த முத்தங்கள் நின்று விளங்காநின்ற நீண்ட கழியினையுடைய தண்சேர்ப்பனே! உலகத்தின்கண் விளங்கிய அலருரையைத் தாங்கவல்லமோ? தம்மைச் சேர்ந்தாருடைய தளர்ச்சியைக் கடைப்பிடித்துத் தீராதார் எ-று. (அ)

சகூ * கொடுமுண் மடற்றாழைக் கூம்பவிழ்ந்த வொண்பூ
விடையு ளிழுதொப்பத் தோன்றிப்—புடையெலாந்
தெய்வங் கமழுந் தெளிகடற் றண்சேர்ப்பன்
செய்தான் றெளியாக் குறி.

அல்லகுறிப்பட்டுப் போய்த்தமை அறியத் தலைமகன்
சிறைப்புறத்தானாகத் தோழி சொல்லியது.

(இ - ள்) கொடிய முள்ளையுடைய மடற்றாழையினது மொட்டவிழ்ந்த ஒள்ளிய பூக்கள் நடுவுள்ள சோற்றின் வெண்ணெய்போலத் தோன்றி மருங்கெல்லாம் தெய்வமணம்போலக் கமழாநின்ற தெளிந்த கடற்றண்சேர்ப்பன் நம்மாற் றெளிக்கப்படாத குறியைச் செய்தான்; அதனால் அல்லகுறிப் பட்டேம் எ-று. (கூ)

ரு௦ ‡ அணிகடற் றண்சேர்ப்பன் றேர்ப்பரிமாப் பூண்ட
மணியரவ மென்றெழுந்து போந்தேன்—கனிவிரும்பும்
புள்ளரவங் கேட்டுப் பெயர்ந்தே னொளியிழா
யுள்ளுருகு நெஞ்சினே னாய்.

இதுவுமது.

(இ - ள்) நிலத்தைச் சூழ்ந்த கடற்றண்சேர்ப்பன் தேர்பூண்ட பரிமா அணிந்த மணியரவம் என்று கருதிச் சென்றேன்; கனிகளை விரும்புகின்ற புள்ளரவங்களைக் கேட்டு மணியரவம் அன்று என்று போந்தேன்; ஒளியிழாய்! உள்ளுருகும் நெஞ்சினேனாகி எ-று. (க௦)

நெய்தல் முடிந்தது.

ஐந்திணையைம்பது முற்றிற்று.

---

* இது "பாங்கி தலைமகன் தீங்கெடுத்தியம்பியது" எனக் கொள்வர் அகப்பொருள் விளக்க உரைகாரர். (களவியல், சுச.)

‡ இஃது "தான் குறிமருண்மை தலைவி பாங்கிக்கு உணர்த்தியது" எனக்கொள்வர் அகப்பொருள் விளக்க உரைகாரர் (ஷை ஷை.)

# ஐந்திணையைம்பது.

செய்யுண் முதற்குறிப்பு அகராதி.

---

வதிதல் - தங்குதல், ௪௦.
வதுவை - பதுமணம், ௨௫.
வம்பு - நிலையின்மை, ௯.
வயங்குதல் - விளங்குதல், ௯.
வரை - குவடு, ௧௨.
வல்ணேரும் - எழாநின்றது, ௬.
வல்லென்றல் - வலிதாதல், ௨௮.
வளி - காற்று, ௫.
வள்வார்முரசு - தோலார்ந்தமுரசு, ௩.
வாய்த்து - வாய்க்கச்செய்து, ௧௪.
வார் - உயர்ந்த, ௪௩.
வானம் - முகில், ௨.
வியன் - அகன்ற, ௨௧.
விலங்கல் - விலங்காதொழிக, ௩௨.
விலையொரீஇ - விலையைவேறுபடுத்து, ௨௪.
வீழ்தருதல் - பெய்யாநிற்றல், ௫.
வெடி - பிளவு, ௩௯.
வெண்டேர் - பேய்த்தேர், ௩௬.
வெறி - விரை, ௨௦.